# கல்கி

KALKI
13.5.2001
ரூ. 5.00

## சிதம்பரம் சொல்றதைக் கேளுங்க...





## மாண்புமிகு மெமரி!

புதிய 'நினைவாற்றல் தொடர்' ஆரம்பம்...

# Anywhere. Anytime.



- 91% on-time performance
- Convenient connections
- Extensive network with our airline partners

एअर-इंडिया AIR-INDIA

Contact Air-India or your travel agent for details. Visit our website at www.airindia.com







2001 மே 13
விஷு சித்திரை 30
மலர் : 59
இதழ் : 41


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வோட்டுப் போடுங்கள்; இருளை விரட்டுங்கள்!

மே பத்தாம் தேதி தமிழக மக்கள் வோட்டுப் போடும்போது, தங்கள் கருத்தைப் பதிவு செய்வதுடன் தமிழ்நாட்டின் எதிர்காலத்தை - அதாவது தங்கள் எதிர்காலத்தை நிர்ணயிக்கப் போகிறார்கள்.

கடந்த ஐந்தாண்டு கால தி.மு.க ஆட்சியானது சராசரி தமிழனின் வாழ்க்கையை பிரமிக்கும்படி மாற்றி அமைத்துவிடவில்லைதான். ஆனால், மாநிலத்தின் தொழில், விவசாயத் துறைகளில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவிலேயே, தொழில் வளர்ச்சியில் முன் நிற்கும் மாநிலமாக விளங்கி வருகிறது தமிழகம்.

இந்த முன்னேற்றமும் வளர்ச்சியும் தொடர்ந்து நீடிக்குமானால், எதிர்காலத்தில் சராசரி தமிழனின் வாழ்க்கையில் பிரமிக்கத்தக்க மேம்பாடுகள் ஏற்படுவது நிச்சயம்.

'கடந்த ஐந்தாண்டு கால முன்னேற்றம் தொடரும்படி தமிழர்கள் வாக்களிக்கப் போகிறார்களா? அல்லது மறுபடி தேக்க நிலையை உருவாக்கப் போகிறார்களா?' என்பதுதான் மே பத்தாம் தேதி தீர்மானிக்கப்படவிருக்கிறது.

அ.தி.மு.க கூட்டணி ஆட்சிக்கு வந்தால் தமிழகம் முன்னேறாதா? என்ற கேள்வி எழுகிறது. கடந்த கால அனுபவம் வேறுவிதமாக இருந்திருக்கிறது. '91 முதல் '96 வரையிலான காலகட்டத்தில், அ.தி.மு.க ஆட்சியின்போது தமிழகத்தில் நடந்த அக்கிரமங்கள் துர்ச் சொப்பனமாக இன்னமும் மிரட்டுகின்றன.




மேலும், அ.தி.மு.க கூட்டணி, முதலமைச்சராக முன்னிறுத்திய ஜெயலலிதா இத் தேர்தலில் போட்டியிட முடியாது என்பது உறுதியாகிவிட்டது.

தம்முடைய வேட்புமனு நிராகரிக்கப்பட்ட பிறகும் எதுவுமே நிகழாதது போல் 'நான்தான் முதல்வராவேன்' என்று அவர் வாய்க்கு வாய் சொல்லிக்கொண்டிருப்பது கேலிக்கூத்துதான்.

அ.தி.மு.க கூட்டணிக்குப் பெரும்பான்மை கிடைத்தால் என்ன ஆகும் என்று சற்று சிந்தித்துப் பார்ப்பது நல்லது. தேர்தலில் போட்டியிட முடியாத ஜெயலலிதாவுக்கு, ஆளுனர் பதவிப் பிரமாணம் செய்து வைப்பதே சந்தேகம். அப்படியே முதல்வரானாலும் ஆறு மாதங்களுக்கு மேல் அப் பதவியை அவர் வகிக்க முடியாது. மீண்டும் தேர்தலைச் சந்திக்கவும் முடியாது.

'ஜெயலலிதாதான் முதல்வர்' என்று இன்று ஒத்து ஊதுகிற கூட்டணி கட்சியினர், அ.தி.மு.க கூட்டணி வெற்றி பெறும் பட்சத்தில் வேறு பல்லவிக்கு மாறி விடுவார்கள்.

முதல்வர் பதவியை வகிக்க முடியாத ஜெயலலிதா தமது போயஸ் குடும்ப வாரிசான தினகரனையோ வேறு நபரையோ அப்பதவிக்குத் தேர்வு செய்து ரிமோட்டில் ஆட்சி நடத்த நினைத்தால், அதை நிச்சயமாகக் கூட்டணி கட்சித் தலைவர்கள் ஏற்கப் போவதில்லை. அந்த முக்கிய பதவிக்குத் தாம்தான் உரியவர் என்று ஒவ்வொரு கூட்டணி கட்சித் தலைவரும் உரிமை கொண்டாட ஆரம்பிப்பார். தேர்தல் முடியும்வரை ஒருங்கிணைந்திருக்கும் அ.தி.மு.க கூட்டணி, தேர்தலுக்குப் பிறகு கலகலத்துப் போய், செறிவு இழந்து, ஆட்டம் காண ஆரம்பிக்கும். மூப்பனார் இருக்கையில், ராமதாஸ் இருக்கையில் அக்கட்சியினர் தினகரனை முதல்வராக ஏற்றுக் கொள்வார்களா? அல்லது கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்டுகள்தான் அவரை ஏற்பார்களா...?

ஜெயலலிதா தேர்தலில் நிற்க அனுமதியில்லை என்ற போதிலும், கூட்டணி கட்சியினர் அவரை ஆதரிப்பதுடன் அவரே அடுத்த முதல்வர் என்று முழங்குவதன் உள்நோக்கம் என்ன என்பதை வாக்காளர்கள் யோசிக்க வேண்டும்.

ஆக மொத்தத்தில், அ.தி.மு.க கூட்டணிக்கு வழங்கப்படும் வாக்கு, ஸ்திரமற்ற ஆட்சிக்கு வழங்கப்படுவதாகவே அமையும்.

கூட்டணி கட்சியினரின் அதிருப்தியால் ஆட்சிக்கு சதா ஆபத்து ஏற்படும் என்பதால் நிர்வாகமும் முன்னேற்றமும் தேங்கிப் போய் விடும். லஞ்ச-ஊழல் பெருக இது வாய்ப்பான




நிலைக்களனாக விளங்கும்.

'கேரளாவில் பாலகிருஷ்ணன் பிள்ளை தேர்தலில் போட்டியிட அனுமதிக்கப்பட்டிருக்கும்போது என் வாய்ப்பு மட்டும் பறிக்கப்பட்டிருக்கிறது. இது கருணாநிதியின் திட்டமிட்ட சதி' என்பது ஜெயலலிதாவின் ஒரு குற்றச்சாட்டு.

'கருணாநிதி, தமது மகனை அடுத்த முதல்வராக்கும் திட்டத்தில் என் வெற்றி வாய்ப்புகளைத் திட்டமிட்டுக் குலைக்கிறார்' என்பது அவருடைய இரண்டாவது குற்றச்சாட்டு.

இது தவிரவும் கருணாநிதி ஆட்சியில் நடந்த தவறுகளை தினம் ஒன்றாக வெளியிடுவதுதான் ஜெயலலிதாவின் தேர்தல் பிரசாரத் திட்டம்!

பாலகிருஷ்ணன் பிள்ளை விவகாரத்தில் அவர் எம்.பி என்பதால் சட்டம் வேறுவிதமாகச் செயல்படுகிறது. நியாயமற்ற அந்த சட்டத்தை நாடாளுமன்றம்தான் மாற்றியமைக்க வேண்டும். அதை விடுத்து தேர்தல் கமிஷனைக் குறை கூறுவதோ கருணாநிதி மீது வீண் பழி சுமத்துவதோ பொய்ப் பிரசாரமன்றி வேறில்லை.

ஸ்டாலினை கருணாநிதி முதல்வராக முன்னிறுத்த தி.மு.கவின் உட்கட்சி ஜனநாயக சம்மதம்தான் முக்கியமே தவிர, ஜெயலலிதாவுடைய அங்கீகாரம் அல்ல. தி.மு.க.வில் இரண்டாம் நிலை தலைவர்கள பலர் தயார் நிலையில் இருப்பதைப் போல அ.தி.மு.க.வில் இல்லை. 'ஜெ' அப்படி யாரையும் வளரவிடவும் மாட்டார்.

கருணாநிதி ஆட்சியில் கண்ட கற்பனையான குற்றங்குறைகளை ஜெ. தினமொன்றாகப் பட்டியலிட்டுத் தேர்தல்வரை பிரசாரம் செய்யலாம். ஆனால், ஜெ. ஆட்சியில் நடந்தவை - பகிரங்கமாகத் திட்டமிடப்பட்ட சுயநலச் சுரண்டல்கள் - இவற்றைப் பட்டியலிட ஒருவருக்கு ஓர் ஆயுட்காலம் போதாது!

இதையெல்லாம் நன்கு யோசித்து, வாக்காளர்கள் தங்கள் வாக்குச் சீட்டைப் பயன்படுத்த வேண்டும். ஜனநாயகத்தில் மக்களின் தகுதிக்கு ஏற்பத்தான் ஆட்சி அமையும். ஒளிமயமான எதிர்காலத்துக்குத் தாங்கள் தகுதி பெற்றவர்கள் என்பதை இருளை விரட்டி அடிப்பதன் மூலம் தமிழர்கள் நிரூபிக்கட்டும். ○

# “விலைவாசி ஏறினாலும் விட்டுக் கொடுக்க முடியுமா..?”

“நெல்லுக்குச் சரியா விலை கெடைக்கலை என்பது வாஸ்தவம்தான் ஐயா_ ஒரு மூட்டை யூரியா விக்கிற விலைகூட நெல்லுக்குக் கிடைக்கல என்பது உண்மைதாங்க. ஆனால், அதுக்கு நல்லாட்சி நடத்தின கலைஞரை விட்டுத் தர முடியுமா?'' என்று நம்மைக் கேட்டார் விவசாயி திருநாவுக்கரசு ரெட்டியார்.

இவரைப் போன்ற உறுதியான ஆதரவாளர்களை நம்பித்தான் நான்காவது முறையாகப் பொன்னேரி தொகுதியில் போட்டியிடுகிறார் பால்வளத்துறை அமைச்சர் சுந்தரம்.

அ.இ.அ.தி.மு.க. கூட்டணியில், பொன்னேரி தொகுதி, வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. தங்களுக்கு அடித்தளம் இல்லாத அத் தொகுதியை வேண்டா வெறுப்பாக ஜெயலலிதாவிடம் பெற்ற கம்யூனிஸ்டுகள், தொழிற்சங்கத் தலைவர் ஏ.எஸ். கண்ணன் என்பவரைக் களத்தில் இறக்கியுள்ளார்கள். இவர் அம்பத்தூர்வாசி. முழுக்க, முழுக்க அ.இ.அ.தி.மு.க.வை மட்டும் நம்பியே களத்தில் இறங்கியிருக்கிறார் கண்ணன். ம.தி.மு.க.வும் தன் பங்குக்கு வோட்டுகளைப் பிரிக்க வேட்பாளரை நிறுத்தியிருக்கிறது.



• அமைச்சர் சுந்தரம்





• ரெட்டியார்

அமைச்சர் சுந்தரத்தின் மீது பெரிய அளவிலான குற்றச்சாட்டுக்கள் ஏதும் இல்லை. “அணுகுவதற்கு எளிதானவர். நாப்பாளையம், காரனோடை பகுதிகளில் பாலங்கள் கட்டிக் கொடுத்தது; பழவேற்காடு பகுதியில் பாலம் கட்டும் வேலை துவங்கியிருப்பது; மீனவர் குப்பம் உள்ள பகுதிகளில் பள்ளிக்கூட கட்டடங்கள், கிராமங்களுக்கு மினி பஸ், தார் சாலைகள், பிரச்சனையில்லாமல் பட்டா என்று பல நல்ல பணிகளைச் செய்திருக்கிறார் அமைச்சர்.

“இருந்தாலும், இந்த முறை, அமைச்சர் கடுமையாகப் போராட வேண்டியிருக்கும். காரணம், ஏழை எளியோர்களிடையே உள்ள வறுமை,

# பொன்னேரி :

வேலையில்லாத் திண்டாட்டம், விலைவாசி உயர்வு (மூன்று வருடங்களுக்கு முன்னர் பத்து லிட்டர் மண்ணெண்ணெய், இரு பத்தியேழு ரூபாய்தான். இன்று, எண் பத்தாறு ரூபாய்...) காரணமாக மக்கள் வெறுப்புடன் இருக்கிறார்கள்..." என்கிறார் பூதூரைச் சேர்ந்த புகழேந்தி.

இந்தப் பகுதியில் 'புரட்சிபாரதம்', எனும் இயக்கம் நடத்தி வரும் பூவை மூர்த்தியின் தோழரும் களத்தில் உள்ளார். கம்யூனிஸ்ட் வேட்பாளருக்குச் செல்ல வேண்டிய வோட்டுக்களை இவர் பிரிப்பார் என்று சொல்கிறார்கள்.

"போனமுறை வென்றபின் இந்தப் பகுதியில் பல கிராமங்களில் அமைச்சர் எட்டிக்கூட பார்க்கவில்லை. கிருதலாபுரம், திருநிலை ஆகிய கிராமங்களில் மக்கள் அமைச்சரைக் கிராமத்திற்குள்கூட விட வில்லை. "இந்தமுறை உயர்ஜாதி மக்கள் தவிர வேறு யாரும் அவருக்கு வோட்டு போட மாட்டார்கள்" என்கிறார் 'புரட்சி பாரதம்' பலராமன்.

ஆனால் தி.மு.க. கூட்டணிக் கட்சி களான புதிய நீதிக் கட்சி, மற்றும், கண் ணப்பனின் மக்கள் தமிழ்தேசம் ஆதர வாளர்கள் கணிசமாக இருக்கிறார்கள். காலனிப் பகுதிகளில் திருமாவளவனின் செல்வாக்கு தெரிகிறது.

பொன்னேரி தொகுதி முழுக்க, சுவர் விளம்பரங்கள் மூலம், தன்னைத் தவிர வேறு யாரும் களத்தில் இல்லை என்பது போன்ற நிலையை உருவாக்கியிருக்கிறார் அமைச்சர்.

அ.இ.அ.தி.மு.க.வில் உள்ள கோஷ்டி பூசல் காரணமாக சங்கடங்களைச் சந்திக்கிறார் கண்ணன்.

பஞ்செட்டி, பண்டிக்காவனூர் பகுதிகளில் அமைச்சர் வோட்டு வேட்டை ஆடிக் கொண்டிருந்தபோது சந்தித்தோம். தி.மு.க. கூட்டணி கட்சித் தொண்டர் களிடையே நல்ல எழுச்சி. விட்டேத்தியாக ஒதுங்கி நிற்கும் மக்களிடையே வோட்டுக் கேட்டுக் கொண்டிருந்த அமைச்சர், "தொகுதியில் எல்லா கிராமங்களுக்கும் சென்று வந்து விட்டேன். நல்ல வரவேற்பு. முதல்முறையாக ஒட்டுமொத்த தலித் வாக்கு வங்கி, கழகத்துக்கு ஆதரவாகத் திரும்பி யிருக்கிறது" என்று பூரிப்புடன் சொன்னார்.

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

## கதைகளை அனுப்பியாச்சா?

மிகச் சிறந்த சிறுகதைகளை அதிக அளவில் வெளியிடும் கல்கி, ரசனைக்குரிய எழுத்துக் களை ஊக்குவிக்கும் கல்கி, தர மான எழுத்தாளர்களை உருவாக்கு வதன் பொருட்டு நடத்துவதுதான் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி.

உங்கள் எழுத்துத் திறனுக்கு வெளிச்சம் போட நல்லதொரு வாய்ப்பு!



இவ்வாண்டு போட் டிக்கான கதைகள் அனுப்ப கடைசித் தேதி ஜூன் 15 என்பதை நினைவூட்டுகிறோம்.

முழு விவரங்கள் சென்ற அல்லது அடுத்த இதழில்...

(—ஆர்)

## திடீர்ப்போட்டி — 6

## ஐஸ்ஸ்ஸ்ஸ்!

'காதல் ஒரு கேடா?' கட்டுரையைப் (36 ஆம் பக்கம்) படித்துவிட்டு கடுப்பாகிவிடப்போகும் டீன்-ஏஜ் ஹீரோக்களின் மனத்தைக் குளிர வைக்க, உங்களுக்கு அவர்களிடம் ரொம்பப் பிடித்த விஷயத்தை 'நச்'சென்று நாலே வரிகளில் 20.5.2001க்குள் எழுதி அனுப்புங்கள் பார்க்கலாம்!

பரிசு?... ஷ்யூர்!

# நாயன்மார் வரலாறு

## ஆசிரியர் : தமிழ்த் தென்றல் திரு.வி.க

**'நாயன்மார் வரலாறு' பெரியபுராணத்தைத் தழுவி,**
**மிக எளிய நடையில் எழுதப்பெற்றது.**

மூலத்தைப் படிப்போர்க்கு இந்நூல் பொழிப்புரை போல் நின்று பெருந்துணை செய்யும். மூலக் கருத்துக்கள் உள்ளவாறே உரைநடையில் வழங்கப் பெற்றுள்ளன.

பெரியபுராணத்தின் பழைய வரலாற்றுக்கு இப்படி ஒரு புதிய வடிவத்தினைக் கொடுக்க, தமிழர் சிந்தனைப் போக்கினை மாற்றியவரும், தம் எழுத்தாலும், பேச்சாலும், தமிழ் மொழிக்கு நலம்பல செய்தவருமான திரு.வி.க அவர்களால் மட்டுமே முடியும்.



**300 பக்கங்களுக்கு மேல்**
**அமைந்த இந்நூலின்**
**விலையோ ரூ.40 மட்டுமே !**




**தபாலில் பெற :** கடிதம் எழுதுக. நூலினை V.P.P. யில் அனுப்புகிறோம். தபால் செலவு ரூ.9 சேர்த்து மொத்தம் ரூ.49 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெற்றுக் கொள்க. M.O. அனுப்ப வேண்டாம்.

முகவரி: வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141, வடக்கு உஸ்மான் சாலை,
தியாகராய நகர், சென்னை - 17.
(பனகல் பார்க் அருகில்)
✆ : 8142377

**நேரில் பெற :** எமது அலுவலகத்தில் ரூ.40 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 9.30 மணி முதல் மாலை 7.30மணிவரை. ஞாயிறு விடுமுறை.



# குறையொன்றுமில்லை

"எவனை பகவான் விரும்புகிறானோ
அவனால் அவன் அடையப்படுகிறான்..."

- இந்த உபநிஷத் வாசகத்தை அடிக்கடி அனுபவித்துச் சொன்னவர் ஸ்ரீ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார். தமது மறைவின் மூலம் அவ்வாசகத்துக்கே வாழும் உதாரணமாகிவிட்டார்! குறையொன்றுமில்லாத நிறைவாழ்வை எய்திவிட்டார்!

மே நான்காம் தேதி நள்ளிரவு, யாரும் எதிர்பாராத விதமாக அவர் உயிர்நீத்தார் என்ற துயரச் செய்தி லட்சக்கணக்கான வாசகர்களுக்கு வேதனையும் அதிர்ச்சியும் அளிக்கக் கூடியதுதான்.

ஆனால், அவர் பகவானை அனுபவித்த ஆழத்தையும் அழகையும் அவர் பிரவசனங்களிலே கண்டு கேட்டு அனுபவித்தவர்கள், அவர் எழுத்துக்களில் படித்து அனுபவித்தவர்கள், அவரது ஆத்மா பரம்பொருளுடன் ஐக்கியமானதை உணர்வார்கள்.

முக்கூர் ஸ்ரீ லக்ஷ்மிநரசிம்மாச்சார்யாரின் பகவத் அனுபவத் திளைப்பின் ஒரு சில துளிகள்தான் நாம் அனுபவித்தவை. அந்தச் சில துளிகளே நம்மைத் தாய்மையின் ஹிதத்தோடு தூய்மைப்படுத்தி உயர்த்த வல்லவை என்பதை, சொந்த அனுபவத்திலும் பல்லாயிரக்கணக்கான கல்கி வாசகர்களின் அனுபவப் பகிர்தலிலும் உணர்ந்திருக்கிறோம்.

வானதி பதிப்பகம் 'குறையொன்றுமில்லை' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கும் அவரது பிரவசனங்களின் தொகுப்பு, வரலாறு காணாத விற்பனையைக் கண்டிருக்கிறது. முதல் பாகம் மட்டும் ஐந்தாண்டுகளில் எட்டு பதிப்புகள் விற்றுத் தீர்ந்திருக்கிறது. இரண்டாம் பாகம் மூன்றாண்டுகளில் மூன்று பதிப்புகள் வெளியாகியிருக்கிறது.

வடமொழியும் தமிழும் தெலுங்கும் வேதாந்தமும் விச்வாசமும் வாத்ஸல்யமும் பொங்கிப் பிரவகித்த அவரது பிரவசனங்கள் இனி ஒலிக்காது என்கிற துயரம் தாள முடியாததாகத் தானிருகிறது. அதிலிருந்து மீள்வதற்கும் அவருடைய சிந்தனை முத்துக்கள்தான் நமக்குத் துணை நிற்க வேண்டும்.

ஒலி நாடாக்களில் பதிவாகியுள்ள அவருடைய பிரவசனங்கள் தொடர்ந்து கல்கியில் வெளிவரும்.

# கைதட்டலை அள்ளிக் கொண்ட சூப்பர் ஸ்டார்!

**கல்கி**
**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்**
இணைந்து வழங்கும்
**நில், கவனி, வெற்றிக்கொள்!**

"எல்லா பிரசுரகர்த்தர்களும் தங்கள் பிரசுரங்களை அனுப்பி வைக்கிறார்கள். நானும் அவற்றைப் படித்துவிட்டு விமர்சனம் செய்கிறேன். ஆனால் ஏனோ தெரியவில்லை. 'நாசிக்'கில் உள்ள ஒரு பிரசுரத்தில் பிரசுரிக்கப்படுபவை மட்டும் எனக்கு அனுப்பப்படுவதே இல்லை. தாம் வெளியிடும் ஆயிரம் ரூபாயில் இரண்டும் நூறு ரூபாயில் இரண்டும் அனுப்பி வைத்தால் அவற்றை நான் நன்றாகப் படித்துப் பயன்படுத்திப் பார்த்து விமர்சிக்கலாமே..!"

- எழுதியவர் அமரர் கல்கி. எழுதியதை எடுத்துச் சொன்னவர் கல்கி ராஜேந்திரன்! 'பணம்' என்ற தலைப்பில் நடந்த கருத்தரங்கின் வரவேற்புரை முதல் நன்றியுரைவரை, சிரிப்பு மலர்கள் சிந்தனை மணத்தை அள்ளி வீசியதைப் போன வாரம் பட்டியலிட்டோம். பணத்தை அடைய, ஆள, அனுபவிக்க என்ன செய்ய வேண்டும் என்பதை மைசூர்பா ரெசிபி போல் வரவேற்புரையிலேயே விண்டு வைத்து விட்டார்

பணம் சம்பாதிக்க இரண்டு விஷயங்கள் தான் தேவை. ஒன்று : முயற்சி. இரண்டு : நுணுக்கம்.

"முயற்சி என்பது கடுமையான உழைப்பு. கண்துஞ்சார், பசி நோக்கார், கருமமே கண்ணாயினார் என்றபடி உழைக்கிறீர்களா... அப்படியானால் பாயின்ட் நம்பர் ஒன் ஓ.கே. அடுத்தது நுணுக்கம் - நாம் நாடும் அல்லது செய்யும் தொழிலில் ஒரு நுணுக்கம் ஒளிந்திருக்கும். அதைக் கண்டறிய வேண்டும். அதே தொழிலில் முன்னேறிய பிறரைப் பாருங்கள். அவர்கள் கையாண்ட வழிமுறைகளை அப்படியே பின்பற்றாமல் அந்த வழிமுறையில் பொதிந்திருக்கும் ஒழுக்கத்தை மட்டும் கடைபிடியுங்கள். தொழிலின் நுணுக்கத்தை உங்கள் சொந்த வழிமுறையில் ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு கடைபிடிக்கும்போது முன்னேற்றம் உங்களை நோக்கி ஓடிவரும். ஆக, பணம் சம்பாதிப்பதற்கு நுணுக்கம் தெரிந்து உழைக்க வேண்டும் என்பதே முக்கியம்..."



ஸ்ரீ கிருஷ்ணா சுவீட்ஸ் அதிபர் முரளி :

வாழ்வின் பெரும் பகுதி நேரத்தைப் பணத்தைப் பற்றி யோசிக்கவும், கற்பனை செய்யவுமே செலவிடுகிறோம். ஆனால் பணத்தைச் சம்பாதிப்பது எல்லோருக்குமே எளிதாக முடிவதில்லை. உண்மையில்

முரளியுடைய வரவேற்புரை சிந்தனையின் தொடர்ச்சியாகத்தான் பேசினார்கள் ஏவி.எம். சரவணனும் சாலமன் பாப்பையாவும். "உழைத்துச் சம்பாதித்த பணம்தான்



நம்மிடம் நிற்கும். பிறர் வருந்த அல்லது பிறரை ஏய்த்துப் பெறும் பணம் நில்லாது. அப்படி உழைத்து ஈட்டிய பணத்தையும் ஒரே இடத்தில் கொட்டி வைக்காமல் நாலு பேருக்குப் பயன்படுகிற மாதிரி நாலு இடத்தில் முதலீடு செய்யுங்கள். 'உரத்தை ஒரே இடத்தில் குவித்து வைத்திருந்தால் பயனில்லை. நாலு இடங்களில் அதைப் பரப்பி வைத்தால்தான் பயிர் பச்சைக்குப் பயன்' என்று சிவசங்கரி எழுதியிருப்பதை மேற்கோள்காட்டினார் சரவணன்.

"பணக்காரன் சிறக்க வேண்டுமானால் அவன் பிறர் பணத்தையும் தன் பணம் போல் பாவித்துச் செலவிட வேண்டும்" என்றவர் தமது தந்தை அதற்கு வாழும் உதாரணமாக விளங்கியதைச் சுட்டிக் காட்டினார் :

"அப்பா காலமாவதற்குச் சுமார் முக்கால் மணி நேரத்துக்கு முன்பு...ஆஸ்பத்திரி அறையில் கட்டிலில் படுத்திருந்தார் என்னை அருகே அழைத்தார்... என்ன சொல்லப் போகிறாரோ என்று நினைத்தபடி போனால், 'பாத்ரூம் லைட் அனாவசியமாக எரிகிறது. அணைத்து விடு..' என்றார்! பொதுச் சொத்துக்களையும் நம்முடையதைப் போல் அக்கறையுடன் அணுக வேண்டும் என்ற கொள்கை நம்மை உயர்த்தும். சம்பாதித்ததை அனுபவித்துச் சிறக்கச் செய்யும். அதே நேரத்தில், பணம் என்பது மட்டுமே நிம்மதியான வாழ்க்கையை உறுதி செய்யாது. ஏ.சி. அறையில் சௌகரியமாய்க் கட்டிலில் படுத்தால்கூட சிலருக்குத் தூக்கம் வராது. ஆனால் பாரீஸ் கார்னரில் ஒரு நாள் ஒரு மணல் லாரியைப் பார்த்தேன். அளவுக்கு மீறி லோடு ஏற்றிய அபாயகரமான அந்த லாரியின் மணல் குவியலின் மேல் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்தான் ஓர் உழைப்பாளி. மேலே உச்சி வெயில் காய்ந்து கொண்டிருக்கிறது. ஒரு சடன் பிரேக் போட்டால் அவன் சரிந்து விழுந்துவிடக் கூடிய நிலை... அப்படியும் உறங்குகிறான் என்றால் அது பணத்தால் கிடைக்கும் சுகம் அல்ல... உழைப்பால், நேர்மையால் பெறும் நிம்மதி... ஆகவே நேர்மையாய் உழைத்துச் சம்பாதித்து, பிறர் பொருளையும் தன் பொருளாக பாவிக்கக் கூடியவனே வெற்றியாளன்" என்று தமது ஃபார்முலாவைச் சுருக்கமாகச் சொன்னார் ஏவி.எம்.சரவணன்.

சாலமன் பாப்பையா சக்ஸஸ் ஃபார்முலாவாக முன் வைத்தது, இளைஞர் திருவிழாவின் சூத்திரத்தைத்தான் : நில், கவனி, வெற்றிகொள்!

நிகழ்ச்சிக்கு வந்த இளைஞர்களையும் வரத் தவறிய துரதிர்ஷ்டசாலிகளையும் நோக்கி அவர் சொன்னது இதுதான் :

"இன்றைய ஜகஜ்ஜால உலகில் தொலைக்காட்சி சானல்கள் ஒரு பக்கம் மோக வலை விரித்து ஈர்க்கின்றன. இன்னொரு பக்கம் இளைய தலைமுறையினர் சர்வ சகஜமாய்க் கசக்குகிறார்கள் - கண்களை அல்ல; கைகளை! பான்பராக் தொடங்கி பலவிதமான போதைப் பொருள்களைக் கசக்குகிறார்கள். மாணவர்கள்தான் இப்படியென்றால், வாத்தியார்களும் அவர்களுடன்





கல்கி ராஜேந்திரன்

* ஏவி.எம்.சரவணன்

'டிஸ்கஸ்' பண்ணி கசக்கு கிறார்கள்.

"இளைஞனே நில்! இவையெல்லாம் உனக்கு வேண்டாத விஷயங்கள் என்பதைக் கவனி. பணம் இந்தச் சமுதாயத்தில் முக்கியமான விஷயம் என்பதையும் கவனி. அதை ஏராளமாக வைத்திருப்பவர்கள் செருக்கு, திமிர், கொழுப்பு என்னும் வகைகளில் விழ்வதையும் கவனி... அதற்காகப் பணத்தைச் சம்பாதிக்காமலேயே இருந்து விடாதே. வள்ளுவர்கூட பணத்தைச் சம்பாதிக்க வழிகள் சொல்கிறார் - அது முக்கியம் என்பதால்தானே சொல்கிறார். ஆகவே நியாயமாய் நேர்மையாய்ச் சம்பாதிக்கப் பாடுபடு!

"இன்றைய நிலைமையில் நேர்மை நியாயம் பற்றிப் பேச வந்துட்டீங்களே... என்று அலுப்பு கொள்ளாதே... நானாகக் கொடுத்தக் கூடுதல் ஐந்து ரூபாயை வாங்க மறுத்து, மீட்டர் கட்டணம் மட்டுமே பெற்றுச் சென்ற ஆட்டோ ஓட்டுனர்கள் இன்றும் உண்டு. கூலி, சம்பளம், சன்மானம்... எந்தப் பெயர் கொண்டு அழைத்தாலும் அதைக் கொடுப்பவனும் சரி, பெறுபவனும் சரி, ஓர் இலக்கணத்துக்கு உட்பட்டு இயங்க வேண்டும்.

"பெறுபவனின் உழைப்பையும் முனைப்பையும் பார்த்துவிட்டு, 'இவருக்கு நாம் கொடுக்கும் கூலி குறைச்சல்; இன்னமும் கூடுதலாகத் தர வேண்டும்' என்று கொடுப்பவர் நினைக்க வேண்டும். வாங்குகிற சன்மானத்துக்குத் தம்முடைய மிகச் சிறந்த உழைப்பையும் திறமையையும் அளித்தும் திருப்தி கொள்ளாமல் மேலும் மேலும் திறமை காட்டும் உத்வேகத்துடன் ஊழியர் உழைக்க வேண்டும்... அப்போதுதான் பணம் என்ற மூன்றெழுத்து மந்திரம் முழுமையான அர்த்தமும் பயனும் பெறுகிறது.

"ஒரு முறை முரளி அவர்களிடம் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் மைசூர் பாவின் வெற்றி ரகசியம் என்ன வென்று கேட்டேன். 'சர்க்கரை, கடலைமாவு, நெய், பெரியோர்களின் ஆசி' என்று கூறினார். இளைஞனே! உன் நடையிலே, அசைவிலே, ஞானச்செருக்கிலே... நேர்மையின் கம்பீரம் தெரியட்டும்! மூத்தோர்கள் உன்னைப் பார்த்துப் படுகிற பெருமையிலே அவர்களுடைய ஆசி உன்மீது மழையாய்ப் பொழியட்டும். ஞானத்தைத் தேடு; வாழ்வைத் தேடு; கூடவே பணத்தையும் சேர்..."

எழுந்த கரவொலியும் சல சலப்பும் ஓய சில நிமிடங்கள் ஆயின. அதற்குள் பார்வையாளர்களிடமிருந்து உரிய படிவங்களில் கேள்விகளை எழுதி வாங்கித் தேர்வு செய்து பேச்சாளர்களிடம் அனுப்பி பதில்கள் பெற்றோம். நிகழ்ச்சியை நிறைவு செய்த, கேள்வி - பதில் தொகுப்பு :

**நாகராஜன்** : பணம்தான் மனித உறவுகளைத் தீர்மானிக்கிறதா?

**ஏவி.எம்.சரவணன்** : பணத்துக்கும் மனித உறவுகளுக்கும் சம்பந்தமில்லை. திடீரென்று பணம் வருகிறபோது சில திடீர் அசம்பாவிதங்கள் நிகழ்ந்து விடுகின்றன. பணம் வாழ்க்கைக்கு முக்கியம்தான். ஆனால் பணமே வாழ்க்கையல்ல.

**மீனா கோவிந்தராஜன்** : பணம் சம்பாதிக்கத் தேவையானது வேகமா? விவேகமா?

**பாப்பையா** : வேகம் மட்டும் இருந்தால் நிதானம் தவறிப் போகும். விவேகம் தான் முக்கியம். அதுவே நமக்கு எப்போது வேகமாகப் போகலாம்; எப்போது நிதானம் தேவை என்று அலாரம் போலச் சொல்லிக் கொடுக்கும்.

**ஸ்ரீனிவாசன்** : ஒருவருக்கு எவ்வளவு பணம் தேவை என்பதை எப்படி நிர்ணயிப்பது?

**ஏவி.எம்.சரவணன்** : உணவு தவிர வேறு எதையும் நாம் சட்டென்று 'போதும்' என்று சொல்ல முடியாது. கார் வைத்திருந்தால் பெரிய கார் இல்லையே என்று தோன்றும்.

பெரிய கார் இருந்தால் சொகுசு கார் இல்லையே எனத் தோன்றும், 'அதுவுமிருந் தால் லேட்டஸ்ட் மாடல் வேண்டும் என்று தோன்றும்... பணம் என்பது பர்ஸைப் பொருத்த விஷயமல்ல... முழுக்க முழுக்க மனத்தைப் பொருத்த விஷயம்.

**ஜானகிராமன்** : பாப்பையா 'ஞானத்தைத் தேடு; பணத்தையும் தேடு' என்றார். ஞானத்தின் தேடலுக்கு முடிவில்லை... பணத் தேடலுக்கு முடிவு உண்டா..?

**பாப்பையா** : ஞானத்தைத் தேட ஆரம்பித்தாலே பணத் தேடலுக்கு முடிவு வந்துவிடும்.

**சுபா சந்திரன்** : பணம் என்பதே இல்லாமலிருந்தால் உலகம் எப்படி இயங்கி இருக்கும்?

**ஏவி.எம்.சரவணன்** : பணம் இல்லாத காலத்தில் கூட பண்டமாற்று முறையில் வியாபாரம் நடந்துகொண்டுதானேயிருந்தது. இன்றுகூட பணத்துக்குப் பதில் கிரெடிட் கார்டு வந்துவிட்டது.

**இளங்கோவன்** :. பணம் இல்லாத முயற்சி திருவினை யாக்குமா?

**ஏவி.எம்.சரவணன்** : பணத்தைச் சம்பாதிக்கவே முயற்சி தேவைதானே... முயற்சிகள் அர்த்தமுள்ளதாக இருந்தால் நிச்சயம் திருவினையாகும்.

**பாப்பையா** *(அதே கேள்விக்கு)* : Money is what money does என்றொரு பொன்மொழி உண்டு. பணம் எதையெதைச் சாதிக்குமோ அதெல்லாமே பணம்தான்.

**தீனதயாளன்** : பணம் சம்பாதிக்க அதிர்ஷ்டம் அவசியமா..?

**பாப்பையா** : எனக்கு இறை நம்பிக்கை உண்டு, அதற்காக இறைவனே எல்லாம் செய்வான் என்று நாம் சோம்பலாக உட்கார்ந்திருக்கக் கூடாது. நல்ல நோக்கத்துடன் ஒருவன் உழைக்க முற்பட்டால் இறைவன் வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு உதவ வருவான் என்கிறார் வள்ளுவர். பாரத்தை இறைவன்மேல் போடுங்கள். அதிர்ஷ்டம் தன் இஷ்டம்போல் வரட்டும்.

**தெய்வசிகாமணி** : பிறர் துன்பத்தால் நாம் அடையும் பணம் சபிக்கப்பட்டது என்றீர்கள். மோசடி பேர்வழிகள் நன்றாகத்தானே வாழ்கிறார்கள்!

**ஏவி.எம்.சரவணன்** : இன்றைய நபர்கள் வாழ்க்கையைப் பார்த்தால் அப்படித் தோன்றக் கூடும். நாம் போடுகிற கணக்குகளுக்கு மேலாக இறைவன் ஒரு கணக்கு போட்டுக் கொண்டிருக்கிறான்... அதன்படி பலன்களை அனுபவித்தே ஆக வேண்டும்.

இவ்வாறு பதிலளித்த சரவணன், தாம் ஒரு ரோட்டரி கூட்டத்தில் கேட்டதை



* சாலமன் பாப்புலரைய்யாவிற்கு நன்றி...

எடுத்துச் சொன்னார் :

"நீங்க அமெரிக்காவுக்குப் போகணும்னா டாலரா பணத்தை மாத்தி எடுத்துக்கிட்டுப் போகணும். ஜெர்மனிக்குப் போகணும்னா 'மார்க்'கா மாத்தி எடுத்துக்கிட்டுப் போகணும். ஜப்பானுக்குப் போகணும்னா யென் வேணும்; லண்டனுக்குப் பவுண்ட்... இப்படி ஒவ்வொரு நாட்டுக்குப் போகிற போதும் அந்தந்த நாட்டுப்பணத்தை வாங்கணும். ஆனால், ஒரு இடத்துக்குப் போகிறபோது நீங்கள் எதையும் வாங்க முடியாது. சேர்க்கணும். ஆமாம். அந்த இடம் நாமெல்லாம் கடைசியா போகப்போற இடம். அங்கே போகிறதுக்குச் சேர்க்கணும் - புண்ணியம் சேர்க்கணும்..."

இந்த விஷயத்தைப் பேசியவர் யார் என்று ஏவி.எம். சரவணன் வெளியிட்டதும் கூட்டத்துக்கு வராத அந்த நபர்தான் கைதட்டலை எல்லோருக்கும் மேலாக அள்ளிக் கொண்டார்.

அள்ளிக்கொண்ட அந்த அன்பர் : சூப்பர் ஸ்டார் ரஜினி!

தொகுப்பு : **எஸ். சந்திரமௌளி**

படங்கள் : **யோகா**

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

செந்நெல் ஊடுகயல் உகள என்று ஆண்டாள் பாடினாள்.

திருச்செந்நெல்குளம் என்று ஸ்ரீவில்லி புத்தூர் பக்கத்திலே ஒரு ஊர் இருக்கிறது.

ஒரே பச்சைப்பசேல் என்று நில வெளி. வயல், பயிர்க் காட்சி... அதைப் பார்த்துத்தான் ஆண்டாள் 'ஊடுகயல் உகள' என்று கூறினாள். அந்த மாதிரி செந்நெல்விளையும் பூமி அது.

நெல் இருக்கிறதே, நெல்லுக்குள்ளே அரிசி இருக்கிறது. அரிசிக்கு மேல் இரண்டு விஷயங்கள் - ஒன்று ஸ்தூலம்; மற்றொன்று சூக்ஷ்மம். ஸ்தூலத்துக்கு உமி என்று பெயர். சூக்ஷ்மத்துக்குத் தவிடு என்று பெயர். உமியினாலேயும் தவிடுனாலேயும் மூடப்பட்டிருக்கிறது அரிசியாகிற அந்த தானியம்.

நாமும் அந்த நெல்லைப் போன்றுதான். ஸ்தூல-சூக்ஷ்மங்களால் ஆனவர்கள். நமது ஆத்மா அரிசி போன்றது. அதனால்தான் உபநிஷத் 'அஹம் அன்னம், அஹம் அன்னம் அஹம் அன்னம்...' என்று ஆத்மாவை 'அன்னம் அன்னம்' என அழைக்கிறது. பகவானுக்கு எதிரில் அன்னமாக இதைப் படைக்க வேண்டும். அவன் இதை உண்கிறான்.



ஆத்மாவை ஸ்தூல - சூக்ஷ்மங்கள் மூடியிருக்கிறது என்றேன். ஸ்தூல சரீரம் எல்லோருடைய கண்ணுக்கும் தெரிகிறது. பூலோகத்திலே பார்க்கிறோம். இந்தச் சரீரம் கீழே விழுந்தவுடனே, இந்த ஆத்மா வெளியிலே கிளம்புகிறபோது - பிரும்மரந்திரத்தின் வழியே வெளியே கிளம்புகிறபோது, இந்த பிரும்ம நாடி வழியே வெளியே போய்விடும். அப்போது சூக்ஷ்ம தேகம் கிடைக்கிறது ஒருவனுக்கு. அந்த சூக்ஷ்ம தேகம் மூலமாக சஞ்சாரம் பண்ணுகிறான். ஸ்தூல தேகம், சூக்ஷ்ம தேகம் என்கிற இந்த இரண்டையுமே விட்டுவிட்டு வெளியே கிளம்பும்போதுதான் எம்பெருமானைப்போய் அடைகிறோம்.

# குறையொன்றுமில்லை 11

விரஜா நதியைத் தாண்டிய பிற்பாடு வைகுண்டத்திலே அவனை அடைகிறோம். உபநிஷத் இதை விசேஷமாக விவரிக்கிறது. ஆத்மாவானது பகவானை அடைகிற விஷயத்தை விவரிக்கிறது.

அப்படிப்பட்ட ஆத்மா பகவத் அதீனம் ஆனதனாலே, இந்த சரீர யாத்திரையானது கர்மாதீனம்.

நாம் எவ்வளவு பாபம் பண்ணியிருக்கிறோமோ அதுவரைக்கும் இந்த ஜன்மா இருக்கும். நடக்கும் புண்ணியமும் பாபமும் பலனைக் கொடுக்க முன்வரும். இரண்டுக்கும் இடையிலே ஓரே போட்டி சண்டை! சண்டைபோட்டு எது ஜெயிக்கிறதோ அது பலனைக் கொடுக்கிறது.

ஒருத்தருக்குப் புண்ணியம் பலனைக் கொடுக்க ஆரம்பித்ததானால் எல்லாம் புண்ணியமாகவே அவர் பண்ணுவார். பாபம் பலனைக் கொடுக்க ஆரம்பித்தால் பாப கர்மாவாகவே பண்ணுவார். ஆகையினாலே, எது முன்னே பலனைக் கொடுக்கிறது என்பது நமக்குத் தெரியாது. போட்டி போடுகிறது - புண்ணியம் - பாபம் இரண்டுமே முன்னும் பின்னுமாகப் பலனைக் கொடுக்கும்.

ஒருத்தர், 'மிகவும் சாத்விகராக - மிகவும் நல்லவராக இருந்து கொண்டிருப்பார். அது புண்ணிய பலன் என்று அர்த்தம். திடீரென்று அவரே துஷ்டராக மாறிப் போய் விடுவார். என்னடாவென்று பார்த்தால், பாபம் பலனைக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறது. அதனால் அப்படி நடந்தது. இத்தனை நாள் புண்யத்தின் பலனை அவர் அனுபவித்தார்; இப்போது பாபத்தின் பலன் என்பதைக் காட்டிக் கொடுக்கிறான் பரமாத்மா. எல்லாவற்றையும் நாம் புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற அவசியம் இல்லாமல் இப்படி நமக்குக் காட்டிக் கொடுக்கிறான்.

ஆகையினாலே, அவன் திருவடியிலே நமக்குக் கைங்கர்யம் கிடைக்க வேண்டும். அது என்ன, அவ்வளவு சுலபமாக வருமா? அதற்கு என்ன வழி என்றால், அதற்கும் அவன் திருவடிதான் வழி!

'நின் அருளான் கதியின்றி மற்றொன்றில்லேன்!' - உபாயம் அவன் திருவடிதான். உபேயம் - கைங்கர்யம் - அதுவும் அவன் திருவடிதான்.

சஹஸ்ரநாமத்திலே பாருங்கள்.

பின்னாலே வருகிறது... மார்காய நம: 'மார்கமாக இருக்கக்கூடியவனே!' என்று பகவானை அழைத்து; அவன் பொருட்டு 'நம!' என்கிறது. மார்கபந்து என்றே அவனுக்குப் பெயர் உண்டு - நம்மை வழிநடத்தும் பிரான் அவன்தான்.

இதை விளக்குகிற மந்திரமானது கர்ம காண்டத்திலேயும் வருகிறது; உபநிஷத்திலும் இருக்கிறது.

இந்த மாதிரி மந்திரங்களெல்லாம் ரொம்ப உயர்ந்தவை.

கர்ம காண்டத்திலே கிருஷ்ண யஜுர் வேதத்திலே முதல் காண்டத்திலே வருகிறது.

இந்த மந்திரம் கடோபநிஷத்திலும் வருகிறது; இன்னொரு இடத்திலே முண்டகோபநிஷத்திலும் வருகிறது. இப்படிப் பல உபநிஷத்களில் இந்த மந்திரம் வருகிறது.

இப்படி உபநிஷத்திலேயும் வந்து கர்ம காண்டத்திலும் வந்தால் அந்த மந்திரம் ரொம்பவும் ஏற்றமுடையது என்பதை நாம் உணர வேண்டும்.

'அக்னேனய புவதா...' என்று ஆரம்பிக்கிறது.

ஈசாவாச்ய உபநிஷத்திலும் பதினெட்டாவது மந்திரமாக வருகிறது.

கீதையிலே வருகிற சரணாகதி மந்திரம் இருக்கிறது பாருங்கள்... அதை விளக்கக் கூடிய மந்திரம்தான் இந்த அக்னேயை புவதா... கீதையில் பகவான் தன் வாக்கினாலே சொன்னான்; இது உபநிஷத்தில் அமைந்திருக்கிறது.

அதனால்தான் ஆசார்யர்களெல்லாம், "ஈசாவாஸ்ய உபநிஷத் 18 மந்திரங்கள்தான் கீதையாய் - பகவான் வாக்கிலே 18 அத்தியாயமாய் வந்தது" என்று அழகாகக் காட்டிக் கொடுத்திருக்கிறார்கள். பகவத் கீதையில் பூரணமாக அந்த மந்திரத்தை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

பகவானே நம்மை அழைத்துக் கொண்டு போகிறான்; வழிகாட்டுகிறான்.

'அக்னே!' என்று அவனை அழைக்கிறது இந்த மந்திரம்.

அக்னி என்றால் நாம் பார்க்கக்கூடிய இந்த அக்னி இல்லை... பகவானுக்கே அக்னி என்று பெயர்.

'அக்னயே நம;' என்றால் பகவானைத் தான் குறிக்கும். 'பிரஜாபதையே நம;' என்றால் பிரும்மா இல்லை; பகவான்தான்.

இப்படி ஒவ்வொரு தேவதைக்கும் அந்தர்யாமியாக இருந்து பலனைக் கொடுக்கிறான் பரமாத்மா. ஆகையால் அக்னி என்ற சொல்லுக்குப் பொருள் 'விஷ்ணு'தான். வித்யாரண்யர் இதை எடுத்துக் காட்டுகிறார். பட்டாபாஸ்கராச்சார்யார் வேத பாஷ்யத்திலே இதை ஸ்பஷ்டமாக எடுத்துக் காட்டுகிறார்.

ஓரிடத்திலே 'அக்னி' என்று குறிப்பிடும் வேதம் இன்னொரு இடத்திலே விஷ்ணு என்று சொல்கிறதே... என்று குழப்பம் வரும். அக்னியென்று எடுத்துக் கொண்டாலும் எடுத்துக் கொள். அக்னிக்கு அந்தர்யாமியான பரமாத்மா என்று எடுத்துக் கொண்டாலும் எடுத்துக் கொள். அக்னிக்கு அந்தர்யாமியாக இருப்பவன் அவன்தான்.

இந்த மந்திரத்தின் அர்த்தம் என்ன..?

"ஹே அக்னே! எம்பெருமானே! பகவானே! என்னை அழைத்துக் கொண்டு போ..."

எந்த வழியிலே அழைத்துப் போக வேண்டும்...?

நல்ல வழியிலே அழைத்துப் போக வேண்டும்.

"நல்ல வழியென்பது உனக்குத் தெரியாதா?" என்று பகவான் கேட்டான்.

"தெரிந்தால் உன்னை ஏன் கேட்கிறேன்!" என்று ஆழ்வார் பதில் சொல்கிறார்.

நல்லது எதுவென்று தெரிகிறது; கெட்டது எதுவென்று தெரிகிறது. ஆனால் இதுதான் நல்லது; இது கெட்டது என்று தெரிந்து கொண்டால்கூட கெட்டதை விட்டுவிட்டு நல்லதைப் பிடிக்க முடியவில்லையே...!

நல்ல மழை பெய்கிறது. மழை பெய்து அங்கங்கே ஜலம் குட்டை குட்டையாகத் தேங்கியிருக்கிறது. ஒரே ஜலமும் சேறுமாகப் பத்தடி தூரம்! அந்தத் தெருவிலே ஒருத்தர் வந்துவிட்டார். பட்டு வஸ்திரம் உடுத்தியவர். ஜலத்தைத் தாண்டி எகிறிக் குதித்து அந்தண்டை போய்விட வேண்டும் என்று நல்லதுதான் நினைக்கிறார் அவர். மேல் துண்டை தலைப்பாகையாகக் கட்டிக் கொண்டு, பட்டு வஸ்திரத்தை இழுத்துக் கட்டி.... விச்வ பிரயத்தனம்!

அவரைப் பார்ப்பவர்கள் ஏதோ ஆஞ்சனேயரே தாண்ட வந்துவிட்டதாக நினைப்பார்கள். ஏனென்றால், நூறு யோசனை தூரத்தைக்கூட பசுமாட்டின் குளம்படியில்

## அருள்வாக்கு!



இந்தக் கலிகாலத்துக்கென்றே ஏற்பட்ட மருந்து - தித்திப்பு மருந்து - நாம பாராயணமும், பஜனையும். இவற்றைத் தாங்களாகவே ஆரம்பித்துப் பண்ணலாம். ப்ரணவமும், 'நம:'வும் சேர்க்காமல், 'சிவ, ராம, நாராயண கோவிந்த' முதலான, எந்த தெய்வத்தின் நாமாவையும் ஒருத்தர் தானாகவே ஜபிக்கலாம். இங்கேயுங்கூட முதலில் குட்டியாக ஒரு குருத்யானம் நல்லது. அந்த நாமாவைச் சொல்லி ஸ்வாமியைக் கண்டு கொண்ட ஒருத்தரை குருவாக தியானித்தால் அதுவே ஒரு பக்கம் விநயம், இன்னொரு பக்கம் டானிக்! வெறும் நாமாவையுங்கூட ஒரு நாம ஸித்தாந்தப் பெரியவரிடம் க்ரமப்படி உபதேசம் வாங்கிக் கொண்டால் நிச்சயமாக அது விசேஷந்தான். ஆனால் அதற்கு ஸெளகர்யப்படவில்லையென்பதற்காக ஒத்திப் போட வேண்டாம்; தானாகவே ஆரம்பித்துக் கொள்ளலாம் என்றுதான் சொல்கிறேன். அப்புறம் ஸெளகரியம் ஏற்படுகிறபோது ஒரு பெரியவரிடமிருந்து உபதேசமாகவும் பெற்றுக் கொண்டால் விசேஷம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

தேங்கின துளி நீரைத் தாண்டுவதுபோல் அனாயாசமாகத் தாண்டியவன் ஆஞ்ச நேயன்.

இங்கே தாண்டுவதற்குப் பிரயத்தனம் பண்ணுகிறவர், எல்லா ஏற்பாடும் பண்ணிக் கொண்டு ஒரு எகிறு எகிறினால்... சகதியிலேயே விழுகிறார்!

நம் கதை மொத்தமும் இதுதான். அதனால், அவர் விழுந்ததற்காக நாம் சிரிக்கக்கூடாது.

அதேபோல், பெரிய முன்னேற்பாடுகளுடன் 'அதைப் பண்ண வேண்டும், இதைப் பண்ண வேண்டும்' என்று மூன்று மணிக்கே, அதிகாலை எழுந்திருக்கும் திட்டம் போடுவார் ஒருத்தர். ஆனால் வழக்கமாக ஐந்து மணிக்கு எழுந்திருக்கும் அவர் கூட அன்றைய தினம் பார்த்து எட்டு மணி வரைக்கும் தூங்கிப் போகிறார்.

அதனால்தான் சொன்னது வேதம் : 'நன்மையும் தீமையும் நாம் அறியோம்' என்று. அந்த வேதமே சொல்கிறது :

"உனக்கு எல்லாம் தெரியும் ஆனதனாலே நீ அழைத்துக் கொண்டு போனாய்னால் அப்புறம் எனக்கென்ன குறைவு!" என்கிறது.

'பாபக் குவியலை என்னிடத்திலிருந்து பொசுக்கிவிடு.'

'தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய்.' - இது ஆண்டாள் வாக்கு. இந்த வேதமந்திரார்த்தத்தைத்தான் ஆண்டாள் திருப்பாவையிலே எடுத்துக் காட்டுகிறாள்.

'போய பிழையும் புகுதருவான் நின்றனவும்..' - ஏற்கெனவே உள்ள பாபம்; இனிவரும் பாபம், இப்போது நடந்து கொண்டிருக்கும் பாபம்... மொத்தத்தையும் தீயினால் தூசாக்கு!

'ஹே எம்பெருமானே! உனக்கு நான் என்ன பண்ணிவிட முடியும்..? 'நம!' என்று விழுந்து சேவிப்பது தவிர...!' என்று கேட்கிறாள் ஆண்டாள்.

வேதமோ நம: என்று சொன்னாலே போதும் என்கிறது.

'நம:' என்று சொன்னாலே பகவான் அவ்வளவு சந்தோஷப்பட்டு நமக்கு என்ன கொடுக்கலாம், என்ன கொடுக்கலாம்... என்று தேடிக் கொடுப்பான். ஐச்வர்யம், அக்ஷர கதி... 'ஐயோ! நம: சொல்லிவிட்டானே' என்று சந் தோஷப்படுவானாம்.

ஆதலால் நம: என்பது வசீகரம் பண்ணக்கூடிய பெரிய மந்திரக் கோல்! அதைக் கையிலேயே வைத்துக் கொண்டிருக்கிறான் பரமாத்மா...

(வளரும்)



## ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத
## ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்

கருவிலி (ஸற்குணேச்வரபுரம்), திருவாரூர் மாவட்டம்.

### ஸ்ரீ ஞானஸ்கந்த குருநாதர் விஜயம் - 11.5.2001

லோகமாதாவும் பிதாவுமான பார்வதி பரமேஸ்வரர்கள் முன்பு நடத்திய எத்தனையோ திருவிளையாடல்களிலே தொடர்ந்து இந்த கலியுகத்திலே நடத்தும் லோகசம்ரக்ஷணம் புண்யக்ஷேத்ரமான கருவிலி க்ஷேத்திரத்தில் **ஸ்ரீ ஸற்குணேஸ்வரரும் ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரியுமாக** அருள்பாலிக்கும் திருவிளையாடல்.

சிவகுமாரனான ஸ்ரீ ஸுப்ரமண்யன் திருஞான சம்பந்தனாக அவதரித்து திருநீற்றின் மகிமையை உலகுக்கு உணர்த்தி நவகோள்களின் அனுக்ரஹத்தை அடையும் உபாயத்தைப் பறைசாற்றி, வேதத்தின் பெருமையை உலகிற்கு அனல்வாதம் புனல்வாதம் மூலம் உணர வைத்து தர்மத்தை காத்த திருவிளையாட்டு இப்பொழுது **கருவிலி** க்ஷேத்திரத்திலே தொடர்கிறது.

கலியின் தோஷத்தைப் போக்கும் கண்கண்ட தெய்வமாக நின்று உலகத்தையே காத்து ரக்ஷிக்கும் தெய்வமாக பிரவேசித்திருக்கும் மாத்ருஸ்வரூபமான தேவி **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி** தன்னுடைய மகிமையை உலகுக்குக் காட்ட

**11.5.2001 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு கருவிலி க்ஷேத்ர மகிமையும் மூர்த்தியின் பெருமையும் தேவியின் கட்டளைப்படி ஸ்ரீ ஞானஸ்கந்த குருநாதர் மூலம் பிரகடனப்படுத்தப்படுகிறது.**

இறையன்பர்கள் அனைவரும் பங்கு கொண்டு இத்தலத்தின் மகிமையை பகவான் **ஸ்ரீ ஞானஸ்கந்த குருநாதர்** மூலம் கேட்டு அனுக்ரஹம் பெறுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்

**Dr.V. கிருஷ்ணமூர்த்தி**
பரம்பரை தர்மகர்த்தா

**ஸ்ரீஸற்குணேஸ்வரர் கைங்கர்ய சபா**
கருவிலி - 609501
போன் : (04366) - 73800

18, டபீர் புதுத்தெரு,
கும்பகோணம் - 612001
போன் : (0435) 423297

# பம்மல்

## பல்லாவரம் ரயில் நிலையத்திற்கு வெகு அருகில் (1.5கி.மீ)



- உங்களுக்குஏற்றவாறு மிக அழகாக கட்டப்பட்டு எளிதான, வசதியான விதிமுறைகள்
- பாலாற்று நீர்
- செராமிக்ஃப்ளோரிங்
- கிரானைட் சமையல் மேடை
- ஸ்டெயின்லெஸ்டீல் சிங்க்
- தேக்குமர வாசற்கதவுகள்
- 1 & 2 படுக்கைஅறைகள் கொண்ட ப்ளாட்டுகள்.
- 610 சதுர அடியில் இருந்து 1190சதுர அடிவரை.
- ரூபாய் 725 ஒரு சதுர அடி.

## ரம்யாஸ்

**போன் : 4814659**

**செல்போன்: 98411-21859**

**சைட் :2419288**

# 'கோக்' விஜய்!

**பாலிவுட் நடிகர்களை வைத்து நேரடி விளம்பர யுத்தம் நடத்தி வந்த கோக்-பெப்ஸி நிறுவனங்கள் இப்போது கோலிவுட்டையும் பிடித்துக் கொண்டிருக்கின்றன! இளசுகள் மத்தியில் எப்படியும் பெப்ஸி ஜுரத்தை வரவழைத்துவிடுவது என்று 'அலைபாயுதே' மாதவனை வளைத்துப் போட்டதுதான் தாமதம், கத்திரி வெயிலுக்கு கோக் விற்பனையை குண்டக்கா-மண்டக்கா என்று உயர்த்த 'பத்ரி' விஜய்யை மடக்கிப் பிடித்துவிட்டார்கள் கோக்கோகோலாக்காரர்கள். முதல் விளம்பர அனுபவம் எப்படி என்ற கேள்வியை உதயா படப்பிடிப்பில் இருந்த விஜய்யிடம் கேட்டோம்...**




திடீரென்று வந்த வாய்ப்பு இது... ஒரு வருஷ அக்ரிமெண்ட்டில் வேறு எந்த விளம்பரத்திலும் தலைகாட்டாமல் கோக்கோ-கோலாவுக்கு மட்டும் மாடல் பண்ண முடியுமா என்று கேட்டார்கள். சரி, ஒரு மாறுதலாக இருக்கட்டும் என்று தலையாட்டி வைத்தேன். ராஜீவ் மேனன்தான் டைரக்ட் பண்ணினார். ஒன்றரை நாள் ஷூட்டிங் நடந்தது. அந்த ஒன்றரை நாள்ளே ஒரு கதையையே எடுத்து முடிச்சுட்டார்.

எனக்கும் ஒரு முழுப் படத்துல நடிச்சு முடிச்சு பூசணிக்காய் உடைச்ச மாதிரி இருந்தது. அந்த ஒன்றரை நாளில் எடுத்த விஷயங்களை எடிட் செய்து, முப்பது செகண்ட் விளம்பரமாக பார்த்தப்போ, ரியலி நைஸ்! அது ஒரு தனிக் கலைன்னு முதல் முறையா ஃபீல் பண்ணினேன்.

**சிகரெட், விக்கர் விளம்பரத்தில் நடிப்பீர்களா? (அய்... வசமா மாட்டிக்கிட்டார்..).**

இது மாதிரி ஏடா கூடமா கேட்டா என்ன பதில் சொல்றது? விளம்பரத்தை பார்த்துதான் கன்ஸ்யூமர் எல்லாரும் ஒரு ப்ராடக்டை வாங்குறாங்கன்னு சொல்ல முடியாது. விளம்பரத்தை நான் இந்தக் கண்ணோட்டத்துல பார்ப்பது கிடையாது. ஆனா ப்ராடக்டோட, பெண்கள் உடம்பை கம்பேர் பண்ணி எடுக்கிற விளம்பரங்களை நான் கண்டிக்கிறேன்.

**உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச விளம்பரம்ன்னு ஏதாவது இருக்குதா?**

காண்டம் விளம்பரம் எதுவா இருந்தாலும், அதுக்குத்தான் என்னோட முதல் ஓட்டு. எச்.ஐ.வி.லேர்ந்து மட்டுமில்லே, மக்கள் தொகையிலேர்ந்தும் நாம தப்பிக்க வேணும்ன்னா... இது மாதிரி விளம்பரங்களை ஊக்கப்படுத்தணும். அதுக்காக குடும்பத்தோட பார்க்க முடியாதபடி காண்டம் விளம்பரம் எடுக்கக் கூடாது.

*அத்தி! இப்போதெல்லாம் விஜய் ரொம்ப வெவரமா பேசுறாரே!*

- ஸ்ரீசக்ரம்

?

● ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.



? இத்தாலியில் பிறந்த பெண்களுக்குத்தான் மூப்பனார் மதிப்பு அளிப்பாரா..?

! இத்தாலியில் பிறந்தால் போதுமா? இந்திரா காந்தி குடும்பத்தில் வாழ்க்கைப்பட வேண்டும்!

?

● ஜி. ஜயராமன், கூத்தனூர்.

? நம்பிக்கை - மூடநம்பிக்கை வித்தியாசம் என்ன..?

! ஜாதீயம், மதவாதம், ஊழல் இல்லாத ஆட்சி அமையும் என்று நம்பி நாம் வோட்டுப் போடுவது நம்பிக்கை. அதை ஜெ. தருவார் என எண்ணுவது மூ. நம்பிக்கை.

● எஸ். நாராயணன், சென்னை.

? சரிகா ஷா விவகாரத்தில் தண்டனை பெற்ற ஒன்பது பேரும் இளைஞர் காங்கிரஸைச் சேர்ந்தவர்களாமே..?

! காங்கிரசுக்குப் பெருத்த தலை குனிவு என்பது உறுதி. ஆனால் ஈவ் டீசிங் என்பது கட்சிக் கண்ணோட்டங்களைக் கடந்து பரவியுள்ள கொடுமையாகும்.

?

● எஸ். அகிலா, மோரகனியனூர்.



? சுப்பிரமணியம் சுவாமியைத் தமிழகத் தேர்தல் கமிஷன் ஆணையாளராக நியமித்தால் எப்படி இருக்கும்..?

! 'முதல்வராக ஆசைப்பட்டார் ப. சிதம்பரம்' என்று



சொல்லியிருக்கும் ஜெயந்தி நடராஜனின் கற்பனையை விட உங்கள் கற்பனை ரொம்ப சுமார்தான்.

?

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.



? வாஜ்பாயிடமிருந்து என்னைப் பிரிக்க கருணாநிதி சதி செய்கிறார் என்கிறாரே வைகோ..?

! வாஜ்பாய் படத்தை அவர் விருப்பத்துக்கு விரோதமாகத் தம் பிரசாரத்துக்குப் பயன்படுத்துவதன் மூலம், வாஜ்பாயிடமிருந்து தாம் பிரிந்து போக வைகோவே சதி பண்ணிக் கொண்டுதான் இருக்கிறார். ஆனால் அதற்கும் கருணாநிதி மீது பழிசுமத்தத்தான் கூடுதல் சதி செய்ய வேண்டும்.

?

● டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

? நன்கு படித்த இளங்கோவன், வாழப்பாடி போன்றோர்கூட 'ஜெ.வின் மனு தள்ளுபடி செய்யப்பட்டது கருணாநிதியின் சூழ்ச்சி' என்று பேசுகிறார்களே..?

! ஹிட்லரின் பிரசார மந்திரியான கோயபல்ஸ்கூட நன்கு படித்தவன்தான். ஜெர்மானிய மக்களும் படித்தவர்கள்தான். ஆனால் கோயபல்ஸ் பிரசாரத்தில் மயங்கத்தான் செய்தார்கள். போகப் போகத்தான் அவர்களுக்கு உண்மை ஸ்வரூபங்கள் புரியத் தொடங்கின. பட், இட் வாஸ் டூ லேட்! அது போல் இங்கு நடக்காமலிருந்தால் சரி.

?

● பி.ஜெயபிரகாஷ், சர்க்கார் பதி.

? காங்கிரஸ் அம்பிகா சோனி - அ.தி.மு.க. சசிகலா ஒப்பிட முடியுமா?

! ஒரே உலோகம் என்பதற்காக கடப்பாறையும் குத்தூசியும் ஒன்றாகிவிட முடியுமா..?

?

● எஸ். தென்றல் சேகர், சேத்துப்பட்டு.

? அரசியல் அனல் எப்படி இருக்கிறது?

! கண்ணீரைத் துடைப்பதாகச் சொல்லி கண்களையே பிடுங்கும்

# அ.தி.மு.க.வின் எதிர்காலம்..?

அரசியல்வாதிகளின் சுயரூபம் பாமரர்களுக்கும் தெரிந்துவிட்டதால், அனலாவது - தணலாவது... 'பிழைப்பைப்' பாருங்கடா!' என்று வெறுத்துப் போயிருக்கிறார்கள்.

?

● கே. ராஜேந்திரன், மருதநாடு.

? அ.தி.மு.க.வின் எதிர்காலம்...?

! சசிகலா அண்ட் கோவிடம்!

?

● இரா. ஆறுமுகம், திருச்சி - 9 ❑

? 1990-ல் 'நீங்கள் இட ஒதுக்கீடு ஆதரவாளரா எதிர்ப்பாளரா?' என்ற ஒரு கேள்விக்கு, ''இட ஒதுக்கீடுக்கு ஆதரவாளன்தான்; ஆனால் அது திட்டமிட்டு அமுல்படுத்தப்படுகிற முறைகளுக்கு எதிர்ப்பாளன்'' என்று பதில் கூறியிருந்தீர்கள். இந்த 10 ஆண்டுகளில், சாதிக்கு ஒரு சங்கம் தோன்றி, அவை அரசியலிலும் நுழைந்து காலூன்றியிருக்கும் அபாயம்... இன்று அதே கேள்விக்கு உங்கள் பதில் என்ன..?

! இட ஒதுக்கீடு கல்வியில் - அதுவும் காலக்கெடுவுக்கு உட்பட்டு அமைய வேண்டும். உரிய காலகட்டத்துக்குள், ஒதுக்கீடு பெற்ற ஜாதியினர் உயர்ந்து 'மெய்ன்ஸ்ட்ரீம்' ஜனத்தொகையுடன் இணைந்துவிட வேண்டும். மாறாக, இன்று ஜாதி உணர்வுகள் பல வகையாகவும் அதிகரித்தே வருகின்றன.

?

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை.



? தமிழ்க்குடிமகனின் எதிர்காலம் பற்றி..?

! தமிழ்ப் பாடப் புத்தகத்துக்கு நோட்ஸ் போடலாம்.

?

● எஸ். காளிதாஸ், சூரனூர்.

? தேர்தல் அதிகாரிகள் ஏதோ ஒரு நிர்பந்தத்துக்கு ஆளாக்கப்பட்டிருப்பார்கள் என எண்ணத் தோன்றுகிறதே..?

! ஆம் நிர்பந்தம்தான் - சட்டத்தின், விதிமுறைகளின் நிர்பந்தம்!

?

● மு. இராமசாமி, வயலூர்.



? விசாலி கண்ணதாசன் விசாலி மனோகரனாக மாறிய பின்னர் அவருக்குக் கூடுதலாக நீங்கள் சொல்ல விரும்பும் அறிவுரை...

! பொதுக் கூட்டத்துல கொஞ்சம் நாகரிகமாய்ப் பேசுங்கம்மா...

?

● முருகேசன், தேனி.



? த.மா.கா.வில் பெண் வேட்பாளர்களுக்குச் சீட்டு கொடுக்கவில்லை என்று ப. சிதம்பரம் குறை சொல்வது பற்றி..?

! புதிதாகப் பெண் வேட்பாளர்களை நிறுத்தாவிட்டாலும் ஏற்கெனவே எம்.எல்.ஏ.வாக இருந்து, சிறப்பாக இயங்கியவருக்கு கல்தா கொடுக்க வேண்டுமா..? கேவலம்! கட்சியின் ஒருங்கிணைப்பு எப்படி கலகலத்துப் போய்விட்டது என்பதைக் காட்டுகிறது.

?

● அ. கென்னடி, நன்னிமங்கலம் ★



? திடீர்த் திருமணம் செய்துகொண்ட நடிகை தேவயானி, 'என் மகளும் காதலிக்க வேண்டும். கேட் ஏறிக் குதிக்க வேண்டும்' என்கிறாரே...?

! 'என் மகளும் காதலிக்க வேண்டும்; அந்தக் காதலை நான் மதித்து நடந்துகொள்ளும்படியான சூழ்நிலை நிலவ வேண்டும்' என்று கூறியிருந்தால் தேவயானி புத்திசாலி. கேட் ஏறி தன் மகளும் குதிக்க வேண்டும் என்று ஆசைப்படுவது...

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
இரா. ஆறுமுகம், ஏ284, தீரன் நகர்,
திருச்சி - 620 009.

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
அ. கென்னடி, நன்னிமங்கலம், மாதா
கோயில் தெரு, லால்குடி, திருச்சி மா.வ.

தேர்தலில் போட்டியிடும் தகுதியை இழந்த காரணத்தால் ஜெ.வுக்கு ஆதரவாக அனுதாப அலை அடிக்குமா; அடிக்காதா என்ற விவாதம் தமிழகத்தில் சூடாக அரங்கேறிக் கொண்டிருக்க, பக்கத்து மாநிலமான பாண்டிச்சேரியில் மக்கள் எந்தவிதமான குழப்பத்திற்கும் ஆளாகாமல் தெளிவாக இருக்கிறார்கள்.

புதுவையைப் பொறுத்தமட்டில், அது எந்தவிதமான அலைக்கும் ஆட்படாத மாநிலம். வேட்பாளர்கள் ஒவ்வொருவரும் வீட்டிற்கு வீடு சென்று வாக்கு கேட்க வேண்டும். இல்லையேல் புறக்கணித்து விடுவார்கள். கட்சி செல்வாக்கு இரண்டாம்பட்சம்தான். தவிர, புதுவையின் தனித்தன்மையைப் பாதிக்கும் விதத்தில் யாராவது பேசினால் அவருக்குச் சமாதி கட்டி விடுவார்கள். இப்படித்தான் எம்.ஜி.ஆர். ஏதோ பேசப் போக, அவரது அணி மொத்தமாக ஒரு தேர்தலில் வீழ்த்தப்பட்டது. மற்றொரு முறை, எம்.ஜி.ஆரும் ஜெயலலிதாவும் சுற்றிச் சுற்றி வந்து வோட்டு கேட்டும் கூட, அ.தி.மு.க.வால் ஐந்து இடங்களுக்கு மேல் வாங்க முடியவில்லை.

இங்கு தேர்தல் களம் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறது?

தி.மு.க, பா.ஜ.க., புதுவை மக்கள் காங்கிரஸ், விடுதலைச் சிறுத்தைகள் – ஓர் அணி. காங்கிரஸ், த.மா.கா. – அடுத்த அணி . அ.தி.மு.க., பா.ம.க. – மூன்றாவது அணி.

தி.மு.க. அணியில் எந்தத் தள்ளாட்டமும் இல்லை. மற்ற அணிகள் கூட்டணி அமைப்பதற்குள்ளேயே, வேட்பாளர்களைத் தேர்வு செய்து பிரசாரத்தில் குதித்து விட்டது இந்த அணி. இந்த அணியின் பலம் கண்ணன். த.மா.கா.விலிருந்து விலகி, புதுவை மக்கள் காங்கிரஸைத் துவங்கி, தனது தனிப்பட்ட செல்வாக்கால் பாண்டி அரசியலை ஆட்டி வைப்பவர். புதுவை மக்கள் காங்கிரஸ் தலைவர் லட்சுமி நாராயணன், "1999 பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்ட எங்கள் நிறுவனர் கண்ணன், 24 சதவீத வாக்குகளைப் பெற்றார். முன்பு, புதுவையில், த.மா.கா. என்றால் அது கண்ணன் ஆதரவாளர்கள்தான். இப்போது த.மா.கா.விற்கு என்று இரண்டு, மூன்று சதவீதத்தை ஒதுக்கி விட்டுப் பார்த்தாலும் இருபது, இருபத்திரண்டு சதவீத வாக்குகள் புதுவை மக்கள் காங்கிரஸுக்கு இருக்கின்றன. இது தவிர, தி.மு.க., பா.ஜ.க. மற்றும் விடுதலைச் சிறுத்தைகளின் வோட்டு வங்கியையும் சேர்த்தால் எங்கள் ஆதரவு எங்கோ போகிறது. எனவே, எந்தவித பிரச்னையுமின்றி எங்கள் கூட்டணி முப்பது இடங்களில், மூன்றில் இரண்டு பங்கு இடங்களைக் கட்டாயம் பெறும்" என்று நம்பிக்கையோடு சொல்கிறார்.

"எங்கள் அணிக்கு ஆதரவாக வோட்டு வங்கி பெருகியிருந்தாலும், நான்கு வருட கால ஆட்சியில் நாங்கள் செய்த சாதனைகள் காரணமாகவும் மக்கள் எங்களுக்கு வோட்டு போடுவார்கள்'' என்கிறார் முன்னாள் முதலமைச்சர் ஜானகிராமன்.

"இங்கே ஒரு வலிமையான மதச்சார்பற்ற அணி அமையாததற்கு பா.ம.க.வின் பிடிவாதம்தான் காரணம்'' என்கிறார் புதுவை காங்கிரஸ் தலைவரான வெ. நாராயணசாமி. "நாங்கள் இங்கே ஆளும் கட்சியாக இருக்கிறோம். அப்படியிருக்க, முதல்வர் பதவியை எப்படி விட்டுத்தரமுடியும்? 1996 தேர்தலில் ஒன்பது இடங்களில் போட்டியிட்டு, ஒரு இடத்தில் மட்டுமே வெற்றி பெற்று மற்ற எட்டு இடங்களில் டெபாஸிட் இழந்த கட்சி பா.ம.க. அதனால், "பா.ம.க.வுடன் சேர்ந்து கூட்டணி வைத்துப்

# தடுமாற்றம் இல்லை!!




போட்டியிட நாங்கள் தயார் என்றாலும் பா.ம.க, அதிகாரத்தில் பங்குகொள்ள முடியாது" என்று எங்கள் தலைமை சொல்லிவிட்டது. இதன் காரணமாக, தி.மு.க.வை எதிர்த்து பலமான அணி அமைக்க முடியாவிட்டாலும், காங்கிரஸுக்கென்று இங்கு ஒரு அடித்தளம் உண்டு. எனவே எங்கள் அணி வெற்றி பெறும். கடந்த ஒரு வருட காலமாக எங்கள் ஆட்சியில் நடந்த சாதனைகள் மக்களின் வோட்டுக்களைப் பெற்றுத் தரும். குறிப்பாக, துறைமுக அபிவிருத்தி, 200 மெகாவாட் மின் உற்பத்தி நிலையம், 234 கோடி செலவில் புதுவைக்கு குடிநீர்த் திட்டம் ஆகியவை மக்களிடையே பெரிய பாராட்டைப் பெற்றுள்ளன" என்கிறார் நாராயணசாமி.

"அவர்கள் சொல்லும் திட்டங்கள் எல்லாம் இன்னும் ஏட்டளவில்தான் இருக்கின்றன. வாய்ப் பந்தல் போடுகிறார்கள். கடந்த 20 வருடங்களாகப் பார்த்தால், அ.தி.மு.க. - கம்யூனிஸ்ட் கூட்டணியில் இருப்பதால்தான் காங்கிரஸ் வெற்றி பெற்று வந்திருக்கிறது. இந்த முறை காங்கிரஸின் முகமூடி கிழிந்து விடும்" என்கிறார் லட்சுமி நாராயணன்.

கட்சி எங்கிருக்கிறது என்று தேட வேண்டிய பரிதாப நிலையில் த.மா.கா. உள்ளது என்றால், பா.ம.க.வின் நிலை இன்னமும் பரிதாபமாக இருக்கின்றது. புலி வேட்டைக்குக் கிளம்பியவன் எலி பிடித்து வந்த கதையாக, பா.ம.க.வின் நிலை ஆகிவிடும் என்கிறார்கள். "மக்கள் வோட்டுப் போட்டுத் தேர்ந்தெடுக்கும் முன்னரே அகம்பாவமாக, 'எங்கள் கட்சிதான் முதல் இரண்டரை ஆண்டுகள் ஆட்சி செய்யும்' என்று டாக்டர் ராமதாஸ் செய்துள்ள அறிவிப்பு, தன்மானமுள்ள புதுவை மக்களின் ஆத்திரத்தைக் கிளப்பி இருக்கிறது. போதாதற்கு, பத்து வேட்பாளர்களில் ஆறு பேர் டாக்டர் ராமதாஸின் சொந்தக்காரர்கள். பா.ம.க. - அ.தி.மு.க. அணி இந்தத் தேர்தலில் ஒரு இடத்தைப் பிடித்தால் அது பெரிய விஷயம்" என்கிறார் மஞ்சினி. இவர் சமீபத்தில்தான் தனது ஆதரவாளர்களுடன் பா.ம.க.வில் இருந்து விலகி தி.மு.க. அணி வெற்றிக்காக பாடுபட்டுக் கொண்டிருக்கிறார். டாக்டரால் 'முதல்வர் வேட்பாளர்' என்று சொல்லப்பட்ட நீதிபதி கோவிந்தராஜனுக்கும் சீட் இல்லை. அவரும் விலகி விட்டார். 1996ல் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே ஒரு சட்டமன்ற உறுப்பினரான ராம்சிங் என்பவருக்கும் பா.ம.க.வில் சீட் கொடுக்கப்படவில்லை. எனவே, புதுவை பா.ம.க.வே கரைந்து போய் விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

காங்கிரஸ், அ.இ.அ.தி.மு.க.வை நேரிடையாக பதிமூன்று தொகுதிகளில் எதிர்த்து நிற்கிறது. "தமிழ்நாட்டில் நாங்கள் கூட்டணியாக இருந்தாலும், இங்கு எந்தவிதத்திலும் அவர்களுடன் சமரசம் இல்லை. அ.இ.அ.தி.மு.க.வை எதிர்த்து எங்கள் பிரசாரம் கடுமையாக இருக்கும்" என்கிறார் காங்கிரஸ் தலைவர் நாராயணசாமி.

தேர்தலுக்குப் பத்து நாட்கள் முன்புள்ள நிலையைப் பார்க்கும் போது, தி.மு.க. தலைமையிலான தேசிய ஜனநாயக கூட்டணி வலுவான நிலையில் உள்ளது புரிகிறது. இதில் எந்தவித மாற்றமும் இருக்க வாய்ப்பில்லை. ஆனால் புதுவை கிராமப்புற மக்கள், தேர்தல் நெருக்கத்தில் பா.ம.க.வுக்கும் விடுதலைச் சிறுத்தைகளுக்கும் உண்டாகப் போகும் மோதலை எண்ணித்தான் அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள் பாவம்!

**— ப்ரியன்**

படங்கள் : **வெங்கடேஷ்**



# தி.மு.க. ஆட்சியில்தான் முதல் இடம் தமிழ்நாட்டிற்கு !

- அரிசி உற்பத்தித் திறனில் (எக்டருக்கு 3,579 கிலோ) தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- கரும்பு உற்பத்தித் திறனில் (எக்டருக்கு 134.16 டன்) தமிழகம் உலகில் முதல் இடம் !
- எண்ணெய் வித்துக்கள் உற்பத்தியில் (எக்டருக்கு 1,650 கிலோ) தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- மரவள்ளிக் கிழங்கு உற்பத்தியில் (எக்டருக்கு 37 டன்) தமிழகம் உலகில் முதல் இடம் !
- தேங்காய் உற்பத்தியில் (எக்டருக்கு 11,620 தேங்காய்) தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- ரூ. 1,62,982 கோடி முதலீடுகளைப் பெற்று தொழில் வளர்ச்சியில் தமிழகம் முன்னணி !
- போலியோ நோய்களை ஒழிப்பதில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- 'எய்ட்ஸ்' நோயைக் கட்டுப்படுத்துவதில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- பிறப்பு விகிதத்தைக் குறைத்து மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தியதில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- சிசுமரண விகிதத்தைக் குறைத்ததில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- மென்பொருள் வல்லுநர்கள் அதிக அளவில் பணியாற்றுவதில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- அமெரிக்கா செல்ல 'விசா' பெறும் மென்பொருள் வல்லுநர்கள் எண்ணிக்கையில் தமிழகம் இந்தியாவில் முதல் இடம் !
- மகளிர்க்கான உயிரியல் தொழில்நுட்பப் பூங்காவை அமைத்த முதல் மாநிலம் தமிழகம் !
- விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்கிய முதல் மாநிலம் தமிழகம் !

**இந்தியாவில் எந்த மாநிலத்திலும்**
**நடைபெறாத இந்தச் சாதனைகள்**
**கொள்ளை போகாமல் தடுத்திட;**
**மேலும் பெருமைகள் குவிந்திட**



தேர்தல் நாள்

**10 - 5 - 2001**

# ஆதரிப்பீர் உதயசூரியன்

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை- 600 018.

பகவான் தாஸ் வீட்டில் ஒரு விழா. அழைப்பு வந்தது. தயாராகச் சொல்லி ஞாபகப் படுத்தினேன். மாலையில்தான் போக வேண்டும். மதியமே ஃபோனில் புலம்பினாள் பாமா.

"அவ்வளவு பெரிய கோடீஸ்வரர் வீட்டு பார்ட்டிக்கு இந்தச் செருப்பைப் போட்டுட்டுப் போறது சிறப்பா? நான் வரணும்னா என் கால் சைஸ்லே ஒரு ஹீல் செருப்பு வாங்கிட்டு வாங்க" என்றாள்.

"சரி சைஸைச் சொல்லு."

நம்பரை வாங்கிக் கொண்டேன். ஞாபகமாக அவள் விரும்பி அணிகிற செருப்பாகத் தேர்ந்தெடுத்து வாங்கினேன்.

இப்படித்தான் அன்றும்.

குதிகாலில் வலி என்று துடித்தாள். டாக்டரிடம் அழைத்துப் போனேன். அவர் 'ஹீலை' மாற்றச் சொன்னார். ஒரு சீட்டும் எழுதிக் கொடுத்தார்.

அந்தச் சீட்டைக் காட்டிய பிறகுதான் ஆந்திர மகிளா வளாகத்தில் ஒரு ரப்பர் ஷீட் கொடுத்தார்கள். அதைக் கொண்டு போய் ஒரு செருப்புக் கடையில் கொடுத்து... மறுநாள் மனைவியின் பாத அளவை



# சிறப்பு

வரைபடமாக எடுத்துப் போய்க்கொடுத்து... இரண்டு நாள் ஆபீஸிலிருந்து அந்தக் கடைக்கு ரூட் போட்டு... ஒருநாள் வெகு பாதுகாப்பாகப் பார்சல் மாதிரி கொண்டு வந்து சேர்த்தேன்.

பிரித்துப் பார்த்த பாமா வெறித்தாள்.

“இவ்வளவு லோக்கலா ஒரு செருப்பைப் போடணும்னு உங்க மனசிலே வெகுநாள் பிரார்த்தனையா?” என்று சிணுங்கினாள்.

“அபாண்டமாப் பேசாதே! உன் குதிகால் வலிக்கு இது மாதிரி போடணும்னு டாக்டர் சொன்னதை மறந்துட்டியா? அப்பதான் வலி குறையும் பாமா...”

“வேற வழி?” என்று பொருமிக் கொண்டே போட்டாள்.

வலியும் குறைந்து கொண்டிருப்பதாகச் சொன்னாள்.

அதனால் பழைய ஹைடெக் ஹைஹீல்களை எல்லாம் அடுத்தடுத்த ஃபிளாட் சிநேகிதிகளிடம் தள்ளிவிட்டாள்.

**ப**கவான்தாஸ் வீட்டு விழா என்றதும் செருப்புக்கும் ஒரு சிறப்பு வேண்டும் என்று எதிர்பார்த்தாள்.

பெண்களின் மனோதத்துவம் அனுசரிக்கப்பட்டால்தான் ஆண்களுக்குச் சமத்துவம் - என்று எண்ணமிட்டபடியே போனேன். என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை.

பாமா வெறும் காலோடு உலாத்தினாள்.

**இருகூரான்**

“குதிகால் வலி போயிடுச்சா...” என்று கேட்டபடி செருப்பு பெட்டியைக் காட்டினேன். ரப்பர் செருப்பைத் தூக்கி வீசினாள்.

“இதை... இதை... இதைத்தான் எதிர்பார்த்தேன்” என்று காஃபி மாமி மாதிரி விரலைக் காட்டிச் செருப்புகளை எடுத்துப் போட்டுக்கொண்டு... என்னை விரட்டினாள்.

“பொம்மனாட்டிங்க மாதிரி நெளிஞ்சுக்கிட்டு நிக்காம சீக்கிரம் ரெடி ஆயிடுங்க... இப்பவே மணி ஆறு...”

“ஆயத்தப்பட்டேன். ஐந்து நிமிடத்தில் கிளம்பி ஒரு ஆட்டோவையும் பிடித்து வந்தேன். கிளம்புங்க மேடம்” என்றேன்.

**பா**மா ஏக படாடோபமாகத் தெரிந்தாள்.

கூந்தல் கலையாமல், புடைவையின் மடிப்பு கலையாமல், முகப்பூச்சுக் கலையாமல் அவளைப் பகவான்தாஸ் வீட்டு முன் சேர்த்து இறங்கச் சொன்னேன்.

வெகு நாட்களுக்குப் பிறகு மீண்டும் ஹைஹீலில் நடந்ததால் அவளது அசாதாரண உடம்பு, ஆபத்துக்கு ஆளாகும் போலிருந்தது. சட்டென்று தழுவினால் சட்டம் பேசுவாளோ என்று உஷாராகி...

“பார்த்து... பார்த்து பாமா” என்றேன்.

அவளும் மிக நன்றாகப் பார்த்துக் கொண்டேதான் இறங்கினாள். பகவான்தாஸ் வீட்டு வாசலில் இருந்த அறிவிப் பையும்.

‘தயவு செய்து காலணிகளைக் கழற்றி விட்டு உள்ளே வரவும்.’ ○




வெளியீடு : திமுக தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை- 600 018.

# ரங்கனாதன் ராஜ்யத்தில் 'வெற்றி' உலா!

தி.மு.க. ஆதரவோடு த.மா.கா. ஜனநாயகப் பேரவை வேட்பாளர் ரங்கனாதனும், ஒரிஜினல் த.மா.கா. வேட்பாளரான வெற்றிவேலும் நேருக்கு நேர் மோதுகிறார்கள். புரசை தொகுதியில் எங்கு நோக்கினும் ரங்கனாதன் பெயர்தான் சுவர்களில் வித விதமான கலர்களில் பளிச்சிடுகிறது.

டெக்னிக்கலாகப் பார்க்கப் போனால், ரங்கனாதன், தி.மு.க. வேட்பாளர். 'தான் தி.மு.க. உறுப்பினர்' என்று எழுதிக் கொடுத்து 'உதய சூரியன்' சின்னத்தில் போட்டியிடுகிறார். எனவே, வெற்றி பெற்றால், கலைஞர் கட்டளைப்படிதான் செயல்பட வேண்டியிருக்கும்.

'சபாஷ் சரியான போட்டி' என்று சொல்லும் அளவுக்கு போட்டி இங்கு மிக உஷ்ணமாக இருக்கிறது. பணபலம், ஆள்பலம், அடியாட்கள் பலம் ஆகியவற்றில் இந்த இருவரும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல.

"1989ல் ஒரு ஓட்டை ஸ்கூட்டரில் சென்ற ரங்கனாதன் இன்று 80 கோடி சொத்துக்கு அதிபதி. இத்தனை சொத்துக்களும் கட்டைப் பஞ்சாயத்து, அடிதடி செய்து சம்பாதித்தது. 'புரசைப் பகுதியில் அராஜக வெறி ஆட்டம் ஒழிய என்னை ஆதரியுங்கள்' என்று வோட்டு கேட்கிறார் வெற்றிவேல். அடக்கமாகவும் அதே சமயம் அழுத்தமாகவும் இருக்கிறது அவர் பிரசாரம்.

ஆனால் ரங்கனாதன் பிரசாரம் பளிச்சென சினிமா ஃபோகஸ் லைட்டுடன், தௌஸண்ட் வாலாக்கள் காதைப் பிளக்க, ஆடம்பரமாக நடக்கிறது.

"தொகுதிக்கு பல நல்ல காரியங்களைச் செய்திருந்தாலும், அவர் நடத்தும் ரவுடி ராஜ்யம் தான் அலர்ஜியாக இருக்கிறது. இவர் எப்படி 'ஜென்டில்மேன்' சிதம்பரத்தின் பரம சிஷ்யராக இருக்கிறார் என்பதுதான் வியப்பாக இருக்கிறது!" என்கிறார் பெரியார் நகர் சம்பத்.

த.மா.கா. எதிர் முகாமுக்குப் போகப் போகிறது என்பது தெரிந்தவுடன், உள்ளூர் தி.மு.க. பிரமுகர்கள், தொகுதி, கழகத்துக்கு என்ற யூகத்தில் சிட்டுக்குப் போட்டியிட்டார்கள். ஆனால் கடைசியில் அரசியல் ஆடுபுலி ஆட்டத்தில், காய்கள் இடம்மாறி இறுதியில் ரங்கனாதனே போட்டியிடவே, அந்தப் பிரமுகர்களுக்கு ஒரே சலிப்பு. எல்லோரையும் தமது பாணியில் 'சமாதானம்' செய்து வருகிறார் ரங்கனாதன்.

சுலபத்தில் வெற்றிக் கனியை பறித்து விடலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்த ரங்கனாதனுக்கு வெற்றிவேல் எதிர்த்து நிற்பதால் தூக்கமில்லாத இரவுகள். யார் வெற்றி பெற்றாலும் வாக்கு வித்தியாசம் மிகக் குறைவாகவே இருக்கும்!

- ஆரெஸ்

படங்கள் : ராஜன், சௌரா



• ரங்கனாதன்



• வெற்றிவேல்

# ஒருபனி நிலவு

**வ**ருணின் நெற்றிப் பரப்பில் மெலிதாய் வியர்வை அரும்பியிருக்க, காய்ந்துபோன தொண்டையோடு கேட்டான்.

"ஜெனி! உடனடியா நாம் நாளைக்குக் காலையில் கல்யாணத்தைப் பண்ணிக்கத்தான் வேணுமா...?"

"வேற வழி...?"

"உன்னோட அப்பாகிட்டே நம்ம காதலை டிக்ளேர் பண்ணினா என்ன...?"

"பண்ணலாம்... நீங்க ஒரு பணக்கார ஜோஸஃபாகவோ, டேவிட்டாகவோ இருந்தா...! ஆனா, நீங்க நேத்துவரைக்கும் வேலையில்லாத வருண். நாளையிலிருந்து ஒரு கம்பெனியில் செக்யூரிடியா வேலை பார்க்கப் போகிற வருண். என்னோட ஃபாதர் ஞானசுகடாட்சம் ஒத்துக்குவாரா என்ன?"

"சொல்லித்தான் பாரேன்...!"

"வேண்டாம் வருண். பாம்பு புத்துக்குள்ளே கையை விட்டுப் பார்க்கிற விஷப் பரீட்சையெல்லாம் வேண்டாம். நாளைக்கு காலையிலே கல்யாணத்தைப் பண்ணிக்குவோம். கல்யாண போட்டோவை கூரியர் தபாலில் என்னோட அப்பாவுக்கு அனுப்பி, காதலையும் கல்யாணத்தையும் 'டிக்ளேர்' பண்ணிடுவோம்..."

"அதுக்கப்புறம் உங்கப்பா பிரச்னை பண்ண மாட்டாரா...?"

"மாட்டார்! அவரைப் பத்தி எனக்குத் தெரியும்."

"ஜெனி.."

"ம்..."

"நாளைக்கே கல்யாணத்தைப் பண்ணிக்கணுமா? இரண்டு நாள் கழிச்சு வெச்சுக்கலாமே..?"

"எதுக்காக இப்போ வாய்தா கேட்கிறே வருண்..?"

"நாளைக்குத்தான் நான் ட்யூட்டியில் சேரப் போறேன்."

"இருக்கட்டும். அதனால என்ன? ரெண்டு நாள் கழிச்சு கட்டப் போகிற தாலியை நாளைக்கே கட்டினா என்ன?"

"அது... வந்து... நான் என்ன சொல்ல வர்றேன்னா..."

"நோ. நீ ஒண்ணையும் சொல்ல வேண்டாம். உனக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக்க இஷ்டமா இல்லையா?"

"இஷ்டம்தான்..."

"அப்படின்னா இந்தத் தாலியைப்பிடி. நாளைக்கு காலையில் அஞ்சு மணிக் கெல்லாம் விநாயகர் கோயில் வாசலுக்கு ரெண்டு மாலையோட வந்துடு."

"ஜெனி..."

"புதுசா வேஷ்டி சட்டை இருக்கா?"

"ம்... தீபாவளிக்கு எடுத்தது. அப்படியே இருக்கு."

"அப்புறமென்ன கட்டிட்டு வந்துரு. உனக்கு போட்டோகிராஃபர் யாரையாவது தெரியுமா?"

"தெரியாது."

"பரவாயில்லை. நான் தங்கியிருக்கிற வொர்க்கிங் விமன்ஸ் ஹாஸ்டல்ல போட்டோகிராஃபி தெரிஞ்ச பொண்ணு ஒருத்தி இருக்கா. அவகிட்டே நல்ல காமிராவும் இருக்கு. அழைச்சுட்டு வந்துடறேன். நம்ம கல்யாணத்துக்கு என்னோட சைடி விருந்து பத்து ஃப்ரண்ட்ஸ் வருவாங்க. நீயும் உன் ஃப்ரண்ட்ஸ் நாலைஞ்சு பேருக்கு விஷயத்தை கன்வே பண்ணி கல்யாணத்துக்கு வரச் சொல்லு."

"எனக்கேது ஃப்ரண்ட்ஸ்? இருந்த நாலு பேரும் ஆளுக்கொரு பக்கம் வேலை கிடைச்சுப் போய்ட்டாங்க. சரியான அட்ரஸும் தெரியாது."



**"என் மனைவியோட போட்டோவைக் காணல!"**

**"போட்டோ காணாமல் போனதுக்கா போலீஸ் ஸ்டேஷன் வந்தீங்க?"**

**"மனைவியைக் காணலைன்னு சொன்னா, முதல்ல போட்டோதானே கேட்பீங்க?"**

**- அம்பை தேவா**

---

"உன்னோட க்ளோஸ் ஃப்ரண்ட் லீலா கிருஷ்ணன்னு ஒருத்தர் இருந்தாரே, அவரோட அட்ரஸ் கூடவா தெரியாது?"

"தெரியாது. போன மாசத்துல ஒரு நாள் பழைய அட்ரஸுக்குப் போய்ப் பார்த்தேன். வீடு மாறிப் போயிட்டதாச் சொன்னாங்க."

"எங்கே?"

"மதுராந்தகத்துல ஏதோ ஒரு வீதி பெயர் சொன்னாங்க. நான் போய்ப் பார்க்கலை..."

"சரி! ஃப்ரண்ட்ஸ் இல்லேன்னா பரவா யில்லை. நீ சரியா அஞ்சு மணிக்குக் கோயில் வாசல்ல இருக்கணும். அலாரம் டைம்பீஸ் இருக்கா...?"

"இருக்கு"

"நாலு மணிக்கே அலாரம் வை. தூங்கிடாதே... என்ன வருண்...?"

"ம்..."

"முகத்துல சந்தோஷமே இல்லையே?"

"இந்தத் திடீர் கல்யாணத்தை நான் எதிர் பார்க்கலை."

"வேலை கிடைச்ச பிறகுதானே உனக்குக் கல்யாணம். யாருக்கு இந்த அதிர்ஷ்டம் கிடைக்கும்?"

வருண் சிரித்து வைத்தான். ஜெனிஃபர் தன் இடது தோளில் தொங்கிக் கொண்டிருந்த 'வேனிடி பேக்'கை வலது தோளுக்கு மாற்றிக் கொண்டே கேட்டாள்.

"இந்த ஏரியாவில் அபார்ட்மெண்ட் ஏதா வது வாடகைக்குக் கிடைக்குமா?"

"எதுக்கு...?"

"கல்யாணத்துக்கப்புறமும் நீயும் நானும் தனித்தனியா இருக்க முடியுமா? ஒரு வாரத்துக்குள்ளே இதே ஏரியாவில் ஒரு நல்ல வீடோ அபார்ட்மெண்டோ பார்த்துக் குடி யேறிட வேண்டியதுதான். அபார்ட்மெண் டாக இருந்தா பரவாயில்லை..."

"எனக்குத் தெரிஞ்ச வீட்டு புரோக்கர் ஒருத்தர் இருக்கார். அவர்கிட்டே சொல்லி வைக்கிறேன்."

"வீடு பார்க்கிறது உன்னோட பொறுப்பு வருண். நான் வரட்டுமா."

ஜெனிஃபர் கிளம்பினாள்.

"ஹாஸ்டலுக்குத் தனியாகவா போறே...?"

"வரும்போது தனியாத்தானே வந்தேன்..."

"இந்நேரத்துக்கு பஸ்..."

"கடைசி பஸ் கிடைக்கும்."

"பஸ் ஸ்டாப் வரைக்கும் நான் வர்றேன்."

"வேண்டாம் வருண். உன்னைப் பார்த்தா டயர்டா தெரியுது. ரெஸ்ட் எடு..."

"நோ... நோ...! பஸ் ஸ்டாப் வரைக்கும் நானும் வர்றேன். ராத்திரி வேளை... மெட்ராஸ் சரியில்லை..."

வருண் மறுபடியும் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பினான்.

இருவரும் சிந்தாதிரிப்பேட்டையின் இருட்டான சந்துகளில் நடந்து, மெயின் ரோட்டின் வெளிச்சத்தில் நனைந்து கொண்டிருந்த பஸ் ஷெல்டருக்குக் கீழே வந்து நின் றார்கள். ஒரு பெரியவரும் சிறுவனும் பஸ்ஸை எதிர்பார்த்து ரோட்டின் கோடியில் பார்வையைப் பதித்து இருந்தார்கள். வருணும் ஜெனிஃபரும் ஷெல்டரில் இருந்த சிமிண்ட் பெஞ்சில் பக்கம் பக்கமாய் உட்கார்ந்தார்கள்.

"வருண்..."

"ம்..."

"உன்னோட ஊட்டி வேலை கன்ஃபர்ம்டுதானா...?"

"நாளைக்கு வேலைக்குப் போனால்தான் தெரியும்."

"நமக்குக் கல்யாணமாயிட்ட விஷயத்தை உங்க எம்.டி. கிட்டே சொல்லிப் பாரேன்..."

"பார்க்கலாம்..."

"வருண்..."

"என்ன?"

"உனக்கு வேலை கிடைச்ச சந்தோஷமும் சரி... நமக்குக் கல்யாணம் நடக்கப் போகிற சந்தோஷமும் சரி... உன் முகத்துல மிஸ்ஸிங். மத்தியானம் பார்த்தப்பகூட சந்தோஷமா இருந்தே! உனக்கு என்னாச்சு... உடம்புக்கு ஏதாவது முடியலையா...?"

''அதெல்லாம் ஒண்ணும் இல்லை. காலையிலிருந்து கொஞ்சம் அதிகப்படியான அலைச்சல். தூங்கி எந்திரிச்சா சரியாயிடும்.''

''உண்மையான காரணம் இதுதானா..?''

''நான் எதுக்காக பொய் சொல்லணும்... அதோ பஸ் வந்தாச்சு.''

ஹெட்லைட் வெளிச்சத்தால் ரோட்டை மெழுகிக் கொண்டு வந்த சிட்டி பஸ், ஷெல்டர்க்குப் பக்கத்தில் வந்ததும் நின்றது.

ஜெனிஃபர் ஓடிப் போய் ஏறிக் கொண்டாள். ''வருண்! நாளைக்குக் கலையில் அஞ்சு மணி...''

''வந்துடறேன்...''

வருண் கையசைத்துக் கொண்டிருக்கும் போதே பஸ் வேகம்பிடித்து, பின் பக்க சிவப்பு விளக்குகளைக் காட்டிக் கொண்டே திருப்பத்தில் மறைந்தது.

சில விநாடிகளுக்கு வருண் அப்படியே நின்று கொண்டிருந்துவிட்டு 'பின்' தன் வீட்டை நோக்கி மெல்ல நடைபோட்டான்.

மத்தியானத்திலிருந்து இந்த நிமிஷம் வரைக்கும் நடந்த சம்பவங்களால் மனசு கனத்துப் போயிருந்தது. இதயத்தோடு சேர்த்து சயக்குண்டை கட்டிவிட்டது போன்ற உணர்வு.

பஸ் ஸ்டாப்பை விட்டு ஐம்பதடி தூரம் நடந்திருப்பான். பக்கவாட்டு இருட்டிலிருந்து அந்தக் குரல் கேட்டது. ஆண் குரல்.

''வருண்...!''

வருண் திடுக்கிட்டுப் போய்த் திரும்பிப் பார்க்க, இருட்டிலிருந்து வெளிப்பட்டார் இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன்.

**ம**னோன்மணி ஒரு சின்னப் புன்னகையோடு யமுனாவைப் பார்த்தாள்.

''தயா க்ரூப் மானேஜிங் டைரக்டர் தயானந்தை எஸ்டேட் கேஸ் சம்பந்தமாய் இரண்டு தடவை சந்திச்சுப் பேசியிருக்கேன். மனிதர் ரொம்பவும் நல்ல டைப். அவர் க்ரூப் கம்பெனியில் நீ வேலை பார்த்திருக்கேங்கிறது உனக்குச் சாதகமான விஷயம். அந்த ஃபேக்டரியின் எஸ்.எம். எனக்கு நல்ல பழக்கம். அவர் மூலமா லீலாகிருஷ்ணன் சம்பந்தப்பட்ட விஷயங்களை என்னால கறக்க முடியும்.''

''என்னைப் பத்தின எந்த விஷயமும்...?''

''பயப்படாதே யமுனா. நான் யார்கிட்டேயும் சொல்லமாட்டேன். உனக்கும் சரி, உன்னோட ஃபேமிலிக்கும் சரி, எந்த பாதிப்பும் வராமே பார்த்துக்க நானாச்சு. நீ வீட்டுக்குக் கிளம்பு. வெளியே போயிருக்கிற உன்னோட மாமனாரும் மாமியாரும் வந்துடப் போறாங்க.''



'' 'மனிதனும் குரங்கும்'ன்ற படத்துல நான் நடிக்கப் போறேன்...''

''அப்ப, மனிதனா நடிக்கப் போறது யாரு..?''

- வி. சாரதி டேச்சு

யமுனாவின் மனசுக்குள் தைரியம் முண்டியடித்துக் கொண்டு நுழைய, அவள் எழுந்தாள்.

மனோன்மணி சொன்னாள். ''வீட்ல உனக்கு ஏதாவது பிரச்னைன்னா செல்ஃபோன்ல என்னைக் கூப்பிட்டுப் பேசு. வீட்டு போன் பேரலல் லைனா... இல்லே தனித்தனி லைனா?''

''பேரலல் லைன்...''

''அப்படீன்னா கீழே யாராவது போன் எடுக்குறாங்களான்னு பார்த்துட்டுத்தான் நீ போன் பேசணும்''

''ஆமா...''

''சரி. ஜாக்கிரதை. நானாக உனக்கு போன் பண்ணமாட்டேன். சரளா மூலமா உன்னைக் காண்டாக்ட் பண்ணிக்கிறேன். நீ வீட்டுக்குப் போனதும் மறக்காமே சரளாவுக்குப் போன் பண்ணி விஷயத்தைச் சொல்லிடு.''

யமுனா தலையாட்டி விட்டு அர்ச்சனைக் கூடையோடு, கோயிலிலிருந்து வெளிப்பட்டாள். வெய்யில் உச்சந்தலையில் அமிலத்தை ஊற்றிய இனுசில் தகித்தது. செருப்பணிந்த கால்களுக்குக் கீழே அனல் பறந்தது.

வேகவேகமாய் நடை போட்டவள், கோயில் இருந்த தெருவைத்தாண்டி பிரதான சாலையின் வளைவுக்கு வந்ததும் எஸ்.டி.டி. பூத் கண்ணில்பட, அவள் மனத்துக்குள்

அந்த எண்ணம் தோன்றியது.

'வீட்டுக்குப் போய் சரளாவுக்கு போன் செய்வதைவிட எஸ்.டி.டி. பூத்தில் இருந்தே போன் செய்து விஷயத்தைச் சொல்லிவிட்டால் என்ன?'

சில விநாடி யோசனைக்குப்பின் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு எஸ்.டி.டி. பூத்துக்குள் நுழைந்தாள்.

போலியோவால் கால்கள் ஊனமான அந்த பூத் பெண் சிந்திய பரிச்சயப் புன்னகைக்கு பதில் புன்னகையொன்றை கொடுத்துவிட்டு, கண்ணாடி கூண்டுக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டாள். வியர்த்த விரல்களோடு ரிஸீவரை எடுத்து டயல் செய்ய, மறுமுனையில் சரளா கிடைத்தாள்.

"என்ன யமுனா..?"

"கோயிலுக்குப் பக்கத்தில் இருக்கிற எஸ்.டி.டி. பூத்திலிருந்து பேசறேன்."

"இன்ஸ்பெக்டரைப் பார்த்தியா...?"

"ம்... பார்த்தேன்..." என்று தாழ்ந்த குரலில் ஆரம்பித்த யமுனா லாயர் மனோன்மணியைப் பற்றியும் சொல்ல, சரளா பதற்றமானாள்.

"என்னடி இப்படி பண்ணிட்டே?"

"ஏன்...?"

"விஷயம் யாருக்குமே தெரியாமே இருந்தா நல்லதுன்னு நினைச்சேன்."

"லாயர் மனோன்மணி ரொம்பவும் நல்லவங்க. லீலா கிருஷ்ணன் விவகாரத்தைச் சத்தம் இல்லாமே முடிச்சுக்கலாம்ன்னு சொல்லியிருக்காங்க."

"எனக்கென்னமோ பயமாயிருக்கு. லீலா கிருஷ்ணனைத் தெரியாதுன்னு இன்ஸ்பெக்டர் பால் பாண்டியன்கிட்டே சொல்லியிருக்கே. தெரியும்ன்னு லாயர் மனோன்மணிகிட்டே சொல்லியிருக்கே. அவங்க இரண்டு பேரும் சந்திச்சுப் பேசும்போது உண்மை தெரிஞ்சு இன்ஸ்பெக்டர்க்குக் கோபம் வராதா..?" சரளா பேசிக் கொண்டிருக்கும்போதே யமுனாவின் பார்வை ஏதேச்சையாய்க் கண்ணாடி கூண்டுக்கு வெளியே பாய -

ரத்த ஓட்டம் இடறியது.

ரோட்டின் எதிர்ப்பக்கம் இருந்த பெட்டிக் கடை வாசலில், தாடி வைத்த ஒருவன் யமுனாவையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

## கங்கிராட்ஸ்!

'ஏட்டையா செஞ்சதைச் சொல்லையா' - திடீர்ப் பரிசுப் போட்டி - 3ல் வெற்றி பெற்ற பாண்டி நடராசனுக்கு (31, குறிஞ்சி வீதி, சோலை நகர், பாண்டிச்சேரி - 3)

**கங்கிராட்ஸ்!**

## ஏட்டையா செஞ்சதைச் சொல்லய்யா

"துப்பு துலக்குறதுலே நம்ம ஏட்டையா ஏகாம்பரத்துக்கு ஈடு அவரேதான்!"

"எப்படிச் சொல்றே?"

"பின்னே என்னய்யா! இன்னைக்கு மாமூலா வந்த எழுநூத்து சொச்சம் ரூபாயிலே, அஞ்சு ரூபா செல்லாத நோட்டைக் கொடுத்தது சிதம்பரந்தான் என்று கரெக்டா கண்டு பிடிச்சுட்டாரே!"

## ரஜினியின் ரகசியச் செய்தி!

இந்தத் தேர்தலில் ரஜினியின் நிலைப்பாடு பற்றி பல கிசுகிசுக்கள் வெளிவந்து ஓய்ந்திருக்கும் இந்தச் சமயத்தில், ரசிகர் மன்றங்களுக்கு ரஜினி தரப்பிலிருந்து செய்தி போயிருக்கிறது. மன்றத் தோழர்கள் அந்தந்தப் பகுதியில் உள்ள வேட்பாளர்களின் தகுதியை கணித்து, கட்சி சார்பு பார்க்காமல் நல்லவர்களா என்று பார்த்து ஆதரவு தரலாம் என்ற செய்திதான் அது. இந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட தி.மு.க. பிரமுகர்கள் சிலர் அதிர்ந்துபோய், தேர்தல் நெருக்கத்தில் தி.மு.க. அணிக்கு ஆதரவாக ரஜினி அறிக்கை வெளியிட வேண்டுமென்று 'அழுத்தம்' கொடுக்கத் துவங்கியிருக்கிறார்கள். அனுதாப அலையில் அழுது புரண்டு வரும் 'ஜெ'யைத் தடுத்து நிறுத்த ரஜினி விடும் அறிக்கை இவ்விதழ் வெளியாகும் முன் வெளியாக வாய்ப்பிருக்கிறது.



– கௌசி

படம் : ராஜன்

"பின்னாடி என்ன கலாட்டா?"

"வித்தவுட் டிக்கெட்டுல யாரோ ஏறிட்டாங்களாம். அவங்களை எங்கே இறக்கி விடறதுன்னு தெரியலையாம்."



## சமீபத்தில் டெனிஸ் என்ற அமெரிக்க கோடீஸ்வரர், ரஷ்ய விண்வெளிக் கப்பலில் ஏறி ஜாலியாக ஸ்பேஸ் டூர் போயிருக்கிறார்... அந்த ஃபாஷன் தொடர்ந்தால்...



"'பாயிண்ட் டு பாயிண்ட்', 'பை பாஸ் ரைடர்' அப்படியெல்லாம் போட்டும், நமக்கு கூட்டம் வரலை. அந்த கிராஃப்ட்டுக்கு மட்டும் கும்பல் சேருதே?"

"அவங்க டிரிப்புல ரம்பை, ஊர்வசியோட நடனத்தை 'லைவ்'ஆ காட்டறாங்களாம்!"



"ஃபுட் போர்டுல யாருப்பா? மேல ஏறு!"

# ல்ஷைமல்...



"வானத்துல வெள்ளை உடை தேவதைகளைப் பார்க்கலாம்னு சொன்னீங்களே!"

"ஸாரி சார். எல்லாரையும் பாரதிராஜா படத்தோட ஷூட்டிங்குக்கு புக் பண்ணிட்டாங்க."



"கைடு கிட்டே நம்ப சுபாலி என்னய்யா தகராறு பண்றான்?"

"மெட்ராஸ் தமிழ்ல டிராவல் கமெண்ட்ரி தரணுமாம்."

கற்பனை : அனு
படங்கள் : செல்வம், சேகர்

# ...ஸ்பேஸ்!



"உங்கள் கட்சித் தலைவரின் யோக்கியதை தெரியாதா? விண்வெளியில் 35000 ஏக்கரில் உல்லாச ஹோட்டல் கட்ட நிலம் எப்படி வந்தது?"






"விண்வெளியில டிராவல் பண்ணினா இலவசம்னு கொடுத்தாங்க... இப்ப என்ன பண்றதுன்னு தெரியலை சரசு..."



# காதல் ஒரு கேடா?

## 'ஊய் ஊய்' பேர்வழிகள்...



"ச்சே... டீன்ஏஜ் பையன்கள் சுத்த மோசம்... அவர்களைப் பற்றி உங்களுக்குப் பிடிக்காத விஷயங்கள் ஏதாவது பத்து சொல்லுங்கள்!" என்று டீன்ஏஜ் பெண்களின் மனத்தைக் குளிரவைக்கப்போக, 'ஒரு தனி சப்ளிமெண்ட்டாக போடுங்கள்' என்று பிடித்துக் கொண்டுவிட்டார்கள். "எதற்கும் வாசகர்களை ஒரு வார்த்தை கேட்டுவிட்டு சப்ளிமெண்ட் ஐடியாவைப் பற்றி ஒரு முடிவுக்கு வருவோம், இப்போதைக்கு பத்தோடு அட்ஜஸ்ட் செய்து கொள்ளுங்கள்!" என்று சமாதானப்படுத்த வேண்டியதாகிவிட்டது...

சினிமாவில், கதாநாயகி செண்டிமெண்ட்டலாக ஏதாவது டயலாக் பேசினால் 'ஊய் ஊய்' என்று இவர்கள் ஏன் கத்துகிறார்கள் தெரியுமா? காட்சி இவர்கள் மனத்தைத் தொடவில்லை என்பதற்காக இல்லை, அவள் இன்னும் கொஞ்சம் பேசினால் இவர்கள் அழுதுவிடுவார்கள், அந்த நிலையைத் தவிர்ப்பதற்காகத்தான்! ரோலர் கோஸ்டரில் போகும் பொழுது பயத்தைச் சமாளிக்க எல்லோரும் கத்துவதில்லையா, அதேபோல! இந்த ரகசியம் நமக்குத் தெரியாது என்று நினைத்துக் கொண்டு 'ஐயோ... சென்ட்டிமெண்ட் படம்னாலே போர்!' என்று இவர்கள் ஸ்டைல் பண்ணும்போது எரிச்சலாக வருகிறது!

எங்களுடைய உடைகள், நாங்கள் தேர்வு செய்யும் கோர்ஸ்கள், ஹாபியாக நினைக்கும் விஷயங்கள்... இப்படி ஒவ்வொன்றையும் நையாண்டி செய்து

கொண்டே இருப்பதுதான் இவர்களுக்கு வாழ்க்கையிலேயே ஒரு முக்கியமான பொழுதுபோக்கு. காரணம், இந்தப் பொழுது போக்குக்கு பணம் செலவழிக்க வேண்டாம். பௌலிங்பாயிண்ட்டுக்குப் போய் நோட்டைக் கழற்றினால் நயினா பெல்லைக் கழற்றிவிடுவாரே! வாஜ்பாயின் முட்டியைப் பற்றிக் கேட்டுப்பாருங்கள், முழியே கழண்டு வெளியே வந்து விழுந்துவிடும்படி முழிப்பார்கள், ஆனால், 'மிடி' என்பது முட்டிக்குக் கீழே இவ்வளவு தொங்கவேண்டும்' என்று நாங்கள் புதிதாக வாங்கிய மிடியை மட்டும் வக்கணையாக விமர்சிக்கத் தெரியும்!



நடமாடும் நையாண்டி தர்பார்கள்...

வாழ்க்கையின் ஏதாவதொரு கட்டத்தில் உங்களோடு யாராவது பேசவேண்டும் என்ற தேவை ஏற்படாமலே யேவா போய்விடும்?

**ஹா**லிவுட், போலிவுட், கோலிவுட் நடிகர்களுக்கு வேண்டுமானால் கிருதாக்களும் குறுந்தாடியும் வசீகரமாக இருக்கலாம். ஆனால், இவர்களுக்கும் அது பொருந்தும் என்று எந்த பிரஹஸ்பதி சொன்னான்? திடீரென்று சில சமயம் இவர்களைப் பார்க்க நேரும் பொழுது, 'அடடா, கெமிஸ்ட்ரி லாபில் ஏதாவது அசம்பாவிதம் நடந்து, முகத்தில் ஏதேனும் பட்டுவிட்டதா?' என்று கேட்க எங்கள் நாக்கு நுனி வரை வந்துவிடும்



வசீகரா...

**எ**ங்களுடைய முதல் எதிரி எது தெரியுமா? டீவியும் அதில் ஒளிபரப்பப்படும் கிரிக்கெட் மேட்சுகளும்தான். வாழ்க்கையில் எதை வேண்டுமானாலும் விட்டுக் கொடுக்கத் தயாராய் இருப்பார்கள் இவர்கள், இந்த 'ஊமைக் கோட்டான் ஜந்து'வுக்கு முன்னால் ஒரு பத்து நிமிடம் உட்கார்ந்து கொள்ளும் 'பெரும் பேறு' கிடைக்கும் பட்சத்தில். என் அருமை நண்பர்களே! டி.வி.யால் உங்களோடு பேச முடியாது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.



'ஊமைக் கோட்டான்' பித்து...

வார்த்தைகளை அடக்க நாங்கள் எவ்வளவு கஷ்டப்படுகிறோம் தெரியுமா?



## 'காம்பஸ்'ஐ முழுங்கியவர்கள்...

உலகத்தில் உள்ள மூலை முடுக்குகளுக் கெல்லாம் போவதற்கு இவர்களுக்குத்தான் ரூட் தெரியும், காரணம், ஆண்டவன் இவர் 'களைப் படைக்கும்போதே வயிற்றில் ஒரு 'காம்பஸ்'ஸோடு படைத்திருக்கிறான்!- இது தான் இவர்களின் தாழ்மையான (மேலான) அபிப்ராயம். நானும் என் பாய்-ஃப்ரெண்டும் ஒரு ரிசப்ஷனுக்குப் போய் கொண்டிருந்தோம். சர்-சர் என்று தப்புத்தப்பான கட்டிங்குகளுக்குள் எல்லாம் வண்டி பறந்தது. "இந்த வழி இல்லை... இல்லை..." என்று நான் உச்சஸ்தாயியில் கத்திக் கொண்டிருக்கிறேன், கேட்டால் தானே? கடைசியில், கல்யாண பார்ட்டி, மண்டபத்துக்கு பில் செட்டில் பண்ணும் காட்சியில்தான் அங்கு பிரவேசித்தோம். அதாவது, ஒரு ஃபங்ஷனுக்கு லேட்டாகப் போனாலும் பரவாயில்லை, ஆனால் ஒரு பெண்ணிடம் ரூட் கேட்டு ஒழுங்காகப் போய்ச் சேர்ந்தோம் என்று இருக்கக் கூடாது. பார்த்தீர்களா இவர்கள் லாஜிக்கை?

## ஸ்வீட் மாஸ்டர்கள்...

காரியம் ஆகவேண்டும் என்கிறபோது இவர்கள் பேசும் வார்த்தைகளைக் கேட்க வேண்டுமே... அவற்றை இலேசாகப் பிழிந் தால் போதும், ஒரு டன் கேரட் அல்வா கிளறிவிடலாம். அதுவே தினசரி வாழ்க் கையில், காரியம் ஏதும் ஆகவேண்டும் என்கிற நிலைமை இல்லாதபோது அதே இனிமையுடன் இரண்டு வார்த்தைகளாவது பேசச் சொல்லுங்கள்-'இனிமை'யில் உள்ள 'னி'க்கு எத்தனைச் சுழி போட வேண்டும் என்று கேட்பார்கள்?

ஆண் குலத்தின் எந்தப் பிரதிநிதியும் இவர்களுடைய கர்ல்-ஃப்ரெண்டிடம் அசந்து மறந்து கூட பேசிவிடக் கூடாது. 'இவள் என்னுடையவள்' என்று ஒரு ரப்பர் ஸ்டாம்ப் செய்து அவனின் மூக்கு, கண், கை, கால்

## மனுநீதி...



மேல் எப்படிக் குத்தாமல் விடுகிறார்களோ தெரியவில்லை. ஆனால், மோனல் முதல் சூப்பர் மார்க்கெட் சேல்ஸ் கர்ல் சோனல் வரை, இவர்கள் பாரபட்சமின்றி விடும் ஜொள்ளை நாம் கண்டும் காணாதது மாய் இருந்துவிட வேண்டும். 'நியாயம்' என்ற வார்த்தையை ஆசிரியர் சொல்லிக் கொடுக்கும் அன்று இவர்கள் எல்லாம் ஸ்கூலுக்கு லீவு போட்டு விட்டார்களா?

## வியர்வை ஃபாக்டரிகள்...

மணிக்கணக்காக கேம் விளையாடி விட்டு தொப்பலாக நனைந்து போன டிஷர்டுடன் 'பேஷன் ஷோ நடை' நடந்து

ஒரு பெண்ணுக்கு முன்னால் போய் நின்றால் அவள் சொக்கிப் போய்விடுவாள் என்கிற எண்ணம் எல்லாம் இவர்களுக்கு எப்படி வந்து தொலைக்கிறது? இவர்களின் வேர்வை நாற்றத்தைப் பொறுக்க முடியாமல் நாங்கள் மயங்கிப் போனால் தான் உண்டு!

எமோஷனல் பிரச்னைகள் என்று வரும்பொழுது 'ஏன் அப்படிச் சொன்னீர்கள்?' என்று மடக்கினோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். "நானா.. அப்படியா சொன்னேன்?... அப்படிச் சொன்னதாகக் கொஞ்சம்கூட ஞாபகம் இல்லையே..." என்று ஏதோ தன்னுடைய ஞாபகமறதியை உண்மையிலேயே நொந்து கொள்பவனைப் போல அப்பாவித்தனமாக நடித்து தப்பித்துக் கொள்வதில் மன்னர்கள். மன்னாதி மன்னர்களே! பெண்களும் இதே யுக்தியைக் கையாண்டால் உங்கள் கதி என்ன என்று கொஞ்சமாவது யோசித்துப் பார்த்தீர்களா?



**மன்னாதி மன்னர்களே...**

ஏதாவது ஒரு விஷயத்தில் கமிட்மெண்ட் கொடுக்கச் சொல்லுங்கள்– துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று ஓடி விடுவார்கள். இவர்களைப் பொறுத்தவரை கமிட்மெண்ட் என்பது தற்கொலைக்குச் சமானம். இவர்களுக்கெல்லாம் காதல் ஒரு கேடா?



**காதலாம் காதல்...**

உங்களுடைய முழுப்பெயர்களை வெளியிடலாமா என்று இழுத்தவுடன் "வெளியிட்டால், அதைப் படித்துவிட்டு இவர்கள் எங்கள் தலையைச் சீவிவிடுவார்களா என்ன, ஆனால் பெற்றோர்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுத்து முதல் எழுத்தை மட்டும் தருகிறோம்!" என்று, 'நித், சுஜா, வீ, மா, சங், மஞ்' என்ற பெயர்ப்பட்டியலைத் தந்துவிட்டு, சூடாக திரும்பிப் போனது பெண்கள் அணி.

தொகுப்பு:
**கிருஷ்**

**வழக்கம்போல், பேட்டிக்கும் புகைப்படங்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!**



# பொன்னியின் செல்வன்

எழுபத்து ஏழாம் அத்தியாயம்

## நெடுமரம் சாய்ந்தது!

ஆஸ்தான மண்டபத்துக்குள் அந்தப்புரப் பெண்கள் வருவதற்கென்று ஏற்பட்ட வாசல் வழியாக வந்தியத்தேவன் புகுந்தான். அதனால் அவன் முதலில் அங்கிருந்த பெண்மணிகளைப் பார்க்கும்படி நேர்ந்தது. அவர்களில் எல்லாருக்கும் பின்னால் ஒதுங்கி நின்ற பூங்குழலி ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தபோது, வந்தியத்தேவன் ஈரத் துணிகளுடன் அலங்கோலமாக உட்புகுந்ததைக் கண்டு திடுக்கிட்டாள். அவனைப் பார்த்தவுடனேதான் வந்தியத்தேவனும் மணிமேகலைக்கு நேர்ந்த விபத்தைப் பற்றிக் கூறினான்.

அது அவளுடைய காதில் விழுந்தது; அவள் அருகில் இருந்த இளையபிராட்டி குந்தவை, வானதி இவர்கள் காதிலும் விழுந்தது. அவர்கள் மூவரும் வந்தியத்தேவன் புகுந்த வாசல் வழியாக விரைந்து சென்றார்கள். தண்ணீர் சொட்டியிருந்த அடையாளத்தைக் கொண்டே அவன் வந்த வழியைக் கண்டுபிடித்துக் கொண்டு சென்றார்கள்.

வந்தியத்தேவனுடைய வார்த்தைகள் அந்த மண்டபத்திலிருந்த மற்றவர்களின் காதில் தெளிவாக விழவில்லை. "காப்பாற்றுங்கள்!" என்ற வார்த்தை மாத்திரம் சிலர் காதில் கேட்டது. கந்தமாறன் – பார்த்திபேந்திரன் இவர்கள் காதில் அந்த வார்த்தைகூட விழவில்லை. ஏதோ உருத் தெரியாத அலறல் சத்தம் மட்டுமே அவர்களுக்குக்

அமரர் கல்கி

கேட்டது.

முதலில் அவ்விருவரும், அப்படி அந்தப்புர வழியில் புகுந்து வந்த உருவத்தை, இறந்துபோன வந்தியத்தேவனின் ஆவி வடிவமோ என்று நினைத்தார்கள். அகால மரணமடைந்தவர்களின் ஆவிகள் இந்த உலகை விட்டுப் போகாமல் இங்கேயே சுற்றி அலையும் என்ற நம்பிக்கை அக்காலத்தில் பலர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. "வடவாறு திரும்பினாலும் திரும்பும்!" என்று முதன்மந்திரி அநிருத்தர் கூறி வாய் மூடுவதற்குள் வந்தியத்தேவன் சொட்ட நனைந்த ஈரத் துணிகளுடன் அங்கே வந்து தோன்றியதும், அவர்களுக்கு அத்தகைய பிரமை ஏற்படக் காரணமாயிருந்தது.

ஆனால் வந்தியத்தேவனைத் தொடர்ந்து வந்த சேவகர்கள் பரபரப்புடன் உள்ளே புகுந்து அவனைப் பற்றிக்கொண்டதும், மேற்கூறிய பிரமை நீங்கியது.

"சக்கரவர்த்தி! மன்னிக்க வேண்டும்! இந்தப் பைத்தியக்காரன் அரண்மனைப் படித்துறைக் கதவு வழியாகப் புகுந்து ஓடி வந்தான். நாங்கள் தடுத்தும் கேட்கவில்லை!'' என்று அச்சேவகர்கள் சொல்லி விட்டு, வந்தியத்தேவனைத் தங்களுடன் இழுத்துச் செல்ல முயன்றார்கள்.

அம்மம்மா! இந்த வந்தியத்தேவனுடைய உயிர்தான் எவ்வளவு கெட்டியானது? எப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்தும் எப்படியோ தப்பித்து வந்து விடுகிறானே? – இந்த வியப்பு பார்த்திபேந்திரன் உள்ளத்தில் எழுந்தது. அத்துடன் குரோதமும் கொழுந்து விட்டெரிந்தது.

எங்கே போகிறோம் என்பது தெரியாமல் அவன் ஓடிவந்து இங்கே சிக்கிக் கொண்டிருக்கிறான்! இனி ஒருமுறை அவன் தப்பித்துச் செல்வதற்கு இடந்தரலாகாது. இவ்வாறு ஒரு கணத்தில் முடிவு செய்து கொண்ட பார்த்திபேந்திரன், சக்கரவர்த்தியின் சந்நிதானம் என்பதையும் மறந்து பாய்ந்து சென்று வந்தியத்தேவனுடைய தோள்களில் ஒன்றைப் பலமாகப் பற்றிக் கொண்டான்.

"இவன் பைத்தியக்காரன் அல்ல; கொலைகாரன்! ஆதித்த கரிகாலரைக் கொன்ற வஞ்சகத் துரோகி!" என்று கூவிக்கொண்டே, அவனைப் பிடித்து இழுக்க முயன்ற சேவகர்களை ஜாடையினால் அப்புறப்படுத்தினான்.

பார்த்திபேந்திரனைப் பின் தொடர்ந்து கந்தமாறனும் ஓடிச்சென்று வந்தியத்தேவனுடைய இன்னொரு தோளையும் இறுகப் பிடித்துக்கொண்டான்.

இருவருமாக அவனை இழுத்துக் கொண்டு வந்து சுந்தர சோழ சக்கரவர்த்தி அமர்ந்திருந்த தர்ம பீடத்துக்கு எதிரில் நிறுத்தினார்கள்.

சக்கரவர்த்தி வந்தியத்தேவனை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, "பால் வடியும் முகமுள்ள இந்தப் பிள்ளையா என் மகனைக் கொன்றதாகச் சொல்கிறீர்கள்? என்னால் நம்ப முடியவில்லையே? இவன்தானே ஆதித்த கரிகாலனிடமிருந்து எனக்கு ஓலை கொண்டு வந்தான்?'' என்றார்.

"ஆம், ஐயா! இவன்தான் ஓலை கொண்டு வந்தான்! இவன்தான் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே மூடு பல்லக்கில் வந்த நந்தினி தேவியைச் சந்தித்து இரகசியம் பேசினான். இவனேதான் இக்கோட்டையிலிருந்து முன்னொரு தடவை தப்பி ஓடினான். இப்போதும் பாதாளச் சிறையிலிருந்து தப்பித்து ஓடினான்!" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"என் முதுகிலே குத்திக் காயப்படுத்தி விட்டுத் தப்பி ஓடியவன் இவன்தான்!" என்று சொன்னான் கந்தமாறன்.

முதன்மந்திரி அநிருத்தர், "ஏன், அப்பா! இவனைத்தானே நீ முதுகில் வேலெறிந்து கொன்றதாகச் சற்று முன் சொன்னாய்?" என்று கேட்டார்.

"ஆம்; சொன்னேன்! தாங்கள் இக்கொலைகாரனுக்கு ஒத்தாசை செய்து இவனை உயிர்ப்பித்துக் கொண்டு வந்து சேர்ப்பீர்கள் என்று நான் கண்டேனா?" என்றான் கந்தமாறன்.

பொன்னியின் செல்வர் இத்தனை நேரமும் செயலற்று நின்றார். வந்தியத்தேவன் மறுபடியும் தப்பி ஓடப் பார்த்து நதியில் குதித்திருக்கிறான் என்றும், நீச்சல் பயிற்சி போதிய அளவு பெறாத படியால் திரும்பக் கரையேறி இப்படித் தறி கெட்டு வந்து சபையில் புகுந்திருக்கிறான் என்றும் அவர் எண்ணிக் கொண்டார். இதனால் அவருக்கு வந்தியத்தேவன் மீது பிறந்த கோபம் தணிவதற்குச் சிறிது நேரம் ஆயிற்று.

கந்தமாறனுடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், பொன்னியின் செல்வர் கம்பீரமாக நடந்து முன்னால் வந்து வந்தியத்தேவன் அருகில் நின்றார்.

''தந்தையே! இந்த வல்லத்து இளவரசர் என் உயிருக்குயிரான நண்பர். இலங்கையிலும் நடுக்கடலிலும் எனக்கு நேர்ந்த அபாயங்களில் என்னைக் காப்பாற்றியவர். இவர் உயிர் பிழைத்து வந்தது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். இவர் மீது குற்றம் சுமத்துவது என் மீது குற்றம் சுமத்துவது போலாகும்!'' என்றார்.

அவருடைய குரலில் தொனித்த அதிகாரதோரணை எல்லாரையும் சிறிது நேரம் மௌனமாக இருக்கச்செய்தது.

பின்னர் முதன்மந்திரி அநிருத்தர், ''பொன்னியின் செல்வ! சிறிது யோசித்துப் பாருங்கள்! இளம் சம்புவரையரின் வேலுக்கு இரையாகி மாண்டதாகச் சொல்லப்பட்டவர் எப்படியோ உயிரோடு வந்து குதித்திருக்கிறார். அவர் மீது குற்றம் என்னமோ ஏற்கெனவே சாட்டிவிட்டார்கள். ஆகையால் விசாரித்து உண்மையைத் தெளிவாக்கி விடுவது நல்லதல்லவா?'' என்றார்.

பார்த்திபேந்திரன், ''ஆம், ஐயா! தாங்கள் நாளைச் சோழ சிங்காதனத்தில் ஏறப் போகிறவர்கள். எப்பேர்ப்பட்ட குற்றவாளியானாலும் தண்டிக்கவோ மன்னிக்கவோ தங்களுக்கு அதிகாரம் உண்டு. ஆனால் விசாரணையே வேண்டாம் என்று சொல்வது உசிதமா? வீண் சந்தேகங்களுக்கு இடம் தருமல்லவா?'' என்றான்.

''அத்துடன் நம் இளங்கோ இன்னொரு விஷயத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இளவரசர் தாம் சிங்காதனம் ஏறுவதற்காக இந்த வந்தியத்தேவனை அனுப்பித் தம் தமையனைக் கொல்லச் சதி செய்ததாக ஒரு வதந்தி பரவி வருகிறது. அதற்கு இடந் தரக் கூடாது அல்லவா?'' என்றான் கந்தமாறன்.

இதைக் கேட்டு அங்கிருந்தோர் அனைவரும் பயங்கரமடைந்து நின்றார்கள். சம்புவரையர் மட்டும் முன் வந்து கந்தமாறனைக் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்து, ''அடே மூடா! உன்னால் நமது பழமையான வம்சமே நிர்மூலம் ஆகிவிடும் போலிருக்கிறதே! சமய சந்தர்ப்பம் தெரியாமல் உளறுவதில் உனக்கு நிகர் வேறு யாரும் இல்லை!'' என்று கோபமாகச் சொன்னார்.

கந்தமாறன் அவனுடைய தந்தையை வெறித்து நோக்கினான். அவனுடைய உதடுகள் துடித்தன. அடுத்த நிமிஷம் அவன் என்ன செய்திருப்பானோ, என்ன சொல்லியிருப்பானோ, தெரியாது! நல்லவேளையாக அச்சமயத்தில் பெரிய பழுவேட்டரையர் ஓர் அடி முன் வந்து சம்புவரையரைப் பிடித்துக் கொண்டார். தொண்டையை முன் போல் கனைத்துக்கொண்டு, ''சம்புவரையரே, உமது மகன் செய்த மூடத்தனமான காரியங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் செய்துவிட்டான். சோழ சாம்ராஜ்யத்துக்கு ஒரு பெருந் தொண்டு செய்திருக்கிறான். அதைத் தெரிந்து கொள்ளும்போது தாங்களே அவனைப் பெற்றது குறித்துப் பெருமை அடைவீர்கள். கொஞ்சம் பொறுங்கள்! அவன் மீது சீற்றங் கொள்ள வேண்டாம்!'' என்று சொல்லிக்கொண்டே சம்புவரையரைப் பிடித்து இழுத்துச் சிறிது அப்பால் கொண்டு போய் நிறுத்தினார். பின்னர் இளஞ் சம்புவரையனைப் பார்த்து, ''நீ இந்த வந்தியத்தேவன் மீது வேல் எறிந்து கொன்றதாகச் சொன்னாய் அல்லவா? இவன்தான் அப்

போது குதிரை மேல் நதியைக் கடந்தவன் என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.

முதன்மந்திரி, "ஐயா! இது பற்றி என் சீடன் ஒரு வார்த்தை சொல்ல அனுமதிக்க வேண்டும்!'' என்றார்.

ஆழ்வார்க்கடியான் முன்னால் வந்து, ''பிரபுக்களே! என் குற்றத்தை



நான் ஒப்புக்கொள்கிறேன். இந்த வல் லத்து இளவரசர் குதிரை மேலேறி ஓடவே இல்லை. இவர் நமது உண்மை மதுராந்தகத் தேவரைக் கொலைகாரனி டமிருந்து காப்பாற்றி விட்டுக் காயம பட்டு விழுந்தார். இவரை நானே மூடு பல்லக்கில் ஏற்றிக் கோட்டைக்குள் கொண்டு வந்து சேர்த்தேன். நாலு



நாளாக இங்கேதான் இவர் இருந்து
வருகிறார். ஆகையால் இளஞ் சம்பு
வரையர் இவர் முதுகில் வேலெறிந்
திருக்க முடியாது!'' என்றான்.

பெரிய பழுவேட்டரையர், "நானும்
அப்படித்தான் ஊகித்தேன். சம்புவரை
யரே! உமது மகனுடைய தவறுகளை
யெல்லாம் மன்னித்து விடுங்கள்! சோழ
சாம்ராஜ்யத்துக்கு அவன் மகத்தான
சேவை செய்திருக்கிறான்! அவன் வேலெ
றிந்து கொன்றவன் வீர பாண்டியனு
டைய மகனாகவே இருக்க வேண்டும்.
அன்று மாலை முதல் பழைய மதுராந்த
கனைக் காணவில்லையல்லவா? ஓடிப்
போக முயன்றவன் அவனாகவே இருக்க
வேண்டும்; கடவுள் எத்தனை பெரிய
விபத்திலிருந்து இந்த இராஜ்யத்தைக்
காப்பாற்றினார்!'' என்று கூறி நிறுத்
தினார்.

இந்த வார்த்தைகளினால் ஏற்பட்ட
வியப்பும் திகைப்பும் தீர்வதற்குள் அந்த
முது பெருங் கிழவர் மேலும் கூறினார்:-

"சக்கரவர்த்தி! அடியேனுடைய
கடைசி வார்த்தைகளைச் சிறிது செவி
கொடுத்துக் கேளுங்கள்! தூமகேது தன்னு
டைய தீய காரியத்தைச் செய்துவிட்டு
மறைந்துவிட்டது. தங்கள் தீரப் புதல்வர்
ஆதித்த கரிகாலரும் மறைந்துவிட்டார்.
ஆனாலும் தங்கள் குலத்து முன்னோர்
களும் என் குலத்து முன்னோர்களும்
இரத்தம் சிந்தி உயிரைக் கொடுத்து
ஸ்தாபித்த சோழ சாம்ராஜ்யத்துக்கு நல்ல
காலம் இருக்கிறது; இன்னும் நெடுநாள்
இந்தச் சாம்ராஜ்யம் நிலைத்திருக்கப்
போகிறது; விரிந்து பரவி மகோந்நத
நிலையை அடையப் போகிறது. ஆகை
யினாலேயே, கதைகளிலேகூடக் கேட்
டறியாத பெரிய விபத்திலிருந்து இந்தச்
சோழ குலமும் சாம்ராஜ்யமும் தப்பியது.
அவ்விதம் தப்புவதற்கு முக்கிய காரண
மாயிருந்தவன், இந்த வாணர் குல வீரன்
வந்தியத்தேவன்தான்! இவன் மூல
மாகவே மோகத் திரையினால் மூடப்
பட்டிருந்த என் கண்கள் திறந்தன. சம்பு
வரையர் மாளிகையில் நாங்கள் நள்ளிர
வுக் கூட்டம் நடத்திய அன்று இவன்
தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தான்.
அன்றைய தினம் இந்தச் சிறு பையனுக்
குத் தெரியக் கூடாதென்று மூடி மறைத்து
ஒரு காரியத்தை நாம் செய்ய வேண்டி
யிருக்கிறதேயென்ற அவமான உணர்ச்சி
எனக்கு உண்டாயிற்று. பிறகு இவன்
தஞ்சைக் கோட்டைக்கு வெளியே
நந்தினியைச் சந்தித்துப் பேசியதாக என்
சகோதரன் கூறினான். நந்தினியின்
உதவியினாலேயே இவன் கோட்டையை
விட்டுத் தப்பிச் சென்றதாகவும் கூறி
னான். அதிலிருந்து என் உள்ளத்தில் சந்
தேகத்தின் முளை தோன்றி வளர்ந்து வந்
தது. என்னைச் சுற்றிலும் நடப்
பவற்றையும் அவற்றின் காரணங்களை
யும் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன்.
அடிக்கடி மாயை இருள் வந்து என்
அறிவை மூடினாலும் மீண்டும் மீண்டும்
உண்மை ஒளியின் கிரணங்கள் உட்
புகுந்து இருளைப் போக்க முயன்றன.
கடைசியில், துர்க்கா பரமேசுவரியின்
கிருபையினால் மதுரை ஆபத்துதவி
களின் சதியாலோசனையைப் பற்றி
அறிந்தேன். நானே மறைந்திருந்து அவர்
களுடைய பேச்சுக்களைக் கேட்டிரா
விட்டால், நம்பியே இருக்க மாட்டேன்.
அதற்குப் பிறகும், தங்கள் செல்வக்
குமாரி இளையபிராட்டி என் உள்ளத்தை
வேறு விதத்தில் குழப்பிவிட்டார். நந்தினி
அவருடைய சகோதரி என்றும்,
அவளுக்கு நான் தீங்கு இழைக்கக்கூடாது
என்றும் கூறினார். அவரும் ஒருவேளை
ஏமாந்திருக்க முடியுமோ என்று ஐய
முற்றேன். எனினும், மாறுவேடம் பூண்டு
கடம்பூர் சென்று உண்மையை அறிய
விரும்பினேன். காளாமுகச் சைவ வேடம்
தரித்தேன். புலித்தோல் ஆடையும் மண்
டையோட்டு மாலையும் அணிந்து சென்
றேன். பிரபு! காளாமுகச் சைவர்கள்
என்னை அவர்களுடைய தலைவனாகக்
கொண்டிருந்தார்கள். என் அவமானத்
தைக் கேளுங்கள். இந்தச் சோழ சாம்
ராஜ்யத்துக்கு நானே சக்கரவர்த்தியாக
வேண்டுமென்ற துரோகமான துராசை
யின் விதையை என் மனத்தில் நந்தினி
விதைத்தாள். காளாமுகக் கூட்டத்தார்
அந்தத் துராசைக்குத் தூபம் போட்டு
வந்தார்கள். மதுராந்தகருக்குப் பட்டம்
கட்டுவது போல் கட்டிவிட்டுப் பிறகு
அவரையும் துரத்தி விட்டு நானே சக்கர

வர்த்தியாகிவிட வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். அந்தக் காளாமுகர்களிலே ஒருவனான இடும்பன்காரி சம்புவரையர் அரண்மனையில் சேவகனாயிருந்தான். மதுரை ஆபத்துதவிகளுக்கும் அவன் ஒற்றனாக உதவி வந்தான். அவனைப் பயமுறுத்தி, அச்சமயம் கடம்பூர் அரண்மனையின் வேட்டை அறையில் மதுரை ஆபத்துதவிகள் இருப்பதை அறிந்தேன். ஆதித்த கரிகாலர் நந்தினியின் அறைக்குச் சென்றிருப்பதையும், மணிமேகலையும் வந்தியத்தேவனும் அங்கேயே ஒளிந்துகொண்டிருப்பதையும் அறிந்தேன். நந்தினிக்கும் கரிகாலருக்கும் நடக்கும் சம்பாஷணையை ஒட்டுக் கேட்டு அவர்களுடைய இரகசியத்தை அறியும் ஆசை என் உறுதியைக் குலைத்துவிட்டது. நந்தினியைப் பற்றிய உண்மையையும் அறிந்துகொள்ளலாம் என்ற ஆசை எழுந்தது. நந்தினியின் அறைக்குப் போக யாழ்க் களஞ்சியத்தின் மூலம் ஓர் இரகசிய வழி இருக்கிறதென்பதை அறிந்து அங்கே போய்ச் சேர்ந்தேன். நல்ல சமயத்திலேதான் போய்ச் சேர்ந்தேன். நந்தினியைப் பற்றிய உண்மையை அவள் வாயாலேயே சொல்லக் கேட்டு அறிந்தேன். ஆதித்த கரிகாலர் நடத்தையில் களங்கமற்றவர் என்றும் தெரிந்துகொண்டேன். நந்தினியும் அவளைச் சேர்ந்தவர்களும் வீரபாண்டியனுடைய சாவுக்குப் பழி வாங்குவதற்கு எவ்வளவு பயங்கரமாக திட்டமிட்டிருக்கிறார்கள் என்பதையும் அறிந்துகொண்டேன். அந்தச் சதி வெற்றி பெறாமல் தடுக்க முயன்றேன். ஆனால் விதியை என்னால் வெல்ல முடியவில்லை. கரிகாலர் என் கண் முன்னாலேயே உயிரற்றுக் கீழே விழுந்ததைப் பார்க்கும் துர்ப்பாக்கியம் பெற்றேன்...''

இவ்விதம் கூறிவிட்டுப் பெரிய பழுவேட்டரையர் தம் முகத்தைக் கையால் மூடிக்கொண்டு விம்மினார். அந்த விம்மலின் ஒலி, புயல் அடிக்கும்போது அலை கடலில் எழும் பேரோசையை ஒத்திருந்தது. யாரும் அச்சமயம் வாய் திறந்து பேசத் துணியவில்லை. அனைவருடைய உள்ளமும் அந்த வீரப் பெருங் கிழவரின் மாபெரும் துயரத்தைக் கண்டு இளகிப் போயிருந்தன.

பெரிய பழுவேட்டரையர் மேலும் மேலும் பொங்கி வந்த விம்மலைத் தமது வைரம் பாய்ந்த இரும்பு நெஞ்சின் உதவியால் அடக்கிக்கொண்டார். முகத்திலிருந்து கையை எடுத்து விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தார்.

''விதி வசத்தினால் ஆதித்த கரிகாலர் இறந்துவிட்டார். ஆனால் துர்க்கா பரமேசுவரியின் கருணையினால், அதே சமயத்தில் பேராபத்துக்குள்ளான பொன்னியின் செல்வர், விதியையும் மதியினால் வென்று உயிர் தப்பினார். பிரபு! சக்கரவர்த்தி! பிரம்மராயரே! என் அருமைத் தோழர்களான சிற்றரசர்களே! சோழ சிங்காதனத்தில் அருள்மொழி வர்மரை ஏற்றி வைத்து முடி சூட்டுங்கள்! அவர் மூலமாக இந்தச் சாம்ராஜ்யம் மகோந்நதத்தை அடையப் போகிறது!'' என்றார்.

முதன்மந்திரி அநிருத்தர், ''ஐயா! தங்கள் விருப்பம் நிறைவேறத்தான் போகிறது. பொன்னியின் செல்வர்தான் அதற்குத் தடையாயிருப்பார் என்று பயந்தோம். சோழ நாட்டின் அதிர்ஷ்டத்தினால் அவரே முடிசூட்டிக் கொள்ள இசைந்துவிட்டார்! ஆனால், ஆதித்த கரிகாலர் எப்படி இறந்தார் என்று தாங்கள் கூறவில்லையே?'' என்றார்.

''அதைப் பற்றி ஏன் கேட்கிறீர்கள்? கொன்ற கை யார் கையாயிருந்தால் என்ன? உண்மையில் அவருடைய மரணம் விதியினால் நேர்ந்தது!'' என்றார் அந்த வீரக கிழவர் நடுங்கிய குரலில்.

''அது தெரியாவிட்டால், இதோ குற்றம் சுமத்தப்பட்டு நிற்கும் வாலிபன் மீது ஏற்பட்டிருக்கும் சந்தேகம் நீங்காது. கரிகாலரின் மரணத்துக்காக இவனைத் தண்டிக்கும்படி நேரிடும்!'' என்றார் முதன்மந்திரி அநிருத்தர்.

''ஆகா! இவன்மீது குற்றம் சுமத்துவதா? யார் சுமத்துகிறார்கள்?''

"கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் சுமத்துகிறார்கள்!"

"ஆகா! முழுமூடர்கள்! கந்தமாறா! பார்த்திபேந்திரா! நீங்கள் இந்த வாலிபன் மீது குற்றம் சுமத்தக் காரணம் என்ன? எதைக் கொண்டு இவன் ஆதித்த கரிகாலரைக் கொன்றதாகச் சொல்லுகிறீர்கள்?"

இதற்கும் அநிருத்தரே பதில் கூறினார்:- "இவன் அச்சமயம் நந்தினி தேவியின் அந்தப்புரத்தில் ஒளிந்துகொண்டிருந்திருக்கிறான். மணிமேகலையும் அங்கே இருந்திருக்கிறாள். மணிமேகலைதான் கொன்றதாகச் சொல்லுகிறாள். அவ்விதம் இருக்க முடியாது. அவள் காட்டிய கத்தியில் இரத்தக்கறையே இல்லை. வந்தியத்தேவனைக் காப்பாற்றுவதற்காகவே அவள் அவ்விதம் சொல்லியிருக்க வேண்டும் அல்லவா! வந்தியத்தேவன் மறைவிடத்திலிருந்து கரிகாலரைக் கொன்றதை அவள் பார்த்திருக்கலாம் அல்லவா?"



"மணிமேகலை கொல்லவில்லை என்றால், வந்தியத்தேவன் மட்டும் எப்படிக் கொன்றிருப்பான்? எந்த ஆயுதத்தைக் கொண்டு?"

"இந்த ஆயுதத்தைக் கொண்டு! இரத்தம் தோய்ந்து காய்ந்திருக்கும் இந்தக் கூரிய திருகுக் கத்தியைக் கொண்டு!" என்று கூறிப் பார்த்திபேந்திரன் நாம் முன்னமே பார்த்திருக்கும் திருகுக் கத்தியைக் காட்டினான்.

வந்தியத்தேவன் கரிகாலருடைய உடலைத் தீப்பிடித்த மாளிகையிலிருந்து எடுத்து வந்து போட்டு விட்டுத் தானும் மூர்ச்சையடைந்து விழுந்தபோது, அவனி



டமிருந்த திருகுக் கத்தியைப் பார்த்தி பேந்திரன் எடுத்துப் பத்திரமாக வைத் திருந்தான். அதை இப்போது எடுத்துக் காட்டினான்.

பெரிய பழுவேட்டரையர் அவனை நோக்கி, "எங்கே, இப்படி அந்தக் கத்தியைக் கொடு!" என்று சொல்லி அதை வாங்கிக்கொண்டார்.

அதை நன்றாக உற்றுப் பார்த்துவிட்டு "ஆகா! இது இடும்பன்காரியின் கத்தி தான்!" என்று முணுமுணுத்தார்.

"கந்தமாறா! பார்த்திபேந்திரா! நீங் களும் நானும் இந்த வந்தியத்தேவனை மூன்று தரம் வலம் வந்து கும்பிட வேண்டும்! நந்தினியின் மோக வலையில் இந்தக் கிழவனைப் போலவே நீங்களும் விழுந்திருந்தீர்கள். ஆனால் இவன் ஒரு வன்தான் அந்த மாய வலையில் சிக்க வில்லை. இவன் இந்தக் கத்தியை எறிய வும் இல்லை; ஆதித்த கரிகாலரைக் கொல்லவும் இல்லை!"

"எதனால் அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?" என்று முதன்மந்திரி அநிருத்தர் கேட்டார்.

"ஆம்; நிச்சயமாகத்தான் சொல்லு கிறேன். இந்தக் கத்தியை எறிந்து கரி காலரைக் கொன்றவன் எவன் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும்!"

"யார்? யார்?"

"ஆம்; ஆம்! அதைச் சொல்லிவிட வேண்டியதுதான். சொல்லாவிட்டால் உங்கள் சந்தேகம் தீராது. எல்லாரும் கேளுங்கள். இந்த வாலிபன் யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்துகொண்டிருந்தான். நான் அதன் வழியாக இறங்கி வந்தேன். இவன் என்னைப் பார்த்துச் சத்தமிடக் கூடாது என்பதற்காகப் பின்னாலிருந்து இவன் கழுத்தைப் பிடித்து நெருக்கி னேன். இவன் விழி பிதுங்கி, உணர் விழந்து கீழே விழுந்து விட்டான். ஆதித்த கரிகாலரைக் கொன்றது யார் என்பது இவனுக்கு அச்சமயம் தெரிந்துகூட இருக்க முடியாது."

"யார்! யார்! கொன்றது யார்?"

"இந்தத் திருகுக் கத்தியை நான்தான் இடும்பன்காரியிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்தேன். இதை வீசி எறிந் தவன் நானேதான்! இந்த என்னுடைய வலது கரந்தான்! சோழச் சக்கர வர்த்திகளுக்கு முடி சூட்டிய பரம் பரையில் வந்த இந்தக் கரந்தான் கத்தியை எறிந்தது. ஆனால் இளவரசர் கரிகாலர் மீது எறியவில்லை. நந்தினியின் பேரில் எறிந்தேன். என்னை மோக வலை யில் ஆழ்த்தித் துரோகப் படுகுழியில் வீழ்த்திய அந்த மாயப் பிசாசைக் கொன்றுவிட எண்ணி எறிந்தேன். அது குறி தவறிக் கரிகாலர் மீது விழுந்தது...!"

"ஐயையோ!" 'ஆஹாஹா!" என்ற குரல்கள் பல அச்சபையில் எழுந்தன.

"நூறு ஆண்டு காலமாகப் பழுவூர்க் குலம் சோழ குலத்துக்குச் செய்திருக்கும் தொண்டுகளுக்கெல்லாம் களங்கம் உண்டு பண்ணிவிட்டேன். அந்தக் களங் கத்தை எப்படி நீக்கப் போகிறேனோ, தெரியவில்லை!"

"அண்ணா! இதோ அந்தக் களங் கத்தை நான் போக்குகிறேன்!" என்று சின்னப் பழுவேட்டரையர் கர்ஜித்து விட்டுத் தமது கத்தியை உருவிக் கொண்டு அண்ணன் அருகில் விரைந்து வந்தார்.

"சோழ குலத்துக்குத் துரோகம் செய் கிறவர்கள் யாராயிருந்தாலும் அவர் களைப் பழி வாங்குவதாக நீயும் நானும் சபதம் ஏற்றிருக்கிறோம். அந்தச் சப தத்தை இப்போது நானே நிறை வேற்றுவேன். உன்னை இந்தக் கணமே கொன்று நம் குலத்துக்கு நேர்ந்த பழியைத் துடைப்பேன்!" என்று சின்னப் பழுவேட்டரையர் கத்தியை ஓங்கினார்.

"வேண்டாம்! வேண்டாம்! இங்கே இரத்தம் சிந்த வேண்டாம்!" என்றார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

இளவரசர் அருள்மொழி வர் மரும் முதன்மந்திரி அநிருத் தரும் பாய்ந்து சென்று சின்னப் பழுவேட்டரை யரின் கைகளைப் பிடித்துக் கொண்டார்கள்.

அச்சமயத்தில் பெரிய பழுவேட் டரையர் கூறினார்: – "தம்பி! நம் குலத் துக்கு என்னால் நேர்ந்த பழியைத்

துடைக்கும் வேலையை உனக்கு வைக்க மாட்டேன். அத்துடன் 'தமையனைக் கொன்ற தம்பி' என்ற பழியை உனக்கும் ஏற்படுத்த மாட்டேன். இதோ துர்க்கா பரமேசுவரிக்கு என் சபதத்தை நிறை வேற்றுவேன்!" என்று கூறிக்கொண்டே தம் கையிலிருந்த சிறிய திருகுக் கத்தியைத் தமது மார்பை நோக்கி ஓங்கினார்.

முன்னொரு தடவை அவர் ஓங்கிய பெரிய வாளை மறுபடியும் உறையில் போட்டிருந்தபடியால், அவர் தமது பழைய உத்தேசத்தை விட்டு விட்டதாக மற்றவர்கள் எண்ணிக் கொண்டிருந்தார்கள். பார்த்திபேந்திரனிடமிருந்து வாங்கிக் கொண்டிருந்த திருகுக் கத்தியை அவர் உபயோகிப்பார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

"ஐயோ! வேண்டாம்!" என்று அருள்மொழி வர்மர் கூவிக்கொண்டு அவர் அருகில் பாய்ந்து வருவதற்குள் பெரிய பழுவேட்டரையர் தம் உத்தேசத்தை நிறைவேற்றி விட்டார்.

நெடுங்காலம் வேர் விட்டு நெடிது வளர்ந்திருந்த தேவதாரு மரம் வேருடன் பெயர்ந்து கப்பும் கிளையுமாகக் கீழே விழுவதுபோலத் தரையில் சாய்ந்தார்.

"ஹா ஹா!" "அடடா!" "அந்தோ!" என்பவை போன்ற குரல்கள் அச்சபையில் ஒலிக்கத் தொடங்கின.

விழுந்த பெரிய பழுவேட்டரையரை நோக்கிச் சிலர் ஓடி வந்தார்கள்.

அதேசமயத்தில் கண்களை மூடிக் கொண்டு சிங்காதனத்தில் சாய்ந்த சுந்தர சோழ சக்கரவர்த்தியை நோக்கி இன்னும் சிலர் ஓடினார்கள்.

மந்திராலோசனை சபை கலைந்தது.

அன்றிரவு பெரிய பழுவேட்டரையர் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்த போது பலர் வந்து அவரைப் பார்த்துவிட்டுச் சென்றார்கள்.

சக்கரவர்த்தியும், அருள்மொழி வர்மரும், அநிருத்தரும், இளையபிராட்டி குந்தவையும் கூட வந்திருந்தார்கள்.

சோழ குலத்துக்கும் சாம்ராஜ்யத்துக்கும் பெரிய பழுவேட்டரையர் செய்திருக்கும் சேவைகளைப் பற்றிச் சக்கரவர்த்தியும் மற்றவர்களும் பாராட்டிப் பேசினார்கள். அவர் இளம் பிராயத்தில் எத்தனையோ போர்க்களங்களில் செய்த தீரச் செயல்களைப் பற்றிக் கூறினார்கள். தக்கோலத்தில் தோல்வியடைந்து சிதறி ஓடிய சோழ சைன்யத்தை அவர் திரட்டி அமைத்துத் தோல்வியை வெற்றியாக மாற்றிய செயலை வியந்து பாராட்டினார்கள். சோழ நாட்டின் தனாதிகாரியாக இருந்து திறமையாக நிர்வாகம் நடத்தியதைப் புகழ்ந்தார்கள்.

சென்ற மூன்று வருஷத்துச் சம்பவங்களைப் பற்றி ஒரு வார்த்தையும் பேசாமலே விடை பெற்றுப் புறப்பட்டார்கள்.

பின்னர் அவர்கள் நால்வரும் பெரிய பழுவேட்டரையர், படுத்திருந்த அறைக்குள்ளேயே அவர் பார்க்க முடியாத இடங்களில் மறைந்து நின்றுகொண்டார்கள்.

அச்சமயம் சின்னப் பழுவேட்டரையர் ஆழ்வார்க்கடியானை அழைத்துக்கொண்டு வந்தார். பெரிய பழுவேட்டரையருக்கு எதிரில் கொண்டு வந்து அவனை உட்கார வைத்துவிட்டுத் தாமும் அருகில் அமர்ந்தார்.

பார்வை விரைவாக மங்கி வந்த கண்களினால் பெரிய பழுவேட்டரையர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்துவிட்டு, "ஆகா! இந்த வைஷ்ணவன் இங்கு எதற்காக வந்தான்? நான் வைகுண்டத்துக்குப் போக விரும்பவில்லை, தம்பி! சிவபதம் அடைய விரும்புகிறேன்!" என்றார்.

"ஐயா! நாளை உதயத்தில் வைகுண்ட ஏகாதசி புண்ணிய நாள்! தாங்கள் கைலாசத்துக்குப் போக விரும்பினாலும் வைகுண்டத்தின் வழியாகவே போக வேண்டும்!" என்றான் திருமலை.

"வேண்டாம்! வேண்டாம்! நீ உன் மகா விஷ்ணுவிடம் திரும்பிச் சென்று..."

"ஐயா! நான் மகாவிஷ்ணுவின் தூதனாக இப்போது வரவில்லை. என் சகோதரியிடமிருந்து செய்தி கொண்டு வந்தேன்!"

"அது யார் உன் சகோதரி?"

"என்னுடன் பலநாள் வளர்ந்த சகோதரி – நந்தினியைச் சொல்லுகிறேன்.

ஐயா! நந்தினி தங்களுக்கு அவளுடைய நன்றியைத் தெரியப்படுத்தும்படி என்னை அனுப்பினாள். கரிகாலரைக் கொன்ற பழி அவள் பேரில் விழாதிருக்கும் பொருட்டுத் தாங்கள் அதை ஏற்றுக் கொண்டதற்காக நன்றி தெரிவிக்கச் சொன்னாள். எத்தனை ஜன்மம் எடுத்தாலும் தங்கள் அன்பை மறக்க முடியாது என்றும் தெரிவிக்கும்படி சொன்னாள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆகா! அவள் இன்னும் அப்படி நினைக்கிறாளா? நினைத்துக்கொண்டு சந்தோஷப்படட்டும். எவ்வளவுதான் அவள் வஞ்சகம் செய்து எனக்குத் தீங்கு புரிந்திருந்தாலும் அவளை என்னால் மறக்க முடியவில்லை. அவள் பேரில் கோபித்துக் கொள்ளவும் முடியவில்லை. தன் உயிரைக் கொடுத்துச் சக்கரவர்த்தியைக் காப்பாற்றிய உத்தமியின் புதல்வி அல்லவா அவள்? உண்மையாகவே அடுத்த பிறவிகளிலும் அவள் என்னைத் தேடிக் கொண்டு வந்து விடுவாளோ, என்னமோ?'' என்றார் பழுவேட்டரையர்.

ஏற்கெனவே மரணத்தின் சாயை படர்ந்திருந்த அவருடைய முகத்தில் இப்போது இலேசான புன்னகை தோன்றியது.

''வைஷ்ணவனே! யாரிடமாவது ஒருவரிடம் என் உண்மையைச் சொல்ல வேண்டும். உன்னிடமே சொல்கிறேன். நான் எறிந்த கத்தி இளவரசர் பேரில் விழவில்லை. அதற்கு முன்பே அவர் விழுந்துவிட்டார். நானே இளவரசரைக் கொன்றதாக ஒப்புக்கொண்டதற்குக் காரணம் நந்தினியின் பேரில் பழி விழாமல் தடுப்பதற்காக மட்டுமல்ல; அதைவிட நூறு மடங்கு முக்கியமான காரணம் உண்டு. அருகில் வா! சொல்லுகிறேன்! உன் சிநேகிதன் வந்தியத்தேவன் இருக்கிறானே, அவன் அருமையான பிள்ளை! அவனுக்குச் சோழ குலம் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறது. இளையபிராட்டியின் உள்ளத்தை அவன் கவர்ந்துவிட்டான். இளைய பிராட்டியிடம் நான் அநாவசியமாகக் குரோதம் பாராட்டினேன். அதற்கெல்லாம் பரிகாரமாகக் குற்றத்தை நான் ஒப்புக்கொண்டேன். நான் அப்படிப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டு என்னையும் பலி கொடுத்திராவிட்டால், வந்தியத்தேவன் பேரில் யாராவது களங்கம் கற்பித்துக்கொண்டே இருப்பார்கள். இனி ஒருவரும் அவ்வாறு பேசத் துணிய மாட்டார்கள். வைஷ்ணவனே! என்றாவது ஒருநாள் இளையபிராட்டியிடம் இதை நான் கூறியதாகச் சொல்லு! நந்தினியின் பேச்சைக் கேட்டு அவரை நான் துவேஷித்ததற்காக என்னைத் தயை கூர்ந்து மன்னிக்கும்படி சொல்லு!''

நெடு நேரம் பேசியதால் அந்தத் தீரக் கிழவருக்கு மூச்சு வாங்கத் தொடங்கியது. அவர் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானின் உள்ளமே உருகிவிட்டது என்றால், பின்னால் மறைவிடத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்த குந்தவை தேவியின் கண்களிலிருந்து கண்ணீர் கலகல வென்று பொழிந்ததில் வியப்பில்லை அல்லவா?

''வைஷ்ணவனே! இன்னும் ஒரு விஷயம் முதன்மந்திரி பிரம்மராயரிடம் சொல்லு! இலங்கையிலிருந்து பாண்டியன் கிரீடத்தையும் இந்திர ஹாரத்தையும் எப்படியாவது கொண்டு வர வேண்டும். அதற்குத் தகுந்தவன் வல்லத்து இளவரசன்தான்! அவனும் நீயும் போய்க் கொண்டு வாருங்கள். பிறகு மதுரைக்குச் சென்று அங்கே ஒரு தடவை பொன்னியின் செல்வருக்கு மகுடாபிஷேகம் நடத்த வேண்டும். தெரிகிறதா? அருள்மொழியிடம் எனக்காக ஒன்று வேண்டிக் கொள்! என் பேரில் ஏற்படும் பழியை என் சகோதரன் மீது சுமத்த வேண்டாம்! அவனைப் போல் சோழ குலத்துக்கு உற்ற துணைவன் வேறு யாரும் இல்லை என்று சொல்லு! தேவி! துர்க்கா பரமேசுவரி! என் சபதத்தை நிறைவேற்றிவிட்டேன்! இதோ வருகிறேன்! சோழ குலத்தைக் காப்பாற்று!''

வரவர மெலிந்து கொண்டு வந்த பெரிய பழுவேட்டரையரின் குரல் அடியோடு மங்கி நின்றது. அந்தத் தீரப் பெருங்கிழவரின் உயிர்ச் சுடரும் அணைந்தது.

(தொடரும்)





## அம்மாடி யோவ்!

உலகிலேயே, நூலகத்துக்கு அதிக அபராதம் செலுத்தியவர் 'டெத் ஆஃப் எ பிரஸிடெண்ட்' என்ற நூலை எழுதிய வில்லியம் மான்செஸ்டர் ஆகத்தான் இருப்பார்.

கல்லூரி மாணவனாக இருந்தபோது, லைப்ரரியிலிருந்து 'ஆறு நாடகங்கள்' என்ற புத்தகத்தை எடுத்துச் சென்றவர், திருப்பித் தருவதற்கு மறந்து போனார். 29 வருடம் கழித்து அதே கல்லூரியில் நூலகராகப் பதவியேற்றபோது, தம்மிடம் அந்த நூல் இருப்பதைக் கண்டு, அதற்குண்டான அபராதத் தொகையாக 505 டாலர்களைக் கட்டினார். தற்போதைய கணக்கின்படி சுமார் 21,300 ரூபாய் ஆகிறது.

– பா. உத்திராபதி, சிலம்பிமங்கலம்.



## கணேச சரணம்...

பாதாள விநாயகர். திருப்பதி காளஹஸ்தியில் அமைந்துள்ள ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் ஆலயத்தில் உள்ள விநாயகரின் பெயர்தான் இது. கோவில் பிராகாரத்தில் சுமார் இருபதடி ஆழத்தில் இவர் அருள் பாலிக்கிறார். ஒரு ஆள் மட்டுமே இறங்க வசதியுள்ள படிகளில் இறங்கிச் சென்றுதான் இவரைத் தரிசித்து வர முடியும்! பக்தர்களின் வேண்டுதல்களை உடனுக்குடன் கவனித்து வரும் இந்த பாதாள விநாயகரைத் தரிசிக்க, ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரர் ஆலயத்தில் நீண்ட வரிசை ஒன்று எப்பொழுதும் காத்திருக்கிறது!

— எஸ். வீமராஜன், கமுதி.



## பூலோ(தொகுதியோ)கவியல்

தமிழகத்திலேயே மிகப் பெரிய தொகுதி வில்லிவாக்கம். சிறியது, திருச்சி-1. அதிக தொகுதிகளுள்ள மாவட்டம் சென்னை.

— எஸ். மாலதி, முசிறி.



## கவிதை – ஒரு கோட்பாடு

சிறந்த கவிதை என்பது சாதாரண கருத்துகளை வியப்பூட்டும் முறையில் சொல்வது அல்ல. வியப்பூட்டும் கருத்துக்களைச் சாதாரணச் சொற்களால் சொல்வது தான். - பாரதியார்

— எஸ். பொன்னுசாமி, உடுமலை.



## 'வோட்டு'

தேர்தல் வந்து கொண்டே இருக்கிறது. நாம் தேர்தலில் போடுகிறோமே 'வோட்டு', இதற்கு என்ன அர்த்தம் என்று தெரியுமா? இதை ஆங்கிலத்தில் Vote என்று சொல்வார்கள். "Voice Of Tax Payers Everywhere" என்பதன் சுருக்கமே 'Vote'!

— எஸ். ரஜினிப்பிரியன், ஈரோடு-1.



## வருமா Y2038 பிரச்னை?

கணிப்பொறியில் சி (C) மொழியில் எழுதப்பட்ட ப்ரோகிராம்கள் ஒரு புதிய பிரச்னையில் மாட்டிக் கொள்ளும் வாய்ப்பிருக்கிறது. 'சி' மொழியில் தேதி மற்றும் நேரத்தைப் பதிவு செய்ய, ஜனவரி 1, 1970 இரவு 12.00 முதல் ஒவ்வொரு விநாடியும் எண்ணிக்கை கூடுவதற்கு வழி வகுக்கப்பட்டுள்ளது. ஆனால் 'சி' மொழியின் அதிகபட்ச கொள்ளளவு 2,147,483,648 விநாடிகள் மட்டுமே. இதன்படி, பிப்ரவரி 5, 2038 அன்று 2,147,483,648 விநாடிகள் நிறைவடைகின்றன. இதற்கு அடுத்த விநாடி, கணிப்பொறியில் சிக்கல் ஏற்படும் என எதிர்பார்க்கப்படுகிறது. இருப்பினும் இந்தச் சிக்கலை 'Y2K' சிக்கலை விட எளிதாகத் தீர்த்து விடலாம் என்று கணிப்பொறியாளர்கள் நம்பிக்கையுடன் கூறுகின்றனர்.

— எம். விக்னேஷ், மதுரை–9.

**கூட்டிலிருந்து வீடாகி, வீட்டிலிருந்து மாளிகையாகிவிட்டது 'தேன்கூடு'! வாசகர்களின் ஏகோபித்த ஆதரவுக்கு நன்றி!**

# புதிய 'நினைவாற்றல் தொடர்' ஆரம்பம்...

ஒரு குழந்தைக்கு எவ்வளவுதான் புத்திகூர்மை (Intelligence) இருந்தாலும் தேர்வில் அறிவுக்கூர்மைதான் (knowledge) பரிசோதிக்கப்படுகிறது. அறிவுக்கூர்மையைப் பரிசோதிக்க என்ன வழி? அடிப்படையான பாடங்கள் அதன் மனத்தில் நன்றாகப் பதிந்திருக்கின்றனவா என்று சோதிப்பதுதான். அதை எப்படிச் சோதிப்பது? பாடங்களை அக் குழந்தை நினைவுகூறும் விதத்திலிருந்து! அதாவது, ஒரு பாடம், குழந்தையின் மனத்தில் பசுமரத்தாணியைப் போல நன்றாகப் பதிந்திருந்தால், தேர்வில், அந்தப் பாடத்தை, குழந்தையால் சுலபமாக நினைவுகூர முடியும் என்பதுதான் தத்துவம். இதற்கு அடிப்படை என்ன? நினைவாற்றல். அதாவது, தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெற வேண்டும் என்கிற பட்சத்தில், அந்த மதிப்பெண்களின் அடிப்படையில் மேல் படிப்பு படிக்க வேண்டும் என்கிற பட்சத்தில், மேல்படிப்பின் அடிப்படையில் நல்ல வேலை கிடைக்க வேண்டும் என்கிற பட்சத்தில், வேலையின் அடிப்படையில் ஒளிமயமான எதிர்காலம் அமைய வேண்டும் என்கிற பட்சத்தில், நினைவாற்றல் என்பது அஸ்திவாரமாகிவிடுகின்றது.

நினைவாற்றல் என்பது என்ன?

நினைவாற்றல் என்பது மனத்தை ஒரு குறிப்பிட்ட வகையில் இயக்குவதால் ஏற்படும் விளைவு.

மனத்தையும், மூளையையும் ஒருங்கிணைத்து எப்படி நினைவாற்றலைப் பெருக்கிக் கொள்வது என்பதைத்தான் இந்தத் தொடரில் பார்க்கப் போகிறோம்.

## 1

'எனக்கு மறந்தே போய்விட்டது உனக்கு ஃபோன் செய்ய', 'பரீட்சை நேரத்தில் எனக்கு எல்லாம் மறந்துவிடுகிறது', 'எனக்கு முதல் எதிரி என்னுடைய ஞாபக மறதி' என்றெல்லாம் சொல்கிறோம். உண்மையில், ஞாபக சக்தி என்பது என்ன? ஏன் ஒருவருக்கு நல்ல ஞாபக சக்தியும், மற்றொருவருக்கு அதிக ஞாபக மறதியும் இருக்கின்றன? நாமே சில சமயங்களில் நல்ல ஞாபக சக்தியுடனும் மற்ற சில சமயங்களில் பல விஷயங்களை மறந்தும் செயல்படுகிறோம். இதற்குக் காரணம் என்ன?

சில பேர்களுக்கு இயற்கையாகவே நல்ல ஞாபக சக்தி அமைவது உண்மைதான். அதற்காக, ஒருவருக்கு இயற்கையாகத்தான் இந்தத் திறமை அமைய வேண்டும் என்பது கட்டாயமல்ல. இயற்கையாக அமையாத பல சக்திகளை நாம் பயிற்சி மூலம் அடைவதில்லையா? எழுதப் படிக்க நாம் எப்படிக் கற்றுக் கொண்டோம்? பயிற்சியின் மூலம்தானே? இது போல்தான் தட்டெழுத்து, சுருக்கெழுத்து, வெல்டிங், கம்ப்யூட்டர்

**கட்டுரை ஆசிரியர்...**

பல நிறுவனங்களில் மன வளர்ச்சி பற்றிய பயிற்சி மற்றும் மனித வள மேம்பாடு பற்றிய பயிற்சி கொடுத்து வருபவர் என்.சி. ஸ்ரீதரன். ஐந்து வருடங்களாகப் பள்ளிக் கூடங்களில் அதிக அக்கறை எடுத்துக் கொண்டு, உலக அளவில் புகுத்தி வரும் மாற்றங்களை நமது பள்ளிக்கூடங்களில் புகுத்தி வருபவர். சி.பி.எஸ்.ஈ. (சென்ட்ரல் போர்டு ஆஃப் செகண்டரி எஜுகேஷன்)யின் அழைப்பின் பேரில் அகில இந்திய அளவில், பள்ளிக்கூட குழந்தைகளின் மன வளர்ச்சி பற்றிய வகுப்புகள் எடுத்து வருபவர். தாம் அமெரிக்காவில் கற்ற பயிற்சியை, பல பள்ளிக்கூடங்களில் பெற்றோர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் நடத்தி வரும் பயிற்சியை கல்கி வாசகர்களுக்குச் சொல்லித்தரவிருக்கிறார் இந்தத் தொடரில்!



போன்ற பல ஆற்றல்களை நாம் பயிற்சியினால் பெருக்கிக் கொள்கிறோம். இவை எல்லாம் தொழில் சம்பந்தமான, படிப்பு சம்பந்தமான ஆற்றல்கள். எப்படி இதுபோன்ற ஆற்றல்களை நாம் பயிற்சியின் மூலம் பெருக்கிக் கொள்ள முடியுமோ, அது போன்றுதான் நமது நினைவாற்றலையும் பயிற்சியின் மூலம் நன்றாகப் பெருக்கிக் கொள்ள முடியும்.

நமது முன்னோர்களை எடுத்துக் கொள்ளுங்கள். தமிழ்ப் புலவர்கள் பல இலக்கியங்களையும் இலக்கணங்களையும் கரைத்துக் குடித்தது மட்டுமல்லாமல், அவற்றைத் தக்க இடங்களில் கையாண்டது எப்படி என்று நினைக்கிறீர்கள்? நினைவாற்றல் பயிற்சியால் தான்!

பயிற்சிக்குப் போவதற்கு முன்பு நமது நினைவு எப்படி செயல்படுகிறது என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

நம்மிடம் நூறு புடைவைகள் இருக்கின்றன என்று வைத்துக் கொள்வோம். (சும்மா கற்பனைக்குத் தானே..!) நூறு ஹாங்கர்களை உபயோகித்து ஒவ்வொரு ரகமாக, ஒவ்வொரு கலராகப் பிரித்து, பீரோவில் ஒழுங்காக சீர் செய்து மாட்டி வைத்தால், தேவையான புடைவையைச் சட்டென்று நம்மால் வெளியே எடுக்க முடியும். தேட வேண்டியதில்லை. குழப்பமும் இருக்காது. இதற்கு மாறாக, எல்லாத் துணிகளையும் தாறுமாறாக பீரோவில் அடைத்து வைத்தால், நினைத்த நேரத்தில், நினைத்த புடைவையைக் குழப்பமின்றி எடுக்க முடியுமா? இது போல்தான் நமது நினைவாற்றலும். நாம் நினைவில் வைக்க வேண்டிய பல தகவல்களை நமது மூளையில் சீர்செய்து, ஒழுங்காக வைத்தால், அவற்றைத் தேவையான போது நம்முடைய நினைவுக்குக் கொண்டு வர முடியும்.

இது எப்படி என்று தெரிந்து கொள்வதற்கு முன், நம்முடைய மூளையின் அபாரமான சக்தியைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா?

'என்சைக்ளோபீடியா பிரிட்டானிக்கா' என்பது ஒரு பெரிய தகவல் களஞ்சியம். இந்தக் களஞ்சியத்தில் பல கோடி தகவல்களைச் சேமித்து புத்தக வடிவில் வைத்திருக்கிறார்கள். நமது மூளையில் இந்தத் தகவல் களஞ்சியத்தைப் போல 500 மடங்குள்ள தகவல்களைச் சேமித்து வைக்க முடியும்! பிரமிப்பாக இல்லை?

ஒரு தகவலை மனத்தில் பதியவைக்கவேண்டுமென்றால் நமது மனம் மூன்று படிகளாகச் செயல்பட வேண்டும்.

முதலாம் படி: நாம் அன்றாடம் பார்க்கும், கேட்கும், உணரும் தகவல்களை சென்ஸரி ரெஜிஸ்டரில், அதாவது நமது உணர்வுகளின் ரெஜிஸ்டரில் பதிவு செய்ய வேண்டும்.

இரண்டாம் படி: இந்தத் தகவல்களை உடனடியாக 'ஷார்ட் டெர்ம் மெமரி பகுதி'க்கு, அதாவது, குறுகிய கால நினைவுப் பகுதிக்கு டிரான்ஸ்ஃபர் செய்ய வேண்டும். இந்தப் பகுதி அதிகபட்சம் 15 வினாடிகளுக்குத் தகவல்களைத் தக்க வைத்துக் கொள்ளும் வலிமை படைத்தது.

மூன்றாம் படி: அதற்கும் மேலாக நமது நினைவில் தகவல்கள் நிற்க வேண்டுமானால் அவற்றை 'லாங் டெர்ம் மெமரி பகுதி'யில், அதாவது, நீண்ட கால நினைவுப் பகுதியில் பதிவு செய்ய வேண்டும்.

நம்முடைய மனம் எவ்வளவுக்கு எவ்வளவு சாமர்த்தியமாக இந்த மூன்று பகுதிகளிலும் செயல்படுகின்றதோ, அவ்வளவுக்கு அவ்வளவு நமது ஞாபக சக்தி சிறப்பாக இருக்கும். இந்தத் தத்துவத்தின் அடிப்படையில்தான் இந்தத் தொடரில் நான் சொல்லித் தரப் போகும் பல பயிற்சிகள் அமைந்திருக்கும். ஆகையால், இந்தத் தத்துவத்தைப் புரிந்து கொண்டுவிட்டால் பயிற்சி எளிதாகிவிடும்.

இந்த நினைவாற்றல் பயிற்சியில் இன்னொரு முக்கியமான விஷயம். ஓரிரு நாள் பயிற்சி செய்வதால் மட்டும் நம்முடைய நினைவாற்றலில் பெரிய மாற்றம் ஒன்றும் ஏற்பட்டு விடாது. நினைவாற்றலைப் பெருக்கியே தீருவது என்ற உறுதியோடு, தொடர்ந்து தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கி பயிற்சி செய்தால் தான் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படும். நாம் எப்படி சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொண்டோம்? முதலில் கற்றுக் கொள்ளும் போது கீழே விழவில்லையா? ஆனால் விடாமல் பயிற்சி செய்து நேர்த்தியாக சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொள்ளவில்லையா? அது போலத்தான் நினைவாற்றல் பயிற்சியும்!

அடுத்த வார வகுப்பில் சந்திப்போம்!

# KALKI SHOPPING PAGE





# மனம், மனமாறிய ஆட்டம்...

# 5

அருண் சரண்யா

**சி**வப்ரியா கண்களை மூடிக் கொண்டாள். வலதுகை ஆள்காட்டி விரலால் நெற்றியின் நடுப்பகுதியை இலேசாகத் தட்டிக் கொண்டாள்.

இரண்டு நிமிடங்களுக்கு மேல் மணிசங்கரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. "இந்த இன்டஸ்ட்ரி யிலே இது. ரொம்ப அவசியமான ஒண்ணு. இதுக்குக் கூட சம்மதிக் கலேன்னா எப்படி?"

சிவப்ரியா கண்களையும் திறப்ப தாகத் தெரியவில்லை, விரலால் தட்டிக் கொள்வதையும் நிறுத்த வில்லை. அவள் முகத்தில் அதி காலை சூரியன் போல ஒரு பிரகாசம் சிறிது சிறிதாக அதிகமாகிக் கொண்டு வந்தது.

மணிசங்கர் பதற்ற நிலையின் விளிம்புக்குச் சென்று கொண்டி

ருந்தார். "புது ஹீரோயின்னா முடிஞ்சவரை எக்ஸ்ப்ளாயிட் செய்வாங்க. ஆனால், நான், உன்னையும், உன் சினிமா கேரக்டரையும் எவ்வளவு கண்ணியமாக ட்ரீட் செய்யறேன்னு உனக்கு நல்லாத் தெரியும்."

கண்களைத் திறந்த சிவப்ரியா தன் வலது கையை மேலெழுப்பி உள்ளங்கையை விரித்தாள். "போதும் சார்" என்ற குறியீடு அதில் தெரிந்தது. "எதுக்கு சார் பேசிக்கிட்டே போறீங்க. இன்னைக்கு நீங்க ஏற்பாடு செய்திருக்கிற பத்திரிகையாளர் கூட்டத்திலே. நான் கலந்துக்கணும். அவ்வளவுதானே? டன்" என்றாள்.

"அவ்வளவு-தானேவா? அப்புடி நினைக்கிறவ எதுக்காக காட்டிலே தவம் செய்யற மாதிரி கண்களை மூடிக்கிட்டு என் டென்ஷனை அதிகமாக்கினே?"

"கிண்டலடிக்கிறீங்கன்னாலும் சரியான வார்த்தையைத்தான் உபயோகப்படுத்தியிருக்கீங்க. யெஸ். இந்த சில நிமிடங்களிலே நான் சின்னதாக ஒரு தவம்தான் செய்தேன். அதாவது, மனத்தை ஒரு நிலைப்படுத்திக்கிட்டேன். பத்திரிகைக்காரர்களைச் சந்திக்க என்னை மனத்தளவிலே தயார் செய்துக்கிட்டேன்."

மணிசங்கர் வியப்படைந்தார். "பத்திரிகைக்காரங்களும் நம்மை மாதிரி மனுஷங்கதான். அவங்க ஒண்ணும் முதலையோ, டினோசாரோ இல்லே."

சிவப்ரியா அவரைத் தீர்க்கமாகப் பார்த்தாள். அதில் 'ஆர் யூ ஷ்யூர்? கான்ஃபிடென்ட்?' என்ற கேள்விகள் இருந்தன.

சட்டென்று தழைந்த மணிசங்கரின் பார்வையே 'அந்த வகையைச் சேர்ந்தவங்களும் உண்டுதான்' என்பதை உணர்த்தியது.

"நீ படிச்சவ சிவப்ரியா. புத்திசாலி. கேள்விகளுக்கு எப்படி பதில் சொல்லணும்னு உனக்குத் தெரிஞ்சிருக்கும். நீ சொல்றதெல்லாம் உண்மையாக இருக்கலாம். ஆனா உண்மையை முழுசா சொல்லணும்னு அவசியமில்லே"

"சார், கொஞ்ச நேரத்துக்காவது கே.எஸ்.ஜி.யிலிருந்து மணிரத்னமாக மாறுங்களேன். நேரடியாக, சுருக்கமா விஷயத்துக்கு வாங்க. இது நான் நடிக்கப் போற ஒரே படம்கிற விஷயத்தை யாரிடமும் சொல்லக் கூடாது. அவ்வளவு தானே?"

"கரெக்ட் ... என்ன செய்யறது, கல்யாணமாயிட்டா ஒரு நடிகையின் மார்க்கெட் குறையும். ஏன், ஒப்பந்தமான படத்திலேயிருந்து கூட அவளைத் தூக்கிடுவாங்க. அதே மாதிரி, தொடர்ந்து படம் பண்ணும் நடிகைன்னாதான் ரசிகர்கள்கிட்டே ஒரு எதிர்பார்ப்பு இருக்கும்."

சிவப்ரியா மீண்டும் கண்களை மூடிக் கொண்டாள். இம்முறை அதன் பொருள் சரியாகவே புரிய, "இனியும் போரடிக்க மாட்டேன்" என்றபடி இயக்குனர் நடந்தார்.

**"பத்திரிகைக் காரங்களும் நம்மை மாதிரி மனுஷங்க தான். அவங்க ஒண்ணும் முதலையோ, டினோ சாரோ இல்லே."**

அதிகாரபூர்வமாக அவள் கலந்து கொள்ளும் முதல் பத்திரிகையாளர் கூட்டம் இது. ஆனால் படப்பிடிப்புக்கு நடுவே ஒரு சில நிருபர்கள் ஏற்கனவே சந்தித்து விட்டனர்.

சத்யநாராயணா கோவிலுக்கு சென்ற வியாழக்கிழமை சென்றிருந்தபோது, திடீரென்று அங்கு முளைத்த ஒரு நிருபர், "பௌர்ணமி விரதம் இருப்பீங்களா மேடம்?" என்று கேட்டபோது அவள் அசந்து போனாள்.

இந்த நிருபர்கள்தான் எப்படி எங்கெங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறார்கள்! திருப்பதியில் எந்த ரகசியக் கல்யாணமென்றாலும் அவர்களுக்குத் தெரிந்துவிடுகிறது. கடற்கரை பங்களாக்களில் நடக்கும் எந்த நட்சத்திர சந்திப்பும் அவர்கள் கண்களுக்குத் தப்புவதில்லை. காளஹஸ்தி கூட்டுப் பிரார்த்தனையும்தான். -

சென்ற வாரம் மருத்துவமனைக்குப் போயிருந்தபோது

அங்கும் ஒரு நிருபர் வந்தது நினைவுக்கு வந்தது.

பாதிப் படப்பிடிப்பில் வலிப்பு நோயால் கீழே விழுந்த லைட் மேன் அருகிலுள்ள கிளினிக்கில் அனுமதிக்கப்பட, படப்பிடிப்பு முடிந்ததும் அங்கு சென்றாள் சிவப்ரியா. முத்தழகு என்ற அந்த லைட்மேனின் படுக்கையருகில் தான் நின்று கொண்டிருந்தார் அந்தக் கிளினிக்கின் தலைமை மருத்துவர். அவளைப் பார்த்ததும், புரிந்து கொண்ட புன்னகை யொன்று பிறந்தது அவரிடம்.

''ஈ.ஈ.ஜி. எடுத்தீங்களா டாக்டர்? ரத்தப் பரிசோதனை தேவைப்படும்னு நினைக்கிறேன்'' என்ற சிவப்ரியாவை அங்கிருந்த திருமதி முத்தழகு பிரமிப்புடன் பார்த்தாள். சீஃப் டாக்டரைப் பார்த்து ''இந்தம்மா ரொம்ப விவரமானவங்களாக இருக்காங்க டாக்டர். என் புருஷன் கீழே விழுந்தவுடனே என்னென்னவோ செஞ்சு அவர் உயிரைக் காப் பாத்திட்டாங்க'' என்றாள்.

விழுந்தவனின் தலைக்குக் கீழே ஒரு மிருதுவான ஜமுக்காளத்தை வைத்தது, அவனது இறுக்கமான உடைகளைத் தளர்த்தியது, அருகிலிருந்த ஆபத்தான பொருள் களை அகற்றியது, பக்கவாட்டில் அவனைப் படுக்க வைத்து அவன் முகவாயைச் சற்றே அசைத்து சுவாசத்தைச் சீராக்க வழிவகுத் தது - இவற்றையெல்லாம்தான் ஒட்டுமொத்தமாகக் கேள்விப் பட்டு இந்தப் பெண்மணி பிரமித் துப் போயிருக்கிறாள்.

"என் தாலியைக் காப்பாத்தின வங்க நீங்க. எங்க குடும்பத்திலே ஒருத்தரா ஆயிட்டீங்க'' என்று அவள் நெகிழ்ச்சியை மேலும் கொட்ட, தலைமை மருத்துவர் பலமாகச் சிரித்தார். "சிவப்ரியா எங்க குடும்பத்தைச் சேர்ந்தவங்க. டாக்டர் குடும்பம். அதுவும் டாக்டர் ராம்ஷேகரின் மருத்துவ வாரிசாகப் பேசப்பட்டவங் களாச்சே.''

> **''உங்களுக்கு இந்த இன்டஸ்ட்ரி யிலே பிரகாசமான எதிர்காலம் இருந்தா, எப்படி நீங்க டாக்டர் தொழிலைத் திரும்பச் செய்ய முடியும்?''**

அவரது கடைசி வார்த்தையில் தொனித்த இறந்தகாலம் சிவப்ரியாவைச் சட்டென்று தாக்கியது.

அதைத் தொடர்ந்து மற்றொரு தாக்குதல். "என் பெயர் சந்திர சூடன். ஆலயமணி வார இதழ் நிருபர்'' என்றபடி அவளை நெருங்கிய ஓர் இளைஞன், ''இன்னிக்கு ஸ்டுடியோவிலே நடந்த விபத்தை ஒரு நடிகை, ஒரு டாக்டர் ஆகிய இரண்டு கோணங் களிலும் விமர்சனம் செய்யுங் களேன்''. என்றான். அப்படிச் சொல்லுகிறபோதே அவன் கைகள் லாவகமாகத் தன் நோட்டுப் புத்தகத்தையும் பேனா மூடியை யும் திறந்து தயார் நிலையில் வைத் துக் கொள்வதை சிவப்ரியா ரச னையுடன் கவனித்தாள்.

"மருத்துவமனையில் பேட்டி கொடுப்பது நடிகைன்ற முறை யிலே தப்பு. இங்கே நான் டாக்டராக வேலை செய்ய வில்லைன்றதாலே டாக்டர்ங்கிற முறையிலும் இங்கே பதிலளிக்க முடியாது. ஆக, இரண்டு கோணங் களிலுமே அந்த நிகழ்ச்சியை நான் விமர்சிக்க முடியாது. தவிர, அவராக ப்ரஸ் ஷோ ஏற்பாடு செய்யும்வரை பேட்டி எதுவும் கொடுக்க வேண்டாம்னு டைரக் டர் கேட்டுக்கிட்டிருக்கார்.''

வந்தவன் மேலும் இருமுறை கேட்டுப் பார்த்துவிட்டு, கனிவான ஆனால் அதே உறுதியான பதில் சிவப்ரியாவிடமிருந்து வர, நகர்ந்து விட்டான்.

இன்று அவனும் வந்திருக்கக் கூடும்.

**தொ**டக்கத்தில் பதினைந்து பேராக இருந்த பத்திரிகையாளர் களின் எண்ணிக்கை விரைவில் இரு மடங்கை எட்டியது.

"சிவப்ரியான்றது உங்க நிஜப் பெயரா? எதுக்காகக் கேட் கிறேன்னா பெயரிலேயே ஒரு கவர்ச்சி இருக்குது'' என்றார் ஒரு மூத்த பத்திரிகையாளர்.

"என்னைப் பொருத்தவரை அது என் ஒரிஜினல் பெயர் மட்டுமல்ல, எளிமையான பெயரும்தான். ஏன் சார், உங்க மகளின் பெயர் என்ன?"

அது ஒரு பழைமையான அல்லது அசாதாரணப் பெயர் போலும்... நிருபர் பதிலைத் தவிர்த்தார்.

"மருத்துவத் தொழிலுக்குத் தலைமுழுகிட்டு எதுக்காக சினிமாவிலே நடிக்க வந்தீங்க?"

ஒரு கேள்விக்குப் பதிலளிக்க விருப்பமில்லையென்றால் திசை திருப்ப வேண்டும் என்பது நேர் முகத் தேர்வுகளுக்கான பால பாடம். சிவப்ரியா அறிந்த ஒன்று. "மருத்துவத் தொழிலுக்குத் தலை முழுகியதாக நான் சொன்னேனா?" என்றாள்.

"உங்களுக்கு இந்த இன்டஸ்ட்ரியிலே பிரகாசமான எதிர்காலம் இருந்தா, எப்படி நீங்க டாக்டர் தொழிலைத் திரும்பச் செய்ய முடியும்?"

அதாவது 'மார்க்கெட் அவுட் ஆனால் மீண்டும் ஸ்டெத்தை எடுத்துப்பே போல' என்ற இலேசான எள்ளல் பொதிந்த கேள்வி.

"ரொம்ப நீண்ட கால திட்டம் போட வேண்டாமே சார். அப்பப்போ வாழ்க்கையை நிச்சயம் செய்துக்கறேனே." 'மனமறிந்து சொன்ன முழுப் பொய். இம்மி இம்மியாய் என் வருங்காலத்தைச் செதுக்கிக் கொண்டு வந்து, அதில் தாற்காலிகச் சறுக்கலைச் சந்தித்துக் கொண்டிருப்பவள் நான்! இன்னமும்கூட இந்த ஒரே சினிமாவுக்குப் பிறகு என் வருங்கால திட்டம் என்ன என்பதைப் பற்றிய தெளிவுகூட உண்டு!'

அப்போதுதான் அவள் முன்பின் பார்த்திராத ஒரு நிருபர் தம் நாக்கிலிருந்து ஒரு அணுகுண்டை அவள்மீது வீசினார்.

"ஆனந்த்ன்ற டாக்டருக்கும் உங்களுக்கும் காதல் விவகாரம் உண்டாமே. இது உண்மையா இல்லையா?"

சிவப்ரியா திணறினாள்.

(தொடரும்)

"ரொம்ப நீண்ட காலம் திட்டம் போட வேண்டாமே சார். அப்பப்போ வாழ்க்கையை நிச்சயம் செய்துக்கறேனே..."

## 987ஆ 967ஆ? 987ஆ 967ஆ? 987ஆ 967ஆ?

சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூரில் அ.தி.மு.க.வின் தேர்தல் பிரசார கூட்டம் நடந்தது. கூட்டத்தில் பேசிய முன்னாள் அமைச்சர் தமிழ்க்குடிமகனின் தோற்றத்தில் ஒரு வித்தியாசம்... கட்சி மாறிய பின்பும் கலைஞரை நினைவுபடுத்தும் மஞ்சள் சால்வை தோளில் தொங்கிக் கொண்டிருந்தது. பேச்சிலோ, அனல்...

"எந்நன்றி கொன்றார்க்கும்" என்கிற குறளை மேற்கோள் காட்டி ஒருவன் எழுதுகிறான்... தமிழ்க்குடிமகன் திருக்குறள் படித்ததில்லையா என்று! நான் சொல்கிறேன், 987ஆவது குறளை முதலில் எடுத்துப் படிடா! ஒவ்வாத ஒருவருடன், உதாசீனப்படுத்துகிற ஒருவருடன், உண்மைக்கு மாறாக நடக்கின்ற ஒருவருடன் ஒட்டி வாழ்தலைவிட அவன் கெட்டு ஒழிந்தான் என்பதுதான் தமிழ்க்குடிமகனுக்குப் பெருமையே தவிர, பதவிக்காக தொடர்ந்து வேஷம் போட்டு ஒட்டிக் கொண்டு போகிறவன் நானல்ல!" என்று சீறினார்.



தமிழ்க்குடிமகன் குறிப்பிட்ட குறள்–

"ஒட்டார்பின் சென்று ஒருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று."

இது 987ஆவது குறள் அல்ல. 967ஆவது குறள்.

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு?" தான் 987ஆவது குறள்.

இது, தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சராக இருந்த தமிழ்க்குடிமகன் படிக்காத திருக்குறளா என்ன?

– கி. சிங்காரவடிவேல்

987ஆ 967ஆ? 987ஆ 967ஆ? 987ஆ 967ஆ?



# சீறிவரும் காளை

**வா**ழ்க்கை, வழக்கு என்று நீண்ட நாள் வனவாசம் போய்விட்ட ராமராஜன், விட்ட இடத்தைப் பிடித்துவிடும் பிடிவாதத்தோடு 'சீறிவரும் காளை' கொடுத்திருக்கிறார். ஆனால், படம் 'சிற்றம் பேக்டு' ஆக இருப்பதற்குப் பதில் 'சென்டிமெண்ட் பேக்டு' ஆக இருக்கிறது!

கிராமத்தில் எங்கே அநியாயம் நடந்தாலும், ஹீரோ- ஹோண்டாவில் பறந்து வந்து தட்டிக் கேட்கிறார் ஹீரோ பிளஸ் இயக்குனர் ராமராஜன். முதல் காட்சியிலேயே உழவர் சந்தையில் புகுந்து கலாட்டா செய்பவர்களைப் பறந்து பறந்து துவம்சம் பண்ணுகிறவர், உழவர் சந்தையை எதிர்க்கிறமாதிரி ஆதரிக்கிறாரா... இல்லை, ஆதரிப்பதுபோல் எதிர்க்கிறாரா... எதுவும் புரியவில்லை.

அபிதாவைத் திருமணம் செய்து கொள்ளும் இவருடைய விருப்பத்தை அபிதாவின் பெற்றோர் எதிர்க்க, அவரைக் கடத்திப் போய் கல்யாணம்... தனிக்குடித்தனம் என்று தொடர்கிற படத்தில் ஆங்காங்கே இடைச் செருகலாக வில்லி விசித்ராவின் சூழ்ச்சிகள்... முடிவில் சுபம் என்று ஓர் அசல் தமிழ் சினிமா எடுத்திருக்கிறார்கள்.

'சேது'வில் திறமையாக நடித்தும், தான் கண்டுகொள்ளப்படாத ஆதங்கத்தால் கூடுதல் வீரியத்தோடு சிரித்து, அழுது, வெட்கப்பட்டு, கோபப்பட்டு - மொத்தத்தில் நிறைவாகச் செய்திருக்கிறார் அபிதா. வில்லியாக வரும் விசித்ராவுக்கு, மன்சூர் அலிகான் ஜாடிக்கேத்த மூடி. ஒரு சில காட்சிகளே என்றாலும் மனத்தில் 'பச்'சென்று ஒட்டிக் கொள்கிறார் ஆச்சி. ராஜாவின் இசையில்லாத ராமராஜன் படம், ஊறுகாய் இல்லாத தயிர்சாதம்.

வசனம், திரைக்கதை இரண்டிலும் ராமராஜனின் உழைப்பு தெரிந்தாலும், 'பழம் பெருமை மிக்க' கதை என்பதால் அடிக்கடி வரும் கொட்டாவியைத் தவிர்க்க முடியவில்லை.

படத்தின் நாயகி பால் கறக்கும் ஒரே ஒரு காட்சியைத் தவிர, படத்திற்கும் பசுமாட்டிற்கும் வேறு தொடர்பே இல்லாதது மிகப் பெரிய ஆச்சர்யம்!

- ஜஸ்ட் பாஸ்

— விஷ்வல்தாசன்

## அண்ணாநகர்:

# அசந்தால் ஆற்காட்டார் அவுட்!



• கோதண்டராமன் • பா.ம.க. வேட்பாளர் ஆறுமுகம் • அசந்துவிட்டால்...? • சோமா ராமச்சந்திரன்

"போன தேர்தலுக்குப் (1996) பார்த்தோம். எங்க மறுபடியும் வந்தாரு...?" என்பதுதான் அண்ணாநகர் தொகுதி முழுக்க பரவலாகப் பேச்சு.

"உள்ளூரில்தான் அமைச்சர் ஆற்காடு வீராசாமி வீடு... ஆனால் பொதுமக்களுக்கு அங்கே எந்த மரியாதையும் கிடையாது... கறை வேட்டி கட்டியிருந்தால்தான் மதிப்பு" என்கிறார் புச்சி நாயகர் தெரு சண்முகம். தொலைக்காட்சியிலும், பத்திரிகைகளிலும், அவர் எப்போதும் முதல்வருடன் இருப்பது போன்று காட்சிகள் வருவதால் "அவருக்கு சி.எம்.மோட சுத்தறதுக்குத்தான் சரியா இருக்கு" என்பது போன்ற இமேஜ் உருவாகிவிட்டது.

"அது தவறு. இரண்டு கனமான இலாகாக்கள், கட்சி வேலை, இத்தனைக்கும் இடையில் தொகுதியை மறப்பதில்லை அமைச்சர்" என்று அழுத்தமாகச் சொல்கிறார் அண்ணா நகர் பகுதி தி.மு.க. செயலாளர் சோ.மா. ராமச்சந்திரன். தொகுதிக்கு நூறு கோடி மதிப்பிலான பல்வேறு திட்டப்பணிகளை நிறைவேற்றியிருக்கிறார் அமைச்சர்" என்று சாம்பிளுக்குச் சிலவற்றைச் சொன்னார் அவர்.

"பூபதி நகரில் வெள்ளத் தடுப்புச் சுவர், சாஸ்திரி நகர் பாதாளச் சாக்கடை திட்டம், அம்பேத்கார் நகர் குடிசை மாற்று வாரிய குடியிருப்புகள், காமராஜ் நகர் பட்டா, 4000 கல் நார் வீடுகள்; இவை தவிர பூந்தமல்லி-நடுவக்கரை, நமசிவாயம் - சேத்துப்பட்டு, பாலங்கள், 61 லட்சம் செலவில் பள்ளிக் கட்டடங்கள், புதிய துணை மின் நிலையங்கள், தொகுதியெங்கும் தார், சிமெண்ட் சாலைகள் என்று அசத்தியிருக்கிறார் அமைச்சர். சென்ற முறை பெற்றதைவிட இரண்டு மடங்கு வோட்டுப் பெறுவார் பாருங்கள்" என்கிறார் சோ.மா. ராமச்சந்திரன்.

அமைச்சரை எதிர்த்து நிற்பவர் பா.ம.க. வேட்பாளர் டாக்டர் ஆறுமுகம். தொகுதியிலேயே குடியிருக்கிறார் இவர். அ.இ.அ.தி.மு.க. தொண்டர்கள் இவருக்காக உயிரைக் கொடுத்து வேலை செய்கிறார்கள். "தொகுதியில் எங்கும் தண்ணீர்ப் பஞ்சம், இளைஞர்கள், தொழிலாளர்களிடையே வேலை வாய்ப்பு இல்லாதது, கெரஸின் விலை உயர்வு மற்றும் ஆளும் கட்சிக்கு எதிரான மனநிலை ஆகியவை காரணமாக என் வெற்றி வாய்ப்பு நன்றாக இருக்கிறது" என்கிறார் ஆறுமுகம்.

"பல இடங்களில் இவர்தான் இப்போதைய எம்.எல்.ஏ. என்று நினைத்து "இவ்வளவு நாளா எங்க போயிருந்தீங்க?" என்று விசாரித்திருக்கிறார்களாம்! தங்கள் கட்சித் தொண்டர்களை முடுக்கி வேலை வாங்கும் அ.இ.அ.தி.மு.க. பகுதிச் செயலாளர் கோதண்டராமன் "மக்கள் முடிவு பண்ணிட்டாங்க... ஒட்டுமொத்தமாகத் தமிழ்நாட்டில் அடிக்கும் அம்மா அலை இங்கும் அடிக்கும்; ஆற்காட்டாரை கவிழ்க்கும்!" என்கிறார்.

தொகுதியெங்கும் பரவலாகச் சென்று பார்த்தபோது, மக்களின் அதிருப்தி பளிச்சென்று புரிந்தது. தாழ்த்தப்பட்டோர், வன்னியர்கள், தெலுங்கு பேசும் நாயுடு மக்கள் கணிசமாக இருக்கிறார்கள். அன்றாட வாழ்க்கையில் நகர்ப்புற மக்கள் சந்திக்கும் பிரச்னைகள், தண்ணீர்ப் பிரச்னை, கழகப் பிரமுகர்களின் அடாவடி, வேலையில்லாத் திண்டாட்டம் (வழக்கமான 'பணப்புழக்கம் இல்லீங்க' என்னும் குறையும் நிறையவே உண்டு) ஆகியவற்றால் பெரிய சவாலைச் சந்தித்து நிற்கிறார் ஆற்காட்டார்.

— கௌசல்யா

படங்கள்: ராஜன்

**தேர்தல்னா சும்மாவா? டென்ஷன்தான். சந்து பொந்தெல்லாம் வேட்பாளர்கள் பிரசாரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்க, அவர்கள் வீட்டில் எப்படிச் சமாளிக்கிறார்கள்? இந்தத் தலையாய கேள்வி மண்டையைக் குடைய, வில்லிவாக்கம் தி.மு.க. வேட்பாளர்–நடிகர் நெப்போலியன் வீட்டில் முதலில் ஆஜரானோம்.**

சென்னை ராயப்பேட்டையிலிருக்கும் நடிகர் நெப்போலியன் வீட்டில் மருந்துக்கும் சினிமா முகங்களைக் காணோம். திறந்து கிடக்கும் வாயிலைக் கடந்து உள்ளே நுழைந்ததும் வரவேற்பறை. அங்கே ஒரு தொலைபேசிக்குக் காது கொடுத்து, மற்றொரு தொலைபேசியை இன்னொரு கையில் பிடித்தபடி இரண்டு லைன்களில் பேசிக் கொண்டிருந்தார் ஜெயசுதா நெப்போலியன். நம்மைக் கண்டதும் ரிஸீவரை உயர்த்தி ஒரு சல்யூட்! "பத்து நிமிஷம் கழிச்சு கால் பண்ணுங்க ப்ளீஸ்" என்றபடி ரிஸீவரைப் பொருத்தி விட்டு நம் பக்கம் கவனத்தைத் திருப்புகிறார்.

*என்ன மேடம், ஃபோன்கால்களுக்கு பதில் சொல்லியே வாய் வலிச்சுடுச்சா...?*

நிஜம்தான் சார்... ஒரு நாளைக்கு குறைஞ்சது இருநூறு கால்கள் வருது... எல்லா அழைப்புகளையும் முதல்லே நான் அட்டெண்டு பண்ணிட்டுத்தான், அப்புறம் அவரோட அசிஸ்டெண்டுகள்கிட்டே கொடுப்பேன். இது அவரோட உத்தரவு. வில்லிவாக்கத்திலிருந்து மட்டும் தினசரி பத்து கால்கள் வருது. எங்க தெருவுக்கு ஏன் இன்னும் பிரசாரத்துக்கு வரல்லே, இந்தப் பக்கம் கொசு மருந்து அடிக்க ஆள் வந்து ஒரு வாரமாச்சுன்னு உரிமையோட கேட்குறாங்க...

*உறவினர்கள் நிறைய வந்திருக்காங்களா?*

பொதுவா ஒவ்வொரு சம்மர்லேயும், ஒரு ஜாலி ஹாலிடே கேம்ப்பே எங்க வீட்ல நடக்கும். இந்த முறை, நாங்க வரலாமா கூடாதான்னு அவங்களே கேட்குறாங்க. தேர்தல் முடிஞ்சு வாங்கன்னு சொல்லிட்டோம். திடீர்னு பயங்கர பிஸி பர்சனாக ஆயிட்டேன். காப்பிக்கு மட்டும் இருபது லிட்டர் பால் வாங்கறோம்.... சலிக்காமல் நானே காப்பி போட்டுக் கொடுக்கிறேன். கல்யாண வீடு மாதிரி ஜேஜேன்னு இருக்கு.

இன்னொரு பக்கம், என்னோட பையன் தனுஷ் பண்ற வால்தனங்களைச் சகிச்சுக்கவே முடியலை. வீட்டுக்கு வர்ற எல்லார்கிட்டேயும் உதயசூரியனுக்கு வோட்டுப் போடுங்கன்னு அஞ்சு விரலையும் விரிச்சுக் காட்டி வோட்டுக் கேட்கிறான். அவர் காலையில் ஆறு மணிக்கெல்லாம் பிரசாரத்துக்குக் கிளம்பிடுவார். அப்போ தூங்கிட்டு இருப்பான். இரவு மூணு மணிக்குத் திரும்பி வருவார். அப்போதும் தூங்கிட்டு இருப்பான். இதனால் அப்பா எங்கேன்னு கேட்டு தினசரி எனக்கு அடி உதைதான். இப்போ வெளி மாவட்டங்களுக்கு டூர் போயிட்டதால டெலிபோன்லதான் அவர் குரலைக் கேட்கிறோம்.




*தேர்தலில் போட்டியிட உங்க கணவருக்கு வாய்ப்புக் கிடைக்கும்னு நினைச்சீங்களா?*

எம்.பி. தேர்தல்லே சீட் கேட்கப் போறதாச் சொன்னார். இப்போ சென்னையிலேயே கொடுத்துட்டாங்க. சினிமாவுக்கு முன்பு, இவரது மாமா கேஎன். நேருவுக்கு பி.ஏ.வாக இருந்திருக்கார். இதனால், அரசியல் இவருக்குப் புதுசு இல்லே. நிறைய தேர்தல் வேலை செஞ்சுருக்கார். ஆனால் இப்போ இவரே வேட்பாளராக நிற்பதால் பொறுப்பு ரொம்ப அதிகமாயிடுச்சு. எதைச் செய்தாலும், ஒழுங்கா செய்யணும்னு சொல்லிட்டு, நேரம் காலம் பார்க்காம கஷ்டப்படுவார். ஆனால், இதுதான் அவர்கிட்டே எனக்கு ரொம்பப் பிடிச்ச விஷயம்!

*தேர்தல்லே சீட் கிடைச்சதும் முதல்லே யார் வாழ்த்தினாங்கன்னு ஞாபகம் இருக்கா?*

நடிகர் விஜய்காந்த் சார்தான் கோயம்புத்தூரில் இருந்து ஃபோன் செய்து வாழ்த்தினார். அடுத்து ரஜினி சார்... மக்களுக்கு சர்வீஸ் பண்ண கடவுள் கொடுத்திருக்கும் சான்ஸ், நல்லா பண்ணுங்கன்னு சொல்லியிருக்கார். அப்புறம் ஒரு வாரத்துக்கு ஒரே வாழ்த்து மழைதான்."

உங்க கணவர் பாட்டெல்லாம் பாடி பிரசாரம் செய்யறார்ன்னு கேள்விப்பட்டோம்.

ஆமா... 'சிவலப்பேரி பாண்டி' படத்துல வர்ற கிழக்கு சிவக்கையிலே பாட்டை இவர் உல்டா செய்து பாடறார். அதுக்கு நல்ல ரெஸ்பான்ஸ் கிடைக்குது. அந்தப் பாட்டு எனக்குக் கூட மனப்பாடம் ஆயிடுச்சி. "கிழக்கு சிவக்கையிலே... சூரியன் உதிக்கையிலே, நான் பழசை நினைக்கையிலே அது பகலா மாறிடுச்சே"ன்னு பாடுவார். இது தவிர மேடையிலே நல்லாவும் பேசுவார்... இப்போ பிரசாரத்துக்குக் கிளம்பும் முன்னாடி ஒரு டயலாக் பேசிக் காட்டி நல்லா இருக்கான்னு கேட்டார். ரொம்ப சூப்பரா இருந்தது. "தன் மானம் காக்கும் கூட்டணியா? அவமானம் காக்கும் கூட்டணியா? சிங்காரச் சென்னை தரும் தளபதியா...? சிங்கப்பூரில் சொத்துக் குவிக்கும் தினகரனா...? சமத்துவபுரமா? சசிகலாபுரமா? கோயிலே குடியிருக்கும் கோபாலபுரமா? குடிகூட இருக்க முடியாத போயஸ்கார்டனா...? செல்லும் இடம் விரைவாகச் செல்ல பாலங்களா? செல்லும் இடங்களுக்குப் போக முடியாமல் போட்ட செக் போஸ்டுகளா?"

கடவுளே... நீங்களே கூட பிரசாரத்துக்கு கிளம்பலாம் போலிருக்கே...?

அய்யய்யோ... எனக்கு வீட்டைக் கவனிச்சுக்கவே நேரம் சரியா இருக்கு...

இந்த அளவுக்கு ஜெயலலிதாவையும், அ.தி.மு.க.வையும், தாக்கிப் பேசுகிறாரே... அவருக்கு ஆபத்து இருக்கும்ன்னு நீங்கள் பயந்ததே கிடையாதா?

எல்லாத்தையும் ஃபேஸ் பண்ணக்கூடிய துணிச்சலான ஆள் அவர்... அதுக்கெல்லாம் பயந்திருந்தா அரசியல்லே இறங்கியிருப்பாரா? அவரோட தைரியத்தைப் பார்த்ததும் நானும் தைரியமாயிட்டேன்.. வேற வழி?"



# 24 மணி நேரம் போராளை...

வில்லிவாக்கத்தில் உங்க கணவருக்கு வெற்றி வாய்ப்பு எப்படியிருக்குன்னு நினைக்கிறீங்க...

எங்கிட்டே கேட்டா நிச்சயம் ஜெயிச்சுடுவார்ன்னுதான் சொல்லுவேன். ஏன்னா... மிடில்கிளாஸ் மக்கள் அதிகம் இருக்கிற தொகுதி.. அவங்க... வலி கஷ்டம் என்னன்னு அவருக்கு நல்லாவே தெரியும்.... அதனால் தொகுதியின் தேவை அறிஞ்சு... பாடுபடுவார்... அதனாலே எல்லோரும் இவருக்குத்தான் வோட்டுப் போடுவாங்க.

வில்லிவாக்கம் தொகுதியைப் பற்றி உங்களுக்கு வேறு என்ன தெரியும்?

ஆசியாவிலேயே மிகப் பெரிய தொகுதி. எட்டு லட்சத்து பதினான்காயிரம் வாக்காளர்கள் இருக்காங்க... அதைவிட முக்கியம்... சென்னைக்கே குடிநீர் தரும் புழல் ஏரி அங்கேதான் இருக்கு.

***நீங்க ஒரு நட்சத்திர வேட்பாளர் மனைவிங்கற விஷயத்துலே ஜெயிச்சுட்டீங்க மிஸஸ் நெப்போலியன்!***

அடுத்து, கே.கே. நகரிலுள்ள ஆலந்தூர் அ.தி.மு.க. வேட்பாளர் வளர்மதியின் வீடு. அதுவும் திருவிழா போலத்தான் காட்சியளிக்கிறது. தெரு வாசலில் கொடி மற்றும் மைக் கட்டிய ஏழெட்டு ஆட்டோக்கள், கார்கள் அணிவகுக்க, உள்ளே புகுந்தோம். கார் ஷெட் தற்காலிக வரவேற்பறையாக மாறியிருக்கிறது. அதில் பெரும்பாலும் வெளியூரிலிருந்து வந்திருக்கும் மகளிரணியினர் இஷ்டத்துக்கு அரசியல் பேசிக் கொண்டிருக்கின்றனர். சளைக்காமல் அவர்களுக்கு நேரப்படி டீ வந்து விடுகிறது. கோவையைச் சேர்ந்த மகளிரணி பிரமுகர்கள் சிலர் இங்கேயே தங்கியிருக்கிறார்களாம்.

வீட்டு மாடியிலிருந்து கரை வேட்டித் தொண்டர்கள் ஏறுவதும் இறங்குவதுமாய் இருக்க, உள்ளே நான்கைந்து ஃபோன்கள் ட்ரிங்கிக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றாய்ப் பேசி வைக்கிறார் கே.வி. பாலசுப்ரமணியன். வளர்மதியின் கணவர்!

"ஒவ்வொரு ஆணுக்கும் பின்னால ஒரு பெண் இருப்பாங்க... எங்க வீட்டுல மட்டும் அதை மாத்திச் சொல்லணும். தேர்தல்ல சீட் கிடைக்கறதே பெரிய விஷயம். என் மனைவிக்குக் கிடைச்சிருக்கு. நான்தான் எல்லாம் பண்ணணும். மற்ற நேரங்கள்ல மார்க்கெட்டுக்குப் போறது, சமைக்கறது போக தொண்டர்களையும் பார்ப்பாங்க. ஆனால் இப்ப, ஒருநாளைக்கு 24 மணி நேரம் போறலை, பாவம். அதனால எனக்குன்னு சில தேர்தல் வேலைகளை எடுத்துக்கிட்டேன்'' என்று பேசிக் கொண்டிருந்தவரை செல்ஃபோன் டிஸ்டர்ப் செய்ய "ஹலோ..." என்கிறார்.

"ஆங்... என்ன மாரிமுத்து... அப்புறமாய்க் கூப்பிடறேனே...'' என்று உரிமையாய்க் கட் பண்ணிவிட்டுத் தொடர்ந்தார்.

''வட்டச்செயலாளர்... அவங்க இவங்கன்னு நிறைய பேர் வந்துட்டிருக்காங்க... ஃபோன்லயும், நேர்லயும். அவங்களை உற்சாகப்படுத்தணும். தொண்டர்களுக்கு அது தான் முக்கியம். அதைத்தான் நான் பண்ணிக்கிட்டிருக்கேன். அதோட, பிரசாரத்துக்கு காலையிலே அவங்ககூட கிளம்பிப் போனா ராத்திரிதான் அவங்களோட வீடு திரும்புவேன். பிரசார ரூட் போடறது, எந்த இடத்துல வாக்கு மட்டும் சேகரிக்கிறோம்; எந்த இடத்துல பேசணும்ங்கறதையெல்லாம் முந்தின நாள் ராத்திரி எழுதிக்கிட்டு மறுநாள் அதன்படி கிளம்புவோம். இந்த ஏற்பாடையெல்லாம் நான்தான் பண்றேன்'' என்றவரை திடீரென்று இடைமறித்தது, "ஐயா..." என்ற குரல்.

திரும்பினால் நான்கைந்து பெண்கள், கையில் குழந்தையுடன்.

"எங்க வூடு எரிஞ்சு போச்சுங்க. தெருவுல இருக்கிறோம்; அதுக்கு உங்களை வந்து பார்க்கச் சொன்னார் வீடியோ சரவணன்" என்ற அந்தப் பெண்களை அழைத்து விவரம் கேட்டுவிட்டு, ''அடுத்தாப்ல அம்மா ஆட்சிக்கு வந்துடுவாங்க. கண்டிப்பா வீடு கட்டித் தர்றோம்'' - அமைதியாய்க் கூறி அனுப்பிவிட்டுத் தொடர்ந்தார்.




"பாருங்க. இப்பவே கோரிக்கைகளை எடுத்துக்கிட்டு நேரா வீட்டுக்கு வந்திடுறாங்க. இது மாதிரி நிறைய பேர். இவங்களைச் சமாளிக்கவே பெரும்பாடா இருக்கு. ஆனாலும் இனிமையாதான் பேச வேண்டியிருக்கு" என்கிறார்.

"இவ்வளவு தெளிவா பேசறீங்களே... நீங்களும் அரசியல்..."

"அ.தி.மு.க.விலதான் இருக்கேன். ஆனா தீவிரமாயில்லை. ஒருத்தர் தீவிர அரசியல்ல இருந்தா போதாதா?'' என்று சொல்லும் இவர் வீட்டில், மதுரை ஆட்சியா? சிதம்பரம் ஆட்சியா? என்று யாரும் கேட்க முடியாது. இங்கு, இருவர் ஆட்சியும்தான். ஆமாம், வளர்மதிக்கு மதுரை. கணவர் பாலசுப்ரமணியத்துக்குச் சிதம்பரம்!

சந்திப்பு : **ஏக்ஜி, ஜெயந்தன்**

படங்கள் : **ராஜன்**





# எம்புள்ள கம்ப்யூட்டர் என்னமா படிக்கிறான் !

'கம்ப்யூட்டரா ! அடி அம்மாடி, அது பணக்காரங்க படிப்பாச்சேன்னு
நெனச்சிகிட்டிருந்த காலம்போய், இப்ப எல்லா புள்ளைங்களும்
கம்ப்யூட்டர் படிக்கிற காலமாச்சி. பள்ளிக்கூடத்துல எம்புள்ள என்னமா படிக்கிறான்
தெரியுமா? வீட்டுக்கு வந்தா ஒரே கம்ப்யூட்டர் பேச்சுதான். மவுஸுங்கிறான்,
மானிட்டர்ங்கிறான்.. எனக்கு ஒண்ணுமே புரியல..
ஆனா ரொம்பப் பெருமையா இருக்கு.
இனி புள்ளைங்களுக்கு நல்ல எதிர்காலம். இதுக்கு காரணமான
இந்த ஆட்சி தொடரணும், மீண்டும் கலைஞர் ஆட்சி மலரணும்.'




## தொடரட்டும் இந்த பொற்காலம்!

தேர்தல் நாள் :
**10 - 5 - 2001**

வாக்களிப்பது உங்கள் உரிமை.
அந்த ஜனநாயகக் கடமையை நிறைவேற்றத் தவறாதீர் !

## ஆதரிப்பீர் உதயசூரியன்

வெளியீடு : திமுக தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை 600 018.



கேட் திறக்கும் சத்தம் கேட்டது. ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். தலையில் கூடையுடன் மயிலம்மா திண்ணையை நோக்கி வந்துகொண்டிருந்தாள். வேகமாகக் கதவைத் திறந்து பழக்கூடையை இறக்கினேன். முகத்தில் உற்சாகம் இல்லை. வழக்கமான 'பழம் வேணுமா?' என்ற கேள்வியும் வரவில்லை.

ஏதோ பிரச்னை என்பது புரிந்தது. உள்ளே சென்று ஒரு தம்ளர் மோர் எடுத்து வந்து கொடுத்தேன்.

மடமடவென்று குடித்துவிட்டு "பழம் வேணுமா?" என்றாள்.

"நேத்து வாங்கினதையே இன்னும் சாப்பிட்டு முடிக்கலை. சப்போட்டா கிடைச்சா வாங்கிட்டு வா."

"சரி. தூக்கி விடும்மா. கிளம்பறேன்..." குரலில் சலிப்பு.

"என்ன மயிலம்மா, ஒரு மாதிரி இருக்கே?"

"அந்தப் பெரிய வூட்டு அம்மாவுக்குப் பழம் கொடுத்துட்டு வரேன். இந்தக் காலனியில அதுக்கு மட்டும்தான் நான் கடன் கொடுக்கறேன். மூணு, நாலு நாளைக்குச் சேர்த்து வாங்கிட்டு மொத்தமா பணம் தரும். போன வாரம் எண்பது ரூபாய்க்குப் பழம் வாங்குச்சு. இன்னிக்கு என்னடான்னா ஐம்பது ரூபாதான் தந்துச்சு. மீதி முப்பது ரூபாய் அப்புறம் தர்றியான்னு கேட்டேன். அவ்வளவுதான், பயங்கரமா சண்டை போட ஆரம்பிச்சிடுச்சு" என்று நிறுத்தினாள் மயிலம்மா.

"ஏன்... கணக்கு சரியாத்தானே வருது?" என்று முடிப்பதற்குள் குறுக்கிட்டாள் கோபத்துடன்.

"இல்லியாம்... ஐம்பது ரூபாய்தான் பாக்கியாம்! "உன்னோட முப்பது ரூபா பிச்சைக் காசை வச்சு நான் என்ன பண்ணப் போறேன்னு" ஒரே சத்தம்... ப்பா, காது குடுத்து கேட்க முடியலை. காலையில் ஒன்பது மணிக்கு சும்மாட்டைக் கட்டுனா, பொழுது சாயத்தான் உதறி கொடியில போடறோம், ஒரு சாண் வயித்தைக் கழுவத் தானே இத்தனை பாடும், அப்புறம் அந்தக்

# மயில





# ம்மா

காசும் கைக்கு ஒழுங்கா வரலேன்னா எப்படி? இந்த மாதிரி ஏற்கனவே இரண்டு தடவை நடந்திருக்கு. இனி அந்த வூட்டுக்குப் பழம் கொடுக்கறதா இல்லை....'' என்றபடி எழுந்து நின்றாள்.

நான் கூடையைத் தூக்கி விட்டு அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

**ம**றுநாள் ரைஸ் மில்லுக்குப் போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தபோது, பெரிய வீட்டிலிருந்து மயிலம்மா வந்து கொண்டிருந்தாள். எனக்கு ஒரே ஆச்சர்யம்!

எஸ். சுஜாதா

"என்ன மயிலம்மா பெரிய வீட்டிலிருந்து வர்றே?''

"பெரிய வூட்டுக்கார அம்மா பேத்திக்கு டைபாய்டு சுரம். பக்கத்துல சொன்னாங்க. இந்த நேரம்னு பார்த்து ஐயா வெளியூர் போயிருக்காரு. பாவம் அந்தம்மா! தனியா என்ன செய்யும் சொல்லு? அதான் ஒரு டஜன் சாத்துக்குடி குடுத்துட்டு வர்றேன். பணம் எங்கே ஓடிப் போகுது..? சப்போட்டா கேட்டியே... வீட்ல கொடுத்துட்டுப் போறேன். இன்னிக்கே சாப்பிட்டுடு... நல்ல கனிஞ்ச பழம்...'' என்றாள்.

பெரிய வீட்டுக்காரம்மாள் மனசும் கனிந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ○

# நடக்குமென்பார் நடக்கும்!



**மேஷம் :** செம ஜாலி வாரம் இது- வீட்ல விசேஷம் நடக்க வாய்ப்பிருக்கு. உங்க மதிப்பு, அந்தஸ்து ஜில்லுன்னு உயரப் போகுது. பணத்துக்குப் பஞ்சமில்லை. பல வழிகள்ல இருந்து வரும். பேச்சில திறமை, சாமர்த்தியம் வெளிப்படும். நீங்களே உங்களைப் பார்த்து வியப்படையப் போறீங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரப் போகுது. இதுவரை இருந்து வந்த கடன் தொல்லை இனிமே காணாமப் போயிடும். எழுத்து, விஞ்ஞானம், பத்திரிகைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புகழும் பாராட்டும் கூடும். அரசியல்வாதிகள் திடீர்த் திருப்பத்தைச் சந்திப்பாங்க.



**ரிஷபம் :** இந்த வாரம் எதிலயும் நீங்க கொஞ்சம் அடக்கி வாசிக்கணும். பேச்சுல நிதானம் அவசியம். இருக்கிற வெயில் போதாதுன்னு அனல் பறந்தா பிரச்னைதான். வீட்ல சின்னச் சின்னப் பிரச்னைகள் தலைதூக்கும். செலவு எகிறும். பர்ஸைப் பத்திரப்படுத்தறது நல்லது. எரிபொருள், இயந்திரம், ஆயுதம், மின்சாரத் துறைகள்ல வேலை பார்க்கறவங்க எச்சரிக்கையா இருக்கணும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றிவாய்ப்பு கூடும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புக்கள் ஏற்படலாம். எதிர்ப்புகளுக்குப் பஞ்சமிருக்காது. அதுக்காக கவலைப்படாதீங்க.



**மிதுனம் :** மனசுல தன்னம்பிக்கையும் துணிச்சலும் ஏற்படும். அரசாங்க விவகாரத்துல நல்ல திருப்பம் ஏற்படப் போகுது. பணநடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. இருந்தாலும் செலவுகள் மனசை வாட்டும். சிக்கனத்தைக் கடைப்பிடிங்க. வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. பயணத்தால சங்கடங்கள் ஏற்படலாம். அதனால வெளியூர்ப் பயணத்தை ஒத்திப் போடறது நல்லது. எல்லார்ட்டயும் சுமுகமாகப் பழகறது நல்லது. கூடப் பிறந்தவங்களாலயும் மனைவியாலயும் சின்னச் சின்னப் பிரச்னைகள் வரலாம். கதாசிரியர்கள், கவிஞர்களுக்குப் புகழும் பாராட்டும் கூடும்.



**கடகம் :** கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான சந்தர்ப்பம் வரப் போகுது. ஆனவங்களுக்கு 'பாப்பா' வாய்ப்பு இருக்கு. மதிப்பும் மரியாதையும் திடீர்னு கூடப் போவதைப் பார்த்துத் திக்குமுக்காடப் போறீங்க. குடும்பத்துல மகிழ்ச்சி தாண்டவமாடும். எதிர்ப்புகள் இருக்காது; எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வரவேற்பும் பாராட்டும் அதிகரிக்கும். அரசியல் வாதிகளுக்குப் பதவி, புகழ் தேடி வரப் போகுது. பெண்கள் டிரெஸ், நகைன்னு நினைச்சதை வாங்கறதுக்கு சான்ஸ் இருக்கு. வேலை தேடிட்டு இருக்கறவங்களுக்கு வேலை வாய்ப்பு கதவைத் தட்டப் போகுது.



**சிம்மம் :** உங்க பேச்சாற்றல், திறமை எல்லாம் பளிச்சுன்னு வெளிப்படப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்க வெற்றிநடை போடப் போறீங்க. அரசியல்வாதிகளுக்கு மதிப்பும் மரியாதையும் கூடப் போகுது. பதவி, பட்டம்னு தேடி வரப் போகுது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். எடுத்த காரியங்களைத் தலைகீழ் நின்னாவது முடிச்சிடுவீங்க. மனசுல சின்ன சின்னக் குழப்பம் இருந்துட்டே இருக்கும். கோபப்படறதைக் கொஞ்சம் ஓரம் கட்டிடுங்க. யார்கிட்டேயும் வெளிப்படையாப் பேச வேண்டாம். கொடுக்கல் வாங்கல்ல கவனமா இருங்க.



**கன்னி :** புனிதமான காரியங்கள்ல பங்குபெற சந்தர்ப்பம் வரும். மனசுல தெளிவும் தன்னம்பிக்கையும் பிறக்கும். கற்பனை, குற்றால அருவி மாதிரி கொட்டப் போகுது. எழுத்தாளர்கள் பத்திரிகையாளர்களுக்கெல்லாம் புகழ், பாராட்டு கூடும். கணவன் மனைவிக்குள்ள இதுவரை பிரச்னை இருந்தா, இனி ஜூட்டாயிடும். வெளியூர் பயணத்தால நன்மை உண்டாகும். எதிலயும் பதற்றப்படாம நிதானமாச் செயல்படுங்க. ரியல் எஸ்டேட் பிசினஸ் பண்றவங்க எச்சரிக்கையா இருக்கறது நல்லது.



**துலாம் :** எதிலயும் யோசிச்சு ஈடுபடறது நல்லது. வீண் விவகாரங்கள்ல தலைகாட்ட வேண்டாம். பொருளாதாரப் பிரச்னை தள்ளாட்டமாகத்தான் இருக்கும். கணவன் மனைவிக்குள்ள சின்ன சின்னக் கருத்து வேறுபாடு வர வாய்ப்பிருக்கு. இதுவரை இழுத்தடிச்சுக்கிட்டு இருந்த காரியம் இப்ப நிறைவேற வாய்ப்பிருக்கு. ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் வெற்றி வாய்ப்பு கூடும். போட்டி பந்தயங்கள்ல ஈடுபடறவங்களுக்கு வெற்றிக்கோப்பை கைக்கு எட்டும். வியாபாரிகள் கொஞ்சம் எச்சரிக்கையா இருக்கறது நல்லது.



**விருச்சிகம் :** எதிலயும் அவசரம், பதற்றம் வேண்டாம். பயணத்துல எச்சரிக்கை அவசியம். சண்டை சச்சரவுகளைக் கண்டா தூர ஓடறது நல்லது. புதுசானவங்களை நம்பி எந்தக் காரியத்திலயும் ஈடுபட வேண்டாம். சாப்பாட்டு விஷயத்துல கொஞ்சம் வாயைக் கட்டுறது மருத்துவச் செலவிலிருந்து தப்பிக்க உதவும். இயந்திரங்கள், மின்சாரம், ஆயுதங்கள், இவற்றைப் பயன்படுத்தும் போது கவனமாச் செயல்படுங்க. வீட்ல 'டும் டும்' நடக்க வாய்ப்பிருக்கு. கணவன் மனைவி உறவு சீரா இருக்கும். அரசியல்வாதிகள் எதிர்பாராத திருப்பத்தைச் சந்திப்பாங்க. வரவேற்பும் பாராட்டும் உச்சிகுளிர வைக்கும். வேலையில்லாதவங்களுக்கு வேலை வாய்ப்பு தேடி வரும். கெட்ட சகவாசத்தைக் கைவிட்டா, ஒரு பிரச்னையிலிருந்து தப்பிக்க வாய்ப்பிருக்கு.



**தனுசு :** கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு புகழ், பாராட்டு கூடும். பெண்களுக்கு உற்சாகமான வாரம் இது. புது நகைகள், ஆடைகள் வாங்க வாய்ப்பிருக்கு. ஜாலி டூர் அடிப்பீங்க. பார்ட்டி, பங்ஷன்னு சுத்தப் போறீங்க. அரசியல்வாதிகள் முன்னேற்றம் அடைவாங்க. கணிதம், எழுத்து, பத்திரிகைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் நன்மையான வாரம் இது. பெரியவங்க அதிருப்திக்கு ஆளாகாம இருப்பது நல்லது. எந்தக் காரியத்திலயும் விவேகத்தை வளர்க்கறது அவசியம். பெரியவங்க ஆலோசனைப்படி நடந்தா நல்லது நடக்க வாய்ப்பிருக்கு.



**மகரம் :** மனசுக்கு இனிமையான சம்பவங்கள் நடக்கும். பொருளாதாரம் திருப்தியா இருக்கும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு சான்ஸ் இருக்கு. வெளியூர் அல்லது வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வரும். நண்பர்கள், உறவினர்கள் எல்லாம் ஓடி வந்து உதவுவாங்க. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கெல்லாம் செழிப்பான சூழ்நிலை உண்டு. அரசியல்வாதிகள், புதிய திருப்பத்தைப் பார்க்கப் போறாங்க. கணவன் - மனைவி உறவு சீரா இருக்கும். வீண் செலவுகள் ஏற்படும். சிக்கனமா இருக்கறது பர்ஸைப் பாதுகாக்கும்.



**கும்பம் :** மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் பிறக்கும். புத்திசாலித்தனம், சாமர்த்தியம், பேச்சுத் திறமையெல்லாம் இப்ப வெளிப்படப்போகுது. வீட்ல மகிழ்ச்சிக்குப் பஞ்சம் இருக்காது. அரசியல்வாதிகளுக்குப் புதிய பதவி தேடி வரும். மதிப்பு அந்தஸ்து உயரும். கொடுக்கல் வாங்கல்ல அதிக லாபம் எதிர்பார்க்க முடியாது. கிரக சஞ்சாரம் சரியில்லாததால வீண் அலைச்சலைத் தவிர்க்க முடியாது. எதிலயும் அவசரம், பதற்றம் வேண்டாம். துணிச்சலான காரியங்கள்ல ஈடுபாடு அதிகரிக்கும்.



**மீனம் :** உங்க துணிச்சல், வீரம் வெளிப்படும். எடுத்த காரியத்தை எப்பாடுபட்டாவது நிறைவேத்திடுவீங்க. எதிர்பார்த்திருந்த நல்ல செய்தி இப்ப வந்து சந்தோஷப்படுத்தும். இரசாயனம், கம்ப்யூட்டர், எல்க்ட்ரானிக்ஸ் வியாபாரம் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். இராணுவம், காவல், சட்டம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு தேடி வரப் போகுது. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு இது யோக வாரம். புதிய முயற்சிகள் எதுவும் இப்ப வேண்டாம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா இருக்கறது நல்லது. ○

லோகத்துல இன்னிக்குத் திரும்பற சுவத்து மேல எல்லாம் காதலர் தின போஸ்டர்கள் கண்ணைப் பறிக்கறது. பார்க்கற சினிமாவெல்லாம் காதல் காட்சி கொப்பளிக்கறது. ஏர்ற பஸ்ஸில எல்லாம் இள வட்டங்களோட காதல் சேட்டைகள் கும்மாளமிடறது. எங்க பார்த்தாலும் காதல் காதல் காதல்... இந்த நெலமையில நாம மாத்தரம் மடிசஞ்சியா என்னத்தையோ உபதேசம் பண்ணின்டிருக்கிறதுல அர்த்தமில்ல.

நாமளும் கோதால இறங்கிட வேண்டியதுதான்னு சங்கல்பம் பண்ணின்டு நானும் என் பங்குக்கு ஒரு காதல் கதை பிரவசனம் பண்ணனும்ங்கிற உத்தேசத்தோட ஸப்ஜெக்ட் தேடி பேப்பரைப் புரட்டிண்டு இருந்தேன். ஒரு பக்கத்துல பாரதி பேச்சுப் போட்டி, ஸ்டுடன்ட்ஸ் பேச்சுப் போட்டி, இன்னொரு பக்கம் அரசியல் பிரசாரக் கூட்டத்துல அந்தத் தலைவர் பிச்சு உதறினார், இந்தக் கட்சிக்காரர் தோய்ச்சுக் காயப்போட்டார்ன்னு நியூஸ்.

யோசிச்சேன். இந்த இரண்டையும் மிக்ஸ் பண்ணி ஒரு கதை பண்ணலாம்னு தோணித்து. ஓகே, இனி கதைக்கு வருவோம்.

செல்வாக்குப் படைச்ச அரசியல் பிரமுகர் ஒருத்தர் - அவர் ஊர் பேர் சொல்ல வேணாம். நான் உருப்படியாக ஆத்துல என் பார்யாள் முகத்துல முழிக்கணுமோன்னோ? அவரோட வாரிசை பெரிய இடத்துச் சம்பந்தத்துல சேர்க்கணும், ஸ்டேட்ஸுக்கு அனுப்பி ஸ்டேட்டஸோட வாழ வைக்கணும்கிற அபிலாஷையோட காலேஜுக்கு அனுப்பி வச்சிருக்கார். ஒரே புத்திரி. பின்னாடி அந்தஸ்து ஒசந்ததும் மயூரின்னு பேர் பூட்டிண்டது.

இப்ப நம்ம கதாநாயகி மயூரிதான். மயூரின்னா பெயருக்கேத்தப்படி கொஞ்சம் ஒயிலா, ஸ்டைலாத்தான் இருப்பா. அது கோஎஜுகேஷன் காலேஜ். அத்தனை விடலைப் பசங்களோட பார்வையும் தன் பக்கம்தான் இருக்கணும்கிறது அவளோட பாலிஸி. ஆனா அதர் ஜெண்டர் எப்பேர்க் கொத்ததா இருந்தாலும் அதை ஒரு புழுவாத்தான் பார்ப்பா. வலிய வந்து பேச்சுக் கொடுத்தாலும் ஒரு கோணல் சிரிப்பைத் தூக்கிப் போட்டுப் போயிண்டே இருப்பா. சுபாவத்துலேயே கொஞ்சம் வாய்ச் சவடால். அத்தோட, அரசியல் செல்வாக்கும் புத்தி சாலித்தனமும் சேர்ந்திருக்கு. மேடைப் பேச்சுல, பேச்சுப் போட்டியிலே தன்னை மிஞ்சி ஒருத்தரும் போகப் படாதுங்கற அபிலாஷை. கதாநாயகி பத்தி போறும்.

அதே காலேஜ்ல லோகேஷ் லோகேஷ்னு ஒரு பிள்ளையாண்டான். ஜஸ்ட் பிஹைண்ட் மயூரிதான் அவன் வீட். லோகேஷ் படா ப்ரில்லியன்ட் ஸ்டூடன்ட்டாக்கும்! பெங்களூரிலேயே பொறந்து வளர்ந்ததுனாலேயோ என்னவோ பெங்களூர் தக்காளி ரங்குல இருப்பான். அரும்பு மீசை பளீர் எடுப்பு. லிப்ஸ்டிக் பூசினாப்பல உதடு. ஒடம்பு ஜிம் வார்ப்பு. இத்தனைக்கும் மேல பெரிய அதிசயம் என்னன்னா, அவனுக்குத் தாய்மொழி கன்னடம்னாலும் தமிழ் ப்ரொஃபஸரே பிரமிச்சுப் போற அளவுக்குத் 'தமிழெந்தன் உயிருக்கு நேர்'னு மார் தட்றவன். பேச்சுப் போட்டின்னு வந்தா - அது இன்டர் - காலேஜ் லெவல்னாக் கூட - அவனை அடிச்சிக்க ஆள் இல்லை. இந்த வருஷ ஆரம்பத்திலேயிருந்து இதுவரைக்கும் ஆறு போட்டிக்கு மேல நடந்தாச்சு. அத்தனையிலும் பரிசு அவனுக்கே!

அவன் காம்படிஷன்ல மெடல் கோத்துண்டு வர்ற ஒவ்வொருவாட்டியும் மத்த ஸ்டூடன்ட்ஸ் எல்லாம் - குறிப்பா கேர்ள் ஸ்டூடன்ட்ஸ் அவனுக்குப் புகழாரம் சூட்டிப் பூரிச்சுப் போவா. மயூரியைத் தவிர... அவன் லோகத்தையே ஜெயிச்சிண்டு வந்த லோகேஷா இருந்தாலும் சரி - மயூரியைப் பொறுத்த வரைக்கும் அவன் 'ஃபூ'தான்.

மற்ற பொண்டுகள்ல அவனண்டை தன் காதலை ஜாடை மாடையாச் சொன்னவா உண்டு; அவாளையெல்லாம் அவன் ஜென்டிலாத் தவிர்த்திருக்கான். ஆனா...மயூரியைப் பார்க்கறச்சே நுரையீரல் துருத்தியா வேலை செஞ்சு, ஒரு பெருமூச்சை நெட்டித் தள்ளியிருக்கு. ஆனா அவ பராமுகமா இருக்காளே ஏன்?

கொஞ்சம் யோசிச்சா... காரணம் புரியும்.

# இதுக்குப் பேர்தான் பாலிடிக்ஸ்!

# சுந்தர பாகவதர்

இந்த மாதிரி பேச்சுப் போட்டின்னு வந்தா அதுல மயூரி கலந்துக்காம இருப்பாளோ? 'இந்த வாட்டி ஜெயிச்சுக் காட்றேன் பார்'னு சகாக்களோட சவால் விட்டிருப் பாளா, மாட்டாளா? ஒவ்வொரு வாட்டியும் - என்னதான் முண்டிப் பார்த்தாலும் மூணாவது நாலாவதாகத்தான் வர்றா. அட்லீஸ்ட் செகண்ட் ரேங்க் கெடைக்கக்கூட வக்கில் லையே! அந்த ஜெலஸி இல்லாம இருக்குமா? இந்த சிம்ப்பிள் லாஜிக் தன் மர மண்டையில ஏறலையேன்னு தோணித்தாம் லோகேஷுக்கு. அதுக்கு நாம என்ன பண்றது? யோசிக்க ஆரம்பிச்சான்.

'க்ரேட் மைண்ட்ஸ் திங்க் அலைக்'னு சொல்லுவா இல்லையோ? அதாகப்பட்டது, இவன் மயூரியைப் பத்தி எப்ப நினைக்க ஆரம் பிச்சானோ, அதே நேரம் அவ லோகேஷைப் பத்தி நினைச்சிருக்கா.

ஆக, இரண்டு பேருக்குள்ள காதலான்னு கேட்க வரேளா? இப்பதிக்கு என்னால அந்த



உத்தரவாதத்தைக் கொடுக்க முடியாது.

மேற்கொண்டு என்ன நடக்கறதுங்கறதைக் கவனியுங்கோ.

அடுத்த மாசம் பலான தேதியிலே ஏதோ ஒரு தமிழ்ச்சங்கம் சார்புல பேச்சுப் போட்டி இருக்கு. எக்ஸ்டெம்போர். நோட்டீஸ் போர்டில டைப் அடிச்சு ஒட்டியிருக்கு.

இன்ட்ரஸ்ட் உள்ளவா பார்க்கறா. மத்தவா போயிண்டே இருக்கா. நம்ம லோகேஷ் அந்த நோட்டீஸைப் படிச்சிண்டு நிக்கறானாம். அவன் தோளுக்குப் பின்னாடி இருந்து சுகந்தமான ஃபாரின்சென்ட் வாசனை வீசற தாம். இவன் திரும்பிப் பார்க்கறான். மயூரி யாகப்பட்டவள் நோட்டீஸ்போர்டை அரைக் கண்ணாலயும் லோகேஷை அரைக் கண் ணாலயும் மாறி மாறிப் பார்த்துண்டு நிக் கறாள். இவனுக்குப் பாதாதி கேசம் ஒரு ஜிலீர் சிலிர்ப்புக் கண்டதாம். அவன் நேர்ப் பார் வையா, அவளையே பார்த்துண்டு நிக்கறான். அவளும் போர்டிலிருந்து அரைப் பார் வையைப் பிடுங்கி முழுப் பார்வையா அவனையே பார்க்கறாள். அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்னுட்டு சொல்றாப்ல தோணித்தாம்.

"ரொம்ப நாளா உங்களண்டை பேச ணும்னு... எனக்கு இன்ஃபீரியாரிட்டி காம்ப் ளக்ஸ். காம்ப்ளக்ஸ் என்ன? ஷ்யூர் ஐ'ம் இன்ஃபீரியர் டு யூ"ன்னுட்டு தலை குனிஞ்சு நிக்கறாளாம் மயூரி.

"சேச்சே, அப்படியெல்லாம் ஒண்ணும் ஃபீல் பண்ண வேண்டியதே இல்லை. நீங்க எந்த விதத்துல இன்ஃபீரியராப் போயிட்டேள்? உங்க ஃபாதருக்கு நெக்ஸ்ட் எலெக்ஷன்ல எம்.எல்.ஏ. சான்ஸ் இருக்குன்னு பேசிக்கிறா. எத்தனை செல்வாக்கான மனுஷர்? அதை வச்சுப் பார்க்கறச்சே நான்தான் இன்ஃபீரியர். என் ஃபாதர் ஆஃப்டரால் ஒரு பி.டபுள்யூ.டி. இஞ்சினியர்..."

நடுவிலே களுக்குனு சிரிச்சாளாம் மயூரி. அந்த ஒத்தைச் சிரிப்பே அவனை அப்படியே அள்ளிண்டு போயிடுத்தாம். "ஏன் சிரிச் சீங்க?"ன்னு வழியறான்.

"உங்க ஸ்பெஷாலிட்டியே இதான். நான் ஒண்ணைப் பத்திச் சொன்னா அதையே நீங்க வேற பக்கத்துக்குத் திசை திருப்பிடறீங்க?"

"புரியலை..."ன்னான், குழம்பிய பாவனை யில.

மயூரி அவனை அரைக் கண்ணால ஒரு மயக்குப் பார்வை வீசினவளா, "உங்களுக்குப் புரியறாப்ல சொல்லணும்னா அதுக்குக் கொஞ்சம் டைம் ஆகும். உங்களுக்கு இப்ப ஒண்ணும் அவசர வேலை இல்லையே!"ன் னாளாம்.

ஸ்வாமி, கண்ணின் கடைப்பார்வை காத லியிடம் காட்டிவிட்டால், மண்ணில் குமரர்க்கு மாமலையும் அக் கடுகாம்னுட்டுக் கவிஞன் சொல்லியிருக்கானோன்னோ?

எப்பேர்க்கொத்த அவசரமும் இதுக் கப்புறம்தான் என்பதாகத்தானே தீர்மானம் பண்ணிண்டு, "இப்பத்திக்கு அப்படிவொண் ணும் குடி முழுகிப் போற வேலை எதுவும் இல்லை... சொல்லு மயூரி"ன்னுட்டு போடு தோப்புக்கரணம்னா எண்ணிக்கோன்னு சொல்றாப்ல காதைப் பிடிச்சிண்டு நின்னா னாம்.

அதைப் பார்த்து அவளுக்குச் சிரிப்பு பொத்துண்டு வந்துட்டது. ஆகா! என்னமாச் சிரிக்கறா சலங்கை தெறிச்சாப்ல...' "வாங்க, முதல்ல ஒரு ஸ்வீட் காரம் காப்பி டு செலி பிரேட் அவர்... அவர் ஃப்ரண்ட்ஷிப்"னாளாம்.

ஹோண்டாய் கார் செல்ஃப்டிரைவிங் ஸீட்டை ஆரோகணிச்சிண்டு பக்கத்து டோரைத் திறந்து விடறா. ஏறி உட்கார்ந்து கதவைச் சாத்திண்டதும் தேனீ சத்தம் போல இலேசான ஹொய்ங் ரீங்காரம். ஏசி கார் மெரீனா காதலர் பாதையைத் தேய்ச்சிண்டு பீச் ட்ரைவின் ரெஸ்டாரெண்ட் போய் நிக்கறது. யூனிஃபார்ம் வெயிட்டர் குனிய றான்.

"இன்னி ஸ்பெஷல் ஸ்வீட் என்ன?" மயூரி சொடுக்கறா.

"பாதாம் அல்வா, சோன் பப்டி..."

தொடருமுன் துண்டிச்சு, "ஓகே... பாதாம் அல்வா. முறுகலா ரவா தோசை... ம்ம்... லேட்டாவும்... வேணாம்.



சூடா காரம் என்ன இருக்கோ, அது இரண்டு பிளேட்... இங்க டீயும் கிடைக்கும். நீங்க டீயா, காப்பியா?

திடுதிப்னு முழிச்சிண்டாப்ல, "நான் லோகேஷ்"ங்கறான் அவன் சீரியஸா. கொஞ்சம் பொறுத்து இரண்டு பேரும் கிச்சுகிச்சு மூட்டினாப்லே சிரிக்கறா.... "மத்த எதுக்கும் என்னைக் கன்ஸல்ட் பண்ணலையே! அப்பறம் இதுக்கு மட்டும் என்ன? உங்களுக்கு எதுவோ அதுவே எனக்கும்..."

"லோகேஷ். நீங்க என்னைத் தப்பா நினைக்க மாட்டேளா?"

"தப்பா நினைக்கறாப்ல இப்ப என்ன நடந்துட்டுது?"

"ச்சீய்.. குறும்புதான்..." அதே மயக்குப் பார்வை... அடுத்த க்ஷணம் மூஞ்சியை சீரியஸாக வச்சிண்டு, "நேக்கு உங்களை நினைச்சாப் பெருமையா இருக்கு. எந்த ஸ்டூடன்ட்ஸ் பேச்சுப் போட்டியானாலும் அதுல மெடல்னா அது உங்களுக்குத்தான். உங்களுக்கு மட்டும்தான். இதுல எனக்கு எப்பவுமே டௌட் இருந்ததில்லை..."

"அப்பாடி.... இத்தனை காலம் வைக்க மறந்த ஐஸையெல்லாம் இப்ப ஒரே நேரத்துல வச்சி அசத்திட்ட மயூரி... இன்னும் நீ விஷயத்துக்கு வரலேன்னு நெனைக்கிறேன்..."

அவள் மேலும் கீழும் தலையாட்டினாள். மௌனம் காக்கிறா... விரலால கோலம் போடறா... "வந்து... இதுவரைக்கும் ஆறு போட்டியில கலந்துண்டிருக்கேன். ஒரே ஒரு வாட்டிதான் உங்களுக்கு ரெண்டாவதா வந்தேன். தோத்துடறேன். ஃப்ரண்ட்ஸ் ஆவட்டும், எங்காத்துலருந்து வர்றவா ஆவட்டும், என்னைப் பார்க்கற பார்வை, கேக்கற கேள்வி தாங்க முடியல. 'ஆமா. இங்க வந்து வாயாடு. அங்க ஸ்டேஜ்ல கோட்டை வுட்டுட்டு கண்ணைக் கசக்கு'ன்னுட்டு கிண்டலும் கேலியுமா பேசறச்சே எனக்குச் செத்துப் போவலாம் போலிருக்கு..."

"என்ன மயூரி, ஸ்போர்ட்டிவ்வா எடுத்துக்கறதை விட்டுட்டு இதுக்கெல்லாம் இப்படியா இடிஞ்சு போவா?"

"உங்களுக்கென்ன, வின்னிங் சைடுல இருக்கேள். பேசுவேள். தோ பாருங்கோ, எனக்கு ஒரு வழி சொல்லுங்கோ..."

"மயூரி, சவுண்ட் குடுக்காதே. கேக்கறவா என்னை ஏதும் தப்பா நெனைச்சிக்கப் போறா. நீ ஜெயிக்கறதும் தோற்கறதும் உன் கையில தான் இருக்கு. இதுல நான் என்ன பண்ண முடியும்?"

அதுக்கு வழி சொல்றாப்ல அவளே பேசறா. "லோகேஷ், தப்பா நினைக்காதீங்க, சேர்ந்தாப்பல நீங்களே வின்னிங்போஸ்ட்ல நிக்கறேள். ஒரு வாட்டி - ஒரே ஒரு வாட்டி எனக்காக விட்டுக் கொடுக்கப்படாதா?"



"யானை விலை, குதிரை விலை சொல்கிறார்கள்!"
"என்ன வாங்கப் போனாய்?"
"யானையும், குதிரையும்."
— எஸ். மோகன்

"என்னைப் போட்டியில கலந்துக் கப்படாதுங்கறியா?"

"ஐயையோ, நான் அந்த அளவுக்குக் கிராதகி இல்லம்மா... நீங்க கண்டிப்பா போட்டியில கலந்துக்கணும். நான் சொல்றது என்னன்னா... கிரிக்கெட்ல மேட்ச் ஃபிக்ஸிங்னு இல்லையா? அப்படி ஒரு ஏற்பாடுதான்..."

லோகேஷ் வாய் விட்டுச் சிரிக்கறானாம். "புரியுது. நான் தோத்துப் போறதாவே வச்சுக்குவோம். ஆனா நீதான் ஜெயிப்பேன்னு எப்படிச் சொல்ல முடியும்? இந்த மாதிரி எக்ஸ்டெம்போர் ஆரேஷனுக்கெல்லாம் எப்படிப் ப்ரிப்பேர் பண்ணிக்கணும்னு நோக்குத் தெரியுமோ? நான் உன்னை மட்டமா எடை போடறதா நினைக்காதே. உனக்கும் எனக்கும் நடுவில இன்னொருத்தன் பூந்து மெடலை லவட்டிண்டு போயிடப்படாதில்லையா?"

"லோகேஷ், உங்களை எப்படி... எப்படிப் பாராட்டறதுன்னே தெரியலை.... நான் ஜெயிக்கணும் போட்டியிலேன்னு விட்டுக் கொடுத்ததோட நிக்காம அதுல இத்தனை உள் விவகாரம் இருக்குன்னு வேற சொல்லித் தர்றீங்களே?"

டிரேட் ஸீக்ரெட் மாதிரி அவன் காப்பாத்திண்டு வந்த ரகசியத்தையெல்லாம் சொல்லித் தரானாம். "மயூரி, இந்த மாதிரிப் போட்டியில எல்லாம் மேடை ஏர்றச்சே, என்ன தலைப்புத் தருவாளோ, எப்படி சமாளிக்கப் போறமோங்கற தயக்கமோ, பயமோ, மிரட்சியோ இருக்கப்படாது. என்ன தலைப்புத்தான் வரட்டுமே, நம்மகிட்டதான்



**"என்னங்க, என்னங்க! கதாமஞ்சரி பத்திரிகையிலிருந்து உங்களுக்கு 500 ரூபாய் சன்மானம் வந்திருக்கு!"**

**"அப்படியா! சமீபத்துல நான் கதை ஏதும் அவங்களுக்கு அனுப்பலையே!"**

**"அதனால்தான் சன்மானமாம்!"**

**— புளியரை கணேசன்**

ரிகார்டுங்க இருக்கே, ஏத்த மாதிரி கோத்து விட்டாப் போச்சுங்கற ஸெல்ஃப் - கான்ஃபிடன்ஸ் இருக்கணும்."

"புரியலிங்க. நீங்க என்ன சொல்றீங்க?"

"ப்ரிப்பேர் பண்றது எப்படின்னு சொல்றேன், கேளு. இப்ப அனெக்டோட்ஸ்னு இருக்கு. அதை இதைப் புரட்டி ஒரு அஞ்சாறு அனெக்டோட்ஸ் சேத்து வச்சுக்கோ. அதெல்லாம் ஒரு ரெகார்டு. நடுவிலே கொஞ்சம் பாரதியார், வேற சில கொட்டேஷன்ஸ் சேர்த்து வச்சுக்கோ. அது ஒரு ரிகார்டு. லேட்டஸ்ட் நியூஸ் சமாசாரம் சேர்த்து, அது ஒண்ணு. முக்கியமா ஜோக்ஸ்... அப்புறம் ஃபாரின் நியூஸ், ஸ்போர்ட்ஸ், இன்வெஸ்டிகேஷன்ஸ்... சினிமா வேணாம், சீப்பாயிடும். இப்படி சரக்கு சேர்த்து வச்சுக்கோ. அதான் ரிக்கார்ட்ஸ். அட,... என்ன தலைப்புதான் கொடுக்கட்டுமே! உன் வசம் இருக்கற ரிகார்ட்ஸ்ல மாத்தி மாத்திப் போட்டு அசத்து. எப்படி?"

மயூரி அப்படியே பிரமிச்சுப் போய் இரண்டு கையையும் இரண்டு கண்ணத்துலயும் ஊணிண்டு அவனையே உத்துப் பார்த்தாளாம். அவ தன்னைத்தான் உள்ளுக்கு வாங்கிக்கறான்னு லோகேஷ் அப்படியே பூரிச்சுப் போய் நிக்கறான்.

பிரவசனம் நீண்டு போச்சு. அப்பறம் நடந்ததைச் சுருக்கமா சொல்லி முடிச்சிண்டுடறேன்.

**யூ**னிவர்சிட்டி ஸென்டினரி ஹால்ல இன்டர் காலேஜ் ஸ்டூடென்ஸ் எக்ஸ்டெம்போர் காம்ப்படிஷன் ஃபிக்ஸ் ஆயிடுத்து.

மேடையில மொத்தம் ஆறு ஜட்ஜஸ் பேப்பரும் பேனாவுமா உட்கார்ந்திருக்கா.

லோகேஷ் மேடையேறினதும் இதோ வந்தாச்சு நம்ம ஹீரோ என்பதற்காகத்தானே ஆடியன்ஸ் பக்கமிருந்து உற்சாகமான கைதட்டல், ஊய் ஊய்னு சீழ்க்கை வேற. ஆனா அவன் பேசி முடிச்சப்ப, 'இவனுக்கு என்னடா கேடு...!' ரகத்துல தலைக்குத் தலை அங்க லாய்ச்சிண்டா.

அதையெல்லாம் காதுல வாங்கிக்காம அடுத்தாப்ல மயூரி வெளுத்து வாங்கப் போறான்னு காதையும் கண்ணையும் தீட்டி வச்சிண்டு பார்த்துண்டே ஓரமா நிக்கறானாம் லோகேஷ்.

மயூரி பேசினா. லோகேஷ் மூஞ்சி வெளுத்துப் போறது. கண் இருண்டு போறது. இதுக்கா அத்தனை மெனக்கெட்டு ட்யூஷன் எடுத்தா? ஐயோ, ஆவரேஜுக்குக் கீழே போறதே! அப்பவே மேடையேறி உலுக்கலாம் போல ஒரு உத்வேகம் பீரிட்டதாம். அவளோட தோப்பனார் வட்டம் வேற மேடையில இளிச்சிண்டிருக்கு. ஞானசூனியம்!

பொறுமையாக் காத்துண்டிருந்தான். அங்க என்ன நடக்கறதுங்கற ஸ்மரணையே இல்லே. திடுதிப்னு, எவனோ பேசறச்சே அட்டகாசமான அப்ளாஸ் வாங்கிண்டு இருந்தது கேட்டுது. வழக்கமாக கலந்துக்கறவன். ஏதோ சுமாராப் பேசுவான். மூணு, நாலா வருவான். இப்ப பிச்சு உதர்றானே! மெடிகல் ஸ்டூடன்ட் அவன். பேர் கூட மோகன்ராஜ்னு ஞாபகம்.

லோகேஷ் கணக்கு பொய்க்கலை. ஜட்ஜஸ் கூடிக் கூடிக் கணக்குப் போட்டு மெடிகல் காலேஜ்தான் மெடல் வாங்கறதாச் சொல்லியாச்சு.

கூட்டம் கலையறது. அந்த மயூரியைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்காட்டா மனசு ஆறாது போலாச்சாம் லோகேஷுக்கு. கூட்டத்துல தேடறான்.

அதோ, அவ கார் பார்க்கிங் பக்கமா தன் தோப்பனாருக்கு யாரோ ஒருத்தனை இண்ட்ரட்யூஸ் பண்றாளே! யாரவன்?

நெருக்கமாப் போய்ப் பார்க்கறான். மை காட்! அவன் மெடிகல் காலேஜ் ஸ்டூடன்ட் -மெடல் வாங்கின மோகன்ராஜ்னா.

அவன் படு பவ்யமாக அந்த அரசியல் வாதியண்டை சொல்லிக் கொண்டிருக்காளாம். "எல்லாம் மயூரிதான் ஹெல்ப் பண்ணுச்சு சார். இல்லேன்னா எனக்கு இந்த ஆனர் கிடைச்சிருக்காது."

"தெரியும் மாப்பிள்ளை. மயூரி சொன்னுச்சு"ன்னாராம் அந்த வட்டம்.

'இதுக்குப் பேர்தாண்டா கண்ணா, பாலிடிக்ஸ்'னு போறவா வர்றவால்லாம் கைகொட்டிச் சிரிக்கறாப்ல இருந்ததாம். இதனால லோகத்தார் தெரிஞ்சிக்க வேண்டியது பாலிடிக்ஸ்னா இதேதான்கிறதுதான்! ○

தஞ்சை : தி.மு.க.வின்

# நம்பிக்கை களஞ்சியம்



• எஸ்.என்.எம். உபயதுல்லா

திராவிட கட்சிகள் இரண்டுக்குமே தஞ்சை மண் மீது எப்போதும் ஒரு கண் உண்டு. இந்த வாக்காளர்களையும் சட்டென அத்தனை எளிதில் எடை போட்டு விட முடியாது. திராவிடக் கட்சிகள் இரண்டிற்கும் மாறி மாறி வெற்றிக் கண்களையும் - நெற்றிக் கண்ணையும் கடந்த காலங்களில் பனிச்செனத் திறந்து காட்டியுள்ளனர்.

89, 96 வருடங்களில் வெற்றியும், 91ல் தோல்வியும், பெற்றுள்ள எஸ்.என்.எம். உபயதுல்லா மீண்டும் தி.மு.க. வேட்பாளர். தொகுதி மக்களுக்கு நன்கு பரிச்சயமானவர். தஞ்சை நகர வர்த்தக சங்க செயலாளர். பல தமிழ் மன்றங்களின் புரவலர். தஞ்சை முத்தமிழ் மன்றம் மற்றும் தஞ்சை தமிழிசை மன்றத்தின் தலைவராகச் செயல்பட்டு வரும் இவர், தமிழகத்திலுள்ள முன்னணி இசைக் கலைஞர்களை வரவழைத்து ஆண்டு தோறும் தமிழிசை விழா நடத்தி வருகிறார். இதெல்லாம் போதுமா வெற்றிக்கு?

இவர் எம்.எல்.ஏ.வாக இருந்தும் இதையெல்லாம் செய்யவில்லை என்று மக்கள் கொடுத்த புகார்ப் பட்டியல் இது :

ரிங் ரோடு பாதியில் நிற்பது. ரயில்வே ஸ்டேஷன் அருகில் அண்டர் கிரவுண்ட் பாலம் (பேருந்துகள் செல்வது) மழைக் காலங்களில் பயன்படுத்த முடியாமல் இருப்பது. வெண்ணாற்றங்கரை ஆற்றுப் பாலம் (தஞ்சை டு குடந்தை வழி) பள்ளியக்ரஹாரம் பகுதியில் சிதிலமடைந்திருப்பது.

"இதையெல்லாம் சரி செய்யாம, வோட்டு கேட்டு வர்றாரு எம்.எல்.ஏ." என்ற கோபம் மக்களிடம் இருந்தாலும், "அது வெற்றியைப் பாதிக்கும் அளவுக்கு இல்லை" என்கிறார்கள் தி.மு.க.வினர்.

அ.தி.மு.க. ஆட்சியின்போது தஞ்சையில் நடந்த தமிழ் மாநாடு காரணமாக போடப்பட்ட சாலைகள், மின் விளக்குகள், அலங்கார பூங்காக்கள், வளைவுகள் ஆகியன இப்பொழுதும் அந்நகருக்கு அழகு சேர்த்து வருகின்றன. அ.தி.மு.க.வினர் இதைக் குறிப்பிட்டு வோட்டுக் கேட்கின்றனர். இருந்தாலும் தொகுதியில் நிற்பது காங்கிரஸ் வேட்பாளர் என்பதால் அதற்குச் சரியான 'ரெஸ்பான்ஸ்' இல்லை.

தஞ்சாவூர் சட்டமன்றம் அ.தி.மு.க.வுக்குக் கிடைக்குமென எதிர்பார்த்திருந்த ரத்தத்தின் ரத்தங்கள், தொகுதி, காங்கிரசுக்குக் 'கை' மாறிப் போனதால் ஏமாற்றத்தில் உள்ளனர். முன்னாள் எம்.எல்.ஏ.வும், மாவட்ட செயலாளருமான கு. தங்கமுத்து மற்றும் அ.தி.மு.க. சட்டமன்ற முன்னாள் கொறடாவான துரை. கோவிந்தராஜன் ஆகிய இரு பிரிவினரும் இன்னமும் தேர்தல் பணிகளில் இறங்கவில்லை. (ஏப்.30 வரை). ஜெ.யின் தஞ்சை விசிட்டுக்குப் பின்னர் எல்லாம் சரியாகி, அ.தி.மு.க.வினர் முழு மூச்சாய்த் தேர்தல் வேலைகளில் ஈடுபடுவார்கள் என நம்புகின்றனர் 'கை' சின்னத்துக்காரர்கள். காங்கிரஸ் வேட்பாளர் ஆர். ராஜ்மோகன் வழக்கறிஞர். இவருக்குக் கிடைக்க இருக்கும் வாக்குகள் அ.தி.மு.க.வினரின் உழைப்பைப் பொறுத்த விஷயமே.

ம.தி.மு.க. வேட்பாளராகப் போட்டியிடுபவர் எல்.ஜி. அண்ணா. (ம.தி.மு.க. அவைத் தலைவர் எல்.கணேசனின் மகன்) இது ஒன்றே தஞ்சை மண்ணில் பம்பரத்தை வெற்றிகரமாகச் சுழல விட்டுவிடுமா என்பது சந்தேகம் தான்.

"ஜெயலலிதாவின் கையில் மீண்டும் ஆட்சியைத் தர விரும்பாத தஞ்சை வாக்காளர்களின் மனத் தெளிவு, கடந்த ஐந்தாண்டு கால தி.மு.க.வின் திறமையான ஆட்சி, தவறேதும் சொல்ல முடியாத சட்டமன்ற உறுப்பினர் மீதான வாக்காளர்களின் மதிப்பீடு ஆகியன எல்லாம் சேர்ந்து எங்களுக்கே மீண்டும் வெற்றியைத் தேடித்தரும்" என திடமாக நம்புகின்றனர் தி.மு.க.வினர்.

- ஸ்ரீரங்கம்
திருநாவுக்கரசு

## வெற்றிப் பக்கம்

"இளம் பெண்ணொருத்திக்கு, கண்ணைக் கவரும் பொன் ஆபரணங்களைக் கவனமுடன் அணிவித்து, அழகு மினிரச் செய்து, அந்த மங்கை நல்லாளை மிக நேர்த்தியுடன் பேணிக்காத்து வருகிறார் கோ.சி.மணி. உடனே நீங்கள் யாரும் தவறான எண்ணத்திற்குப் போய்விட வேண்டாம். கோ.சி.மணி சீராட்டி வரும் அந்த இளம் பெண் வேறு யாருமல்ல, கும்பகோணம் தான்! இந்தத் தொகுதியைப் பார்க்கும் போது எனக்குக்கூடப் பொறாமையாக இருக்கின்றது!"

ஒரு கூட்டத்தில் கலைஞர் இப்படிப் பேசியதைக் கேட்ட எவரும் ஒருமுறை கும்பகோணம் வந்தால் போதும். அவர் சொன்னது நிஜமா அல்லது நிழலா என்பது தெரிந்து விடும்.



• இராம். இராமநாதன்
அ.தி.மு.க.

கும்பகோணம், தாராசுரம் ஆகிய பகுதிகளில் முப்பது ஆண்டுகளின் குடிநீர்த் தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில், பதிமூன்று கோடி ரூபாய்ச் செலவில் குடிநீர் அபிவிருத்தித் திட்டம்; நான்கு கோடி ரூபாய் செலவில் ஊரகப்பகுதி குடிநீர்த் திட்டப்பணிகள்; நதி நீர் மாசுக்கட்டுப்பாட்டுத் திட்டத்தின் கீழ், குடந்தை நகர் பாதாள சாக்கடைத் திட்டத்திற்கு நாற்பத்தியேழு கோடி ரூபாய் நிதி ஒதுக்கீடு... என்று நீள்கிறது பட்டியல்.

கடந்த தேர்தலில் நான்கு முனைப் போட்டியைச் சந்தித்த இத்தொகுதி, இம்முறை, மும்முனைப் போட்டியை எதிர்கொண்டாலும் நிஜமான போட்டியென்பது உதயசூரியனுக்கும், இரட்டை இலைக்கும்தான். தி.மு.க. சார்பில் போட்டியிடுபவர் கோ.சி.மணி. இத்தொகுதி அறிவாலயக் கதவைத் தட்டியது இவரது மனு மட்டுமே என்பது ஒரு சிறப்பு. அ.தி.மு.க. சார்பாக போட்டியிடுபவர் ராமநாதன். இவர் 91ல் வெற்றியையும், 96ல் தோல்வியையும் பெற்றவர்.

பொதுமக்களின் நற்சான்றுகள் அனைத்தும் 96ஐப் போலவே வெற்றி வாக்குகளாக அமையும் என நம்புகின்றனர் தி.மு.க.வினர். "எங்கள் வேட்பாளரின் வெற்றி உறுதி. அதே நேரத்தில் வாக்கு வித்தியாசத்தை முன்னைக் காட்டிலும் அதிகப்படுத்துவதே எங்கள் பிரசாரத்தின் நோக்கம்" என்கிறார்கள் உற்சாகத்துடன்.

இருபத்தியொன்பது பஞ்சாயத்துகளில் இடம் பெற்றிருக்கும் நூற்றியிருபது கிராமங்களில் இரட்டை இலைக்கு வாய்ப்புகள் அதிகமுள்ளதாகக் கூறுகின்றனர் அ.தி.மு.க.வினர். "கருணாநிதியா, அம்மாவா என்கிற 'மாஸ்' தான் இப்போது. இதில் எது அதிகமோ அதுவே வெற்றி பெறும். இப்பொழுது வீசுவது அம்மா அலை. அதனால் வெற்றி பெறுவது இரட்டை இலைதான்" என்கிறார். அ.தி.மு.க. வேட்பாளர் ராமநாதனின் சகோதரர்.

பாட்டாளி மக்கள் கட்சி பிரமுகர் ஒருவரைச் சந்தித்தோம். அவரது பேச்சு, கும்பகோணம் தொகுதியெங்கும் கோ.சி.மணியின் கானம் கேட்டுக் கொண்டேயிருப்பதற்குச் சாட்சியாக அமைந்தது. "இந்த ஊர்ல கோ.சி. மணியை எதிர்த்து நின்னு யாரும் ஜெயிச்சிட முடியாதுங்க. எங்க கூட்டணி கட்சிதான் எதிர்த்து நிக்குது. எங்களோட பா.ம.க.வுக்குக் கூட பத்தாயிரம் ஓட்டு இருக்குதுங்க. இருந்தாலும் கோ.சி.மணிதாங்க ஜெயிப்பார். ஏன்னா இதுவரைக்கும் யாருமே செய்யாத அளவுக்கு, கும்பகோணத்துக்குச் செஞ்சிருக்காருங்க. இது பொய் இல்லைங்க" என்கிறார் அவர்.

- திருநாவு



• கோ.சி.மணி
தி.மு.க.



# அப்பழுக்கற்ற ஆட்சி தொடர்ந்திட
# உத்தரவாதம் தருகிறோம் ;
# உத்தரவு தாருங்கள் !

தேர்தல் நாள்

**10 - 5 - 2001**

# ஆதரிப்பீர் உதயசூரியன்

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை- 600 018.

# வெற்றியை நிர்ணயிப்பது எது?

ஆங்கிலம் பேசவும் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொடுப்பதில் முதல் இடம் வகிக்கும் விவேகானந்தா இன்ஸ்டிட்யூட் தமிழ்நாடு முழுவதும் தன் விழுதுகளைப் படரவிட்ட கையோடு, ஆந்திராவிலும் காலூன்ற ஆரம்பித்து விட்டது. இதனுடைய வெற்றி ரகசியத்தை ஆராய, அதன் முதல்வர் வி. இராஜகோபாலனைச் சந்தித்தோம்...



• வி. இராஜகோபாலன்

***வெற்றியை நிர்ணயிப்பது எது?***

என்னைப் பொறுத்தவரை, வெற்றியை நிர்ணயிக்கும் முக்கியமான விஷயம், நாம் எந்தத் தொழிலைத் தேர்வு செய்கிறோம் என்பதுதான்.

நம்மிடம் என்ன திறமை இருக்கிறதோ, அதைப் பொறுத்துத்தான் நாம் செய்யப் போகும் தொழிலைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

நம்மிடம் என்ன திறமை இருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பது சாமானியமான காரியம் இல்லை. இதைக் கண்டுபிடிக்கவே சில சமயம் அதிர்ஷ்டம் தேவைப்படுகின்றது.

என்னுடைய உதாரணத்தையே எடுத்துக் கொள்ளுங்கள்.

என் தந்தை பெங்களூரில் 'ஹெச்.ஏ.எல்'இல் வேலையாக இருந்தார். நான் எஸ்.எஸ்.எல்.ஸி. படித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று அவர் இறந்துவிடவே, குடும்பப் பொறுப்பு முழுவதும் என் தோள்களிலே

விழுந்தது. தம்பி, தங்கையைப் படிக்க வைப்பதற்காக, என்னுடைய படிப்பைப் பாதியில் நிறுத்திக் கொண்டு, சென்னை, பார்க் டவுனில் ஒரு வேலையில் சேர்ந்தேன். மேற்கொண்டு படித்தால், பதவி உயர்வுக்கு உதவுமே என்று தோன்றியது.

உடனே, 'லயோலா'வில் பி.யு.ஸி. படிக்க, ஈவ்னிங் காலேஜ் பிரிவில் சேர்ந்துவிட்டேன். அங்கு, பதினொன்றாம் வகுப்பு வரை தமிழ் மீடியம் பள்ளியில் படித்த நிறைய மாணவர்கள் இருந்தார்கள். இவர்கள் இங்கிலீஷ் மீடியமுக்குத் திடீரென்று மாறிவிட்டதால், பாடங்களைப் பற்றி, தலையும் புரியாமல் காலும் புரியாமல் திணறிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால், நான் பெங்களூரில் படித்ததால், எனக்கு ஆங்கிலத்தில் ஓரளவு ஃப்ளுயன்ஸி இருந்தது. அதனால் சிரமமாகத் தெரியவில்லை.

காலாண்டுத் தேர்வு வந்தது. எல்லோரும் நாலு, எட்டு என்று மதிப்பெண்கள் வாங்கியிருந்தார்கள். அவர்களைப் பார்க்கப் பாவமாக இருந்தது. உடனே, எனக்கு ஒரு யோசனை.

'நமக்கோ நாலு மணிக்கே வேலை முடிந்துவிடுகின்றது. காலேஜ் ஆறு மணிக்குத்தான். ஏன் இடைப்பட்ட நேரத்தில் நமக்குத் தெரிந்த விஷயங்களை இவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கக் கூடாது?'

வள்ளுவர் கோட்டத்துக்குப் பின்னால் இருக்கும் சுதந்திர தின பூங்காவில், தினசரி இரண்டு மாணவர்களை அழைத்துப் போய் பாடங்களைச் சொல்லித்தர ஆரம்பித்தேன்.

கொஞ்சம் கொஞ்சமாக மாணவர்கள் சேர ஆரம்பித்தார்கள். கூடிய விரைவில் 'இரண்டு' என்பது 'நாற்பது' ஆகிவிட்டது. அப்பொழுதுதான் ஒரு மாணவன் சொன்னான்– "ஸார், சொல்லித்தருவது என்பது ஒரு கலை. அந்தக் கலை உங்களிடம் நிறையவே இருக்கிறது. நீங்கள் மட்டும் எங்கள் ஆசிரியராக இருந்தால், நாங்கள் சுலபமாக பாஸ் செய்து விடுவோம்!'' என்று. அந்த மாணவனின் பாராட்டுதான் எனக்கே என்னுடைய திறமையை வெளிச்சம் போட்டுக் காட்டியது. இதைத்தான் தொடக்கத்திலேயே சொன்னேன்– நம்முடைய திறமையை நாம் கண்டுபிடிக்கவே, சில சமயம் அதிர்ஷ்டம் தேவையாய் இருக்கின்றது என்று. நம்முடைய திறமை என்ன என்று புரிந்தவுடன் அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அதை அஸ்திவாரமாக்கி, வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொண்டு விட வேண்டும். அங்குதான் நம்முடைய சாமர்த்தியம் இருக்கிறது! வெற்றியின் ரகசியம் இருக்கிறது!

***ஆங்கிலம் சொல்லித் தரும் இன்ஸ்டிட்யூட் ஆரம்பிக்க வேண்டும் என்று உங்களுக்கு எப்படித் தோன்றியது?***

ஆசிரியர் தொழிலைச் செய்வது என்று முடிவாகிவிட்ட பிறகு, பல சப்ஜெக்ட்டுகளைச் சொல்லித்தரும் டியூஷன் சென்டராகத்தான் முதலில் நடத்த ஆரம்பித்தோம். எங்களிடம் வந்து சேர்ந்தவர்கள் பெரும்பாலும் எஸ்.எஸ்.எல்.சி.யில் ஃபெயிலானவர்கள். இவர்களுக்குச் சொல்லித் தந்த பொழுது எனக்கு மீண்டும் அதே அனுபவம். இவர்கள் எல்லாம் ஃபெயில் ஆவதற்குக் காரணம் ஆங்கிலம் ஒரு பிரச்னையாக இருப்பதுதான் என்ற உண்மை மீண்டும் நிரூபணமாயிற்று. ஆங்கிலத்தைப் பொறுத்தவரை அடிப்படையான விஷயங்களே இவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை.

உடனே ஆங்கில வகுப்பை ஆரம்பித்துவிட்டோம்! மற்ற வகுப்புகளைவிட இந்த வகுப்புக்குத்தான் ஏக வரவேற்பு இருந்தது. ஒருநாளைக்கு ஒரு 'பேட்ச்' என்று ஆரம்பித்து, போகப்போக, 2,3,4, என்று பெருகிக் கொண்டே போனது. இரவு 9.30 மணி வகுப்பில் சேரக் கூட ஆட்கள் இருந்தார்கள். உடனே டுடோரியலை, ஆங்கிலம் சொல்லித் தரும் இன்ஸ்டிட்யூட்டாகவே மாற்றிவிட்டோம்.

***உங்களுடைய அஞ்சல்வழிக் கல்விமுறை வெகு பிரபலமாகிவிட்டதே...***

சென்னையில் வசிப்பவர்களுக்கு மட்டுமே ஆங்கிலம் கற்கும் வசதி இருந்தால் போதாது, கிராமங்களில், மூலை முடுக்குகளில் இருப்பவர்களுக்கு எல்லாம் இந்த வசதி கிடைக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு ஆரம்பிக்கப்பட்டதுதான் இந்த அஞ்சல்வழிக்கல்வி. அஞ்சல் வழிக்கல்வி மூலமாக, இன்றைக்கு 12 லட்சம் பேர் படிக்கிறார்கள். எங்களுடைய அஞ்சல் வழிக்கல்வியின் வெற்றிக்கு, முக்கிய காரணங்களாக நான் நினைப்பது...

**1) நாங்கள் கையாளும் நடை:**

பாடங்களின் நடை, மாணவரோடு நேரில் பேசுவது போலவே அமைந்திருக்கும். ஒரு பாடப் புத்தகத்தைப் படிக்கும் உணர்வு இருக்காது.

"என்ன, படித்து விட்டீர்களா? ஏதாவது சந்தேகம் இருந்தால், பொறுமையாக இன்னொரு முறை படித்துப்பாருங்கள், அவசரமில்லை!"; "எங்கே, மேலே உள்ள வாக்கியங்களை இன்னொரு முறை எழுதுங்கள் பார்க்கலாம்...!"– இப்படி.

பலன், ஆசிரியர் தமக்கு முன்னால் நின்று கொண்டு பாடம் நடத்துவது போன்ற உணர்வு மாணவனுக்குக் கிடைத்து விடுகின்றது.

**2) கடிதத் தொடர்பு:**

பாடங்களைப் பற்றி மாணவர்களின் அபிப்ராயத்தைத் தெரிந்து கொள்ளுவதற்காகவே ஒரு 'ரெஸ்பான்ஸ் ஷீட்'ஐக் கூடவே அனுப்பி வைப்போம். சில மாணவர்கள் பாடங்களை வாங்கி வைத்துவிட்டு அதோடு மறந்து விடுவார்கள். அவர்களிடமிருந்து ரெஸ்பான்ஸ் ஷீட் வரவில்லை என்றால், அது வரும் வரை, போஸ்ட் கார்டு மேல் போஸ்ட் கார்டு போட்டுக் கொண்டே இருப்போம். ஏன் படிக்கவில்லை, ஏன் ரெஸ்பான்ஸ் ஷீட்டை அனுப்பவில்லை? என்று முடுக்கிக் கொண்டே இருப்போம். இரண்டு கார்டு வரும் வரை படிக்காதவர்கள் கூட, மூன்றாவது கார்டைப் பார்த்தவுடன் தொல்லை தாங்காமல் புத்தகக் கட்டைப் பிரித்து விடுவார்கள்.



பைசாவை வாங்கிக் கொண்டோமா, பாடங்களை அனுப்பினோமா, வேலை முடிந்தது என்று நாங்கள் இருப்பதில்லை.

**3) 'கான்டாக்ட்' வகுப்புகள்:**

பல்கலை கழகங்களைப் போலவே 'கான்டாக்ட் வகுப்புகள்' நடத்துகிறோம்.

அஞ்சல்வழிக்கல்வி மாணவர்கள் தங்களுடைய சந்தேகங்களை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்பினால், நாங்கள் உடனே பதில் எழுதி அனுப்பி விடுவோம் என்றாலும், எத்தனை பேர் சோம்பல் படாமல் எழுதிக் கேட்பார்கள் என்பது கேள்விக்குறி ஆகிவிடுகின்றது. 'Cloth', 'clothes', இரண்டுக்கும் என்ன வித்தியாசம் என்கிற சந்தேகம் வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். போயும் போயும் இந்தச் சின்ன சந்தேகத்துக்காகவா கார்டு எழுதுவது என்று மாணவர்கள் நினைத்து, சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளாமலேயே போய்விடும் வாய்ப்பு இருக்கிறது. அதற்காகவே இந்த கான்டாக்ட் வகுப்புக்களை நடத்துகிறோம்.

மதுரை, திருச்சி, கோயம்புத்தூர் உட்பட பத்து சென்ட்டர்களில் இந்த வகுப்பு அவ்வப்போது நடக்கும். ஒவ்வொரு சென்டரிலும் ஒரு பள்ளியை வாடகைக்கு எடுத்து, 12 ஆசிரியர்களை இங்கிருந்து அனுப்பி, சனி, ஞாயிறு என்று இரண்டு நாட்களும் வகுப்பு நடத்தச் சொல்வோம். இந்த வகுப்பு, சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதற்கான பிரத்யேக வகுப்பு. 'விவேகானந்தா'வுக்கு பெரிய அளவில் புகழைச் சம்பாதித்துக் கொடுத்தது இந்த கான்டாக்ட் வகுப்புகள்தான்!

ஒருமுறை கான்டாக்ட் வகுப்புக்காக நான் போயிருந்தபோது ஒரு வித்தியாசமான அனுபவம் கிடைத்தது. மதிய இடைவேளையில், ஒருவர் வந்து என்னிடம், "நான் கிளம்புகிறேன்" என்றார். "ஏன் பாதியிலேயே கிளம்புகிறீர்கள்?" என்றதற்கு, "நான் ஒரு ஹோமியோபதி டாக்டர். என்னுடைய நோயாளிகள் நிறையபேர் இங்கே வந்திருக்கிறார்கள். அவர்களெல்லாம் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்? ஏற்கனவே இரண்டொரு பேர் கேட்டுவிட்டார்கள். அவர்களிடமெல்லாம் 'இராஜகோபாலன் எனக்குத் தெரிந்தவர், பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்' என்று சொல்லி வைத்திருக்கிறேன்!" என்றார். ஆங்கிலம் கற்க வருபவர்களில் நிறையபேர் தாழ்வு மனப்பான்மையில் சிக்கித் தவிக்கிறார்கள் என்ற உண்மை அப்போதுதான் புரிந்தது. அதேபோல், சிலபேர் "வீட்டு அட்ரஸுக்குப் பாடங்களை அனுப்பாதீர்கள், ஆபீஸ் அட்ரஸுக்கு அனுப்புங்கள்!" என்பார்கள். வேறு சிலர் "கவரில் விவேகானந்தா இன்ஸ்டிட்யூட் என்ற ரப்பர் ஸ்டாம்ப் குத்தாதீர்கள்!"

என்பார்கள். அஞ்சல்வழிக் கல்வியில் இருக்கும் இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்காகவே வகுப்புகளுக்கு சத்தமில்லாமல் போய்வர சௌகரியமாய், 60 சென்ட்டர்களை வெவ்வேறு ஊர்களில் நிறுவி விட்டோம். தமிழ்நாடு, ஆந்திரா முழுவதும்.

ஒவ்வொரு சென்டரிலும் ஒரு தனி அறையையும் ஒதுக்கி விட்டோம்- ஹோமியோபதி டாக்டரைப் போல சமூகத்தில் செல்வாக்கு உள்ளவர்களுக்குத் தனிப்பட்ட முறையில் பாடம் நடத்துவதற்காக!

**உங்களுக்குப் போட்டியாக ஆரம்பித்த பல இன்ஸ்டிட்யூட்டுகள் வெற்றி அடையவில்லையே...**

எங்களுடைய வெற்றிக்கு முழுக் காரணம், நாங்கள் 'சிலபஸ்'ஐ மாற்றிக் கொண்டே இருப்பதுதான்.

ஆங்கிலமொழியைப் பொறுத்தவரை, நாளுக்கு நாள் புதுப்புது வார்த்தைகள் வந்து கொண்டிருக்கின்றன. அவற்றை மனத்தில் வைத்து மாற்றங்கள் செய்ய வேண்டும். மாணவர்கள் செய்யும் புதுப்புதுத் தவறுகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு பாடங்களை மாற்றி அமைக்க வேண்டும். என்னென்ன மாதிரி தவறுகள் ஏற்படுகின்றன, நாம் இதுவரை நினைத்துப்பார்க்காத புது கோணத்திலிருந்து தவறுகள் ஏதேனும் ஏற்படுகின்றனவா என்பதை ஆராய்ந்து கொண்டே இருக்க வேண்டும். இதற்காகத் தான் இத்தனை ஆசிரியர்கள் இருந்தும், வகுப்புகளைக் கையாளும் பழக்கத்தை நான் இன்னும் விட வில்லை. ஸ்டடி மெட்டீரியலை எழுதுபவர் கண்டிப்பாக மாணவர்களுடன் தினசரி அடிப்படையில் தொடர்பு கொள்பவராக இருக்க வேண்டும் என்பது என் கணிப்பு. ஸ்டடி மெட்டீரியலை ஆயிரக் கணக்கில் அச்சடித்து வைத்துக் கொண்டு அவற்றையே திரும்பத் திரும்ப அனுப்பிக் கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. மற்ற இன்ஸ்டிட்யூட்கள் இந்த விஷயத்தில் தவறு செய்து விட்டார்கள் என்று நினைக்கிறேன்!

***சொல்லிக் கொடுக்கும் முறைகளில் ஏதேனும் வித்தியாசங்கள் செய்கிறீர்களா?***

கண்டிப்பாக. இதற்கு நான் நடிகர் கமல்ஹாசனுக்கு நன்றி சொல்ல வேண்டும்.

ஒரு தடவை, '2 லட்சம் மாணவர்கள்' என்ற இலக்கை அடைந்தபோது ஒரு விழா ஏற்பாடு செய்திருந்தோம். அதற்கு வந்திருந்த கமல்ஹாசன், விழா முடிந்து பேசிக் கொண்டிருந்த போது, "நான் புத்தகம் வாங்கிப் படிக்காமலே நல்லா மலையாளம் பேசறேன், தெலுங்கு பேசறேன்னா, அதுக்குக் காரணம்

டப்பிங் பேசிப் பேசிப் பழகிவிட்டதுதான்! இதே டெக்னாலஜியை யூஸ் பண்ணி உங்க மாணவர்களுக்கு ஆங்கிலம் சொல்லிக் கொடுங்களேன்!" என்று ஐடியா கொடுத்தார்.

உடனே, 3 மணி நேரம் ஓடக் கூடிய வீடியோ படம் ஒன்றை ஷூட் செய்து, அதை வி.சி.டி.யாக மாற்றி, பிறகு, 40 யூனிட்டுகளாகப் பிரித்தோம். ஒவ்வொரு யூனிட்டுக்கும் ஏற்றார் போல ஸ்டடி மெட்டீரியல்களை மாற்றி அமைத்தோம். வி.சி.டி.ஐ வகுப்பறையில் எப்படி உபயோகித்தோம் என்பதற்கு ஒரு சின்ன உதாரணம்.

மூன்று கதாபாத்திரங்கள் திரையில் சந்தித்துக் கொள்வார்கள். இருவர், தங்களைத் தாங்களே அறிமுகம் செய்துகொள்வார்கள். மூன்றாவது நபருடைய வாயசைவிற்கு ஏற்றார் போல, மாணவர்கள் டப்பிங் குரல் கொடுக்க வேண்டும்.

வீடியோ படத்தைப் பார்க்கும்போது இயற்கையாகத் தோன்ற வேண்டும் என்பதற்காக, பொருத்தமான இடங்களைத் தேடிப்போய் ஷூட்டிங் நடத்தினோம். 'ரயில் போக்குவரத்து பற்றிய சந்தேகங்களை விசாரிப்பது எப்படி?' என்ற பாடத்திற்காக ரயில்வே ஸ்டேஷனில் அனுமதி வாங்கி, ஒரு நிஜமான டி.டி.ஆர்.ஐப் பேசவைத்து ஷூட் செய்தோம்.

சொல்லிக் கொடுக்கும் முறை என்று வரும்பொழுது, நாங்கள் முக்கியமாகக் கருதும் இன்னொரு விஷயம், ஓய்வு பெற்ற பள்ளி ஆசிரியர்களைக் கண்டிப்பாக வேலைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது என்பது. பள்ளியில் கடைப்பிடிக்கும் முறைகளை இங்கே தொடருவார்கள் என்ற காரணத்தால். 'கோடிட்ட இடங்களை நிரப்புக' ரீதியில் போர்டில் எழுதிப்போட்டு விட்டால், தீர்ந்தது கதை! இப்படித்தான், 'கீப் கொயட்' என்று அதட்டிய ஒரு ஓய்வுபெற்ற பள்ளி ஆசிரியரை எங்கள் மாணவன் கேட்டே விட்டான், "நாங்கள் எல்லாம் ஆங்கிலத்தில் தானே பேசிக் கொண்டிருக்கிறோம்? அதற்காகத்தானே பணமும் கட்டியிருக்கிறோம்? ஏன் 'கீப் கொயட்' என்று அதட்டுகிறீர்கள்?" என்று!

***யாருக்கெல்லாம் ஆங்கிலம் ஒரு பிரச்னையாக இருக்கிறது...***

எங்களிடம் ஆங்கிலம் கற்க வருபவர்களில் 60 சதவிகிதம் குடும்பத் தலைவிகள் தான். இவர்கள் கற்றுக் கொள்ள வருவதற்கு முக்கியமான காரணம்? குழந்தைகளின் பாடங்களில் வரும் சந்தேகங்களைத் தீர்ப்பதற்காக.

டியூஷன் டீச்சரிடம் அனுப்ப, பல தாய்மார்களுக்குக் கட்டுப்படியாவதில்லை என்பது ஒன்று.

குழந்தை ஏதாவது சந்தேகம் கேட்கும் பொழுது, 'தெரியவில்லை' என்று சொல்ல இவர்களுக்குக் கூச்சமாய் இருக்கிறது என்பது இன்னொன்று. இப்படித்தான், 'bathing' என்று வார்த்தையைக் காட்டி, ஒரு குழந்தை அம்மாவிடம் 'இது என்ன?' என்று கேட்டிருக்கிறது. அவரும் 'பாத்திங்' என்று தெரியாமல் சொல்லிவிட்டார். மாலை, பள்ளியிலிருந்து திரும்பி வந்த குழந்தை "அம்மா! உனக்குத் தெரியவில்லை என்றால் சும்மா இருக்க வேண்டியதுதானே... ஏன் தப்புத் தப்பாகச் சொல்லித் தருகிறாய்... அது 'பாத்திங்' இல்லை, 'பேதிங்' என்று சொல்ல, அன்று மாலையே இங்கு வந்து வகுப்பில் சேர்ந்து விட்டார் அந்தப் பெண்மணி.

மூன்றாவது, பேரன்ட்-டீச்சர் மீட்டிங்குக் கெல்லாம் போகும்பொழுது, டீச்சர்களுடன் உரையாட, இதர பெற்றோர்களுடன் பேச, இவர்களுக்கு ஆங்கில அறிவு அத்தியாவசியமாகிவிடுகிறது.

அடுத்து, மாணவர்கள்.

ஆங்கிலத்தை ஒரு பாடமாக +2 வரை படித்த மாணவர்கள் எத்தனை பேர் இங்கு சேருகிறார்கள் தெரியுமா? ஸ்பெல்லிங் முதற் கொண்டு மனப்பாடம் செய்தே +2 பாஸ் பண்ணிவிட்ட மாணவன் ஒருவனை, அவனின் தந்தை இங்கு கொண்டு வந்து சேர்த்தார். எந்த கோர்ஸுக்கு என்று நினைக்கிறீர்கள்? சொன்னால் நம்ப மாட்டீர்கள், லெவல்-1 கோர்ஸுக்கு. அதாவது, ஆங்கில எழுத்துகளை அறிமுகப்படுத்தும் கோர்ஸுக்கு!

அதுமட்டுமல்ல, காலேஜ் படிப்பை முடித்த இளைஞர்கள் கூட, கம்பெனி இன்டர்வியூக்களில் ஆங்கிலத்தில் சரியாகப் பதில் சொல்லத் தெரியவில்லை என்று இங்கு வந்து சேர்கிறார்கள். எழுத்தாளர் சுஜாதா ஒரு கம்பெனியில் நிர்வாகியாக இருந்தபொழுது, இன்டர்வியூ செய்து கொண்டிருந்திருக்கிறார். நடுவில், "Go ahead" என்று அவர் சொல்ல, மாணவன் ஃபைலை எடுத்துக் கொண்டுப் போயே போய் விட்டானாம்! அவனைத் திரும்ப அழைத்து, "Go ahead என்றால் மேலே சொல் என்று அர்த்தம்" என்று விளக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டதாம்.

குடும்பத் தலைவிகள், மாணவர்கள் போக, பாண்டி பஜார் பிளாட்ஃபாரமில் கடை போடுகிறவர்கள் முதல் ஆட்டோ ஓட்டுனர்கள் வரை பலர் இங்கு வருகிறார்கள். இன்னும் சொல்லப்போனால், ஆட்டோ ஓட்டுனர்களுக்கு என்று தனியாக கோர்ஸே நடத்துகிறோம். இதற்காகவே மூன்று ஆட்டோ ஓட்டு

னர்களின் உதவியோடு, பயணிகளிடம் என்ன வெல்லாம் பேச வேண்டி வரும் என்று ஆராய்ந்து ஸ்டடி மெட்டீரியல் தயார் பண்ணினோம். காரணம் அவர்களிடம் போய், 'அட்வர்ப்', 'நௌன்' என்றெல்லாம் பேச ஆரம்பித்தால் பயந்து விடுவார்கள். அதெல்லாம் தேவையுமில்லை.

ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் பலதரப்பு மக்களுக்கும் ஏற்படு வதைப் பார்த்தீர்களா?

***ஆங்கிலம் கற்றுக் கொடுப்பதில் சிரம மான விஷயம் என்று நீங்கள் நினைப்பது...***

ஆங்கிலத்தைப் பேச கற்றுக் கொடுப்பது தான். அதாவது, ஸ்போக்கன் இங்கிலீஷைக் கற்றுக் கொடுப்பது.

நாங்கள் மூன்று விதமான கோர்ஸ்கள் வைத்திருக்கிறோம்.

1) ஆங்கில எழுத்துக்களே தெரியாதவர் களுக்கு...

2) எழுத்துக்கள் தெரியும், வார்த்தைகள் தெரியும், ஆனால் வாக்கியங்கள் அமைக்கத் தெரியாதவர்களுக்கு...

3) ஆங்கிலம் எழுதப்படிக்கத் தெரிந்தவர் கள், ஆனால் சரளமாகப் பேச இயலாதவர் களுக்கு...

இந்த மூன்றாவது கோர்ஸில் சேருபவர்களுக்கு வகுப்பு நடத்து வது சாதாரணமான விஷயமே இல்லை!

பேச்சு சரளமாக வர வேண் டும் என்றால் ஒருவர் பேசிக் கொண்டே இருக்க வேண்டும். ஆகையால், அவர்களுக்குப் பேச நிறைய சந்தர்ப்பம் கொடுத்துக் கொண்டே இருப்போம். ஆனால், எத்தனை சந்தர்ப்பம் கொடுத்தாலும் சாமான்யமாகப் பேச மாட்டார்கள். ஆங்கிலம் பேசக் கற்றுக் கொண்டுவிட வேண்டும் என்றுதான் ஆர்வத் தோடு வருகிறார்கள். நாங்களும் அதே ஆர்வத்துடன்தான் சொல்லிக் கொடுக்கிறோம். பிறகு, பேசா விட்டால் எப்படி? "என்ன பண்ணுவீர்களோ தெரி யாது, நாளைய வகுப்பில் நீங்கள் பேசியே ஆக வேண்டும்!" என்று சொன்னீர்களோ, அடுத்த நாளி லிருந்து வகுப்பிற்கு வருவதையே நிறுத்தி விடுவார்கள்.

"இது ஒத்திகை பார்க்கும் இடம்தான், மேடை அல்ல; தவறுகளைத் திருத்திக் கொள்ளும் இடம்தான், தவறுகள் செய்யக்கூடாத இடம் அல்ல; பெரிய பெரிய பாடகர்கள் எல்லாம் கூட, கச்சேரி அன்று காலை சாதகம் பண்ணு வதில்லையா? கிரிக்கெட் வீரர்கள் மேட்சுக்கு முந்தின நாள் நெட்டில் பிராக்டீஸ் செய்வ தில்லையா? தேர்ச்சி பெற்றவர்களே ஒத்திகை செய்யும் பொழுது, ஆரம்பநிலையில் இருக் கும் நீங்கள் ஒத்திகை பார்க்கத் தயங்கினால் எப்படி?" என்றெல்லாம் பல உதாரணங்கள் சொல்லிப் புரிய வைத்து, அவர்களைப் பேச வைப்பதுதான் என் அனுபவத்தில் பெரிய விஷயமாகக் கருதுகிறேன்.

ஆனால் இந்த உழைப்புக்கு பலன் இல்லா மல் இல்லை. விவேகானந்தாவில் சேர்ந்தால் எப்படியும் ஆங்கிலம் பேச வைத்துவிடுவார் கள் என்கிற நம்பிக்கை எல்லோருக்கும் ஏற் பட்டிருக்கிறது. அதற்கு, இறைவனுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்.

**— கிருஷ்ணா சிதம்பரம்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

• டப்பிங் டெக்னாலஜி...



✉ ஒரு மகனின் ஏக்கம், ஒரு அப்பாவின் தியாகம், ஒரு கடிதத்தால் வெளிப்பட்டன. குரு அரவிந்தன், மனித உணர்ச்சிகளை அழகாய்க் காட்டியிருக்கிறார்.
கரூர்-4, ராஜம்.

✉ ஓட்டுப்போட விரும்பாத வாசகர் பற்றிய கேள்விக்கு தராசின் பதில் அருமை! ஓட்டுப் போடாத 50 சதவீதத்தினர் இதைப் படித்து உண்மையை உணர்ந்தால் தான் ஜனநாயகம் முழுமையாக வெற்றி பெறும்.
சிதம்பரம்,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'நான் திமிர் பிடித்தவனா?' – தேசிய விருது பெற்ற இயக்குநர் சேரனின் மனம் திறந்த பேட்டி சிறப்பாக இருந்தது.
திருப்பூர்,
பி. சிவக்குமார்பிரபு.

✉ வைகோவுக்கு மூணு பக்கம், கலைஞருக்கு மூணு பக்கம், ஜெயலலிதாவுக்கு மூணு பக்கம், மனோரமாவுக்கு மூணு பக்கம். இப்போது உங்களை யாரும் யாருக்கும் சப்போர்ட் பண்றதா சொல்ல மாட்டாங்க... உலகளாவிய நடுநிலைவாதி மனுநீதிச் சோழனாகி விட்டீர்கள்!
நெய்விளக்கு,
கருப்பம்புலம் சித்திரவேலு.




✉ ஜெயலலிதாவின் வெற்று முழக்கத்தை எதிர்த்து படைக்கப்பட்ட தங்கள் தலையங்கம் குழம்பிப் போயிருக்கும் வாக்காளர்கட்குத் தெளிவான பாதை காட்டுகின்ற கலங்கரை விளக்கமென ஒளிர்கிறது!
இனாம் மணியாச்சி,
ச.ஆ. கேசவன்.

✉ தி.மு.க.வின் தேர்தல் அறிக்கையையும், அ.தி.மு.க. தேர்தல் அறிக்கையையும் ஒப்பிட்டு எழுதப்பட்ட தலையங்கம், ஒவ்வொரு வாக்காளரும் கவனத்தில் கொள்ளத்தக்கது. பணப் புழக்கம் பற்றிய விளக்கம் அருமை!
மொரட்டுப்பாளையம்,
க.நா. இராஜேஸ்வரன்.

✉ எனது வேண்டுகோள் மீது, ('பாவம் பெண்ணென்று விருது கொடுப்பதா?' கட்டுரை) ஜெயகாந்தன், இந்திரா பார்த்தசாரதி, திலகவதி, ஆண்டாள் ப்ரியதர்ஷினி ஆகியோர் மட்டுமின்றி, புலம் பெயர்ந்த தமிழ்ப் படைப்பாளிகளும் வாசகர்களும் தமது கருத்துக்களைக் 'கல்கி'யில் வெளியிட வேண்டும் என்பது, என் அவா...
நெல்லை-6, தி.க.சிவசங்கரன்

## 'இனிமேல் ஆரம்பம்'...

✉ காதலனுக்காக காதலையே தியாகம் செய்யும் ஒரு புதுமைப் பெண்ணாக ப்ரீத்தி ஒரே சமயத்தில் நம் பாராட்டையும் அனுதாபத்தையும் அள்ளிக்கொண்டு போய்விட்டாள். காதல் தோல்வியையும் பாஸிட்டிவ்வாக மாற்றி முன்னுக்கு வருவேன் என்ற ப்ரீத்தியின் வார்த்தை இன்றைய இளைஞர்களுக்கு ஒரு நல்ல பாடம்.
திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

✉ 27 வாரங்களும் போனதே தெரியவில்லை. ப்ரீத்தி பாத்திரம் இனிமையானது. துள்ளலானது.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ தொடரின் முடிவு வெகு யதார்த்தம்! அத்தொடருக்கான அரஸ்வின் ஓவியங்கள் வெகு நயம்!
சென்னை – 93,
எஸ். சையது முகமது

வட்டமேஜை

# "ஜெயலலிதா முதலமைச்சராக முடியவே முடியாது!"



## வழக்கறிஞர் விஜயன் பேட்டி

"தேர்தல் கமிஷன் சுயேச்சையான, முழு அதிகாரம் பெற்ற ஓர் அமைப்பு. அதனால்தான் கட்சி வித்தியாசமில்லாமல், அனைவரும் அதைக் கண்டு நடுங்குகிறார்கள். நிலைமை இப்படி இருக்கும்போது, கருணாநிதி அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து, தம்மைத் தேர்தலில் போட்டியிட விடாது சதிசெய்துவிட்டதாக ஜெ. பொய்ப் பிரசாரம் செய்வது கண்டனத்துக்குரியது மட்டுமல்ல, இந்திய தண்டனைச் சட்டம் (பிரிவு 171-ஜி), மக்கள் பிரதிநிதித்துவ சட்டம் (பிரிவு123) ஆகியவற்றின்படி தண்டனைக்குரியது" என்று சொல்லும் கே.எம். விஜயனிடம் ஒரு மினி பேட்டி...

***கேரள முன்னாள் அமைச்சர் பாலகிருஷ்ணப்பிள்ளையின் வேட்புமனு ஏற்கப்பட்டதை, தன்னுடன் ஒப்பிட்டுப் பேசி வருகிறாரே!***

ஜெயலலிதாவின் வேட்புமனு நிராகரிக்கப்பட்டது சட்டப்படியும், நியாயப்படியும் மிகவும் சரியானது. தண்டனைபெற்ற ஒருவர் எம்.எல்.ஏ. அல்லது எம்.பி.யாக இருக்கிறார் என்பதன் காரணமாக, தேர்தலில் நிற்க அனுமதிப்பது எப்படி நியாயமாகும்? அதற்கு ஏற்றபடி சட்டம் திருத்தப்பட வேண்டியது அவசியம். ஒரு தவறை மேற்கோள் காட்டி, இன்னொரு தவறை நியாயப்படுத்துவதை அனுமதிக்கவே கூடாது.

குற்றம் சாட்டப்பட்டவர்களும், தண்டனை பெற்றவர்களும் கண்டிப்பாக முதலமைச்சராக முடியாது. தற்போதைய சட்டப்படி, குற்றம் சாட்டப்பட்டவர் எம்.எல்.ஏ., எம்.பி. ஆக முடியும். அதனால்தான், அ.தி.மு.க.வைச் சேர்ந்த செல்வகணபதி எம்.பி.ஆக முடிந்தது. அதே நேரம், வழக்கில் தண்டனை பெற்றவர், மந்திரியாக முடியாது. முதலமைச்சராக முடியாது. இந்த அடிப்படையில்தான் சட்டசபையில் மெஜாரிடி இருந்தும்கூட, லல்லு பிரசாத் யாதவ், முதல்வர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. பூட்டாசிங், சேடப்பட்டி முத்தையா என்று பல உதாரணங்கள் சொல்லலாம். இப்படிப்பட்ட சூழ்நிலையில், எத்தனை மூப்பனார்கள், வீரமணிகள் ஜால்ரா போட்டாலும், ஜெயலலிதாவால், பதவிப்பிரமாணம் எடுத்துக் கொள்ளவே முடியாது.

***தேர்தலில் அ.தி.மு.க. மெஜாரிடி பெற்றால், தனது நம்பிக்கைக்குரிய ஒருவரை முதல்வராக்கிவிட்டு, தன் மீதுள்ள கேஸ்கள் அனைத்தையும் வாபஸ் பெற வைத்து, அதன் பின், தேர்தலில் போட்டியிட்டு, ஜெயலலிதா முதல்வர் ஆவார் என்றும், முதல்வர் பதவி ஏற்று ஆறுமாதங்களுக்குள் தேர்தலில் போட்டியிட்டு ஜெயித்தால் போதும் என்பதன் அடிப்படையில், ஐந்து மாதம், 29 நாட்களுக்குப்பின் ராஜினாமா... மறுபடி பதவி ஏற்பு... இப்படியே ஐந்தாண்டுகளைக் கடத்திவிடுவார் என்றும் கூறுகிறார்களே! இதெல்லாம் சாத்தியமா?***

ஒரு தடவை கூட, அவரால் பதவிப் பிரமாணம் எடுத்துக்கொள்ள முடியாதபோது, அடுத்தடுத்து, பதவிப் பிரமாணம் என்பது கனவில் மட்டுமே சாத்தியம். அடுத்து, வழக்குகளை வாபஸ் பெறுவதும் நடக்காது. வீரப்பன் மீதான கேஸ்களை வாபஸ்பெற, கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய இரு மாநில அரசுகளும் தயாராக இருந்தன. ஆனால் அது முடிந்ததா? இல்லையே! ஆக, 'இப்படியெல்லாம் நடக்க வேண்டும்', 'இதெல்லாம் செய்துவிட முடியும்' என்று பாதிக்கப்பட்டவர்கள் ஆசைப்படலாம். கற்பனை செய்து கொள்ளலாம். ஆனால் நடைமுறையில் சாத்தியமே இல்லை.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**



‘உங்க கஸின் ஸிஸ்டர் ரேகா...’ என்று அரிகிரி அசெம்ப்ளியில் (ஜெயா) ஆரம்பித்தவுடனே, ‘கஸின் ஸிஸ்டர் இல்லே. ஹாஃப் ஸிஸ்டர்’ என்று திருத்தினார் டாக்டர் ஜெயா ஸ்ரீதர். ‘அப்படின்னா?’ என்று இவர்கள் கேட்க, ‘ஒரே அப்பா, இரண்டு அம்மா’ என்று விளக்கி, தாங்கள் சினேகமாகப் பழகி வருவதைப் பற்றியும் சொன்னார்.

அந்தக் காலத்து ஜெமினி மாதிரி (கிருஷ்ணதாசி ஜெமினி மாதிரி அல்ல) தெளிவாகவும் பளிச்சென்றும் பேசினார் புத்திரி. தென்னிந்தியர்கள் படிப்பறிவு உள்ளவர்களாக இருப்பதால் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் இங்கே சிறப்பாக அமுலாகிறது என்று கூறியவர், வடக்கே கிராம்வாசிகள் பெரும்பாலும் விவசாயத்தை நம்பியிருப்பதால் நிறையப் பிள்ளைகள் பெற்றுக் கொள்வது தொழிலுக்கு உதவி என்று நினைக்கிறார்கள் என்றார்.

அரிகிரி அன்பர்களுக்கு ஒரு அட்வைஸ். சிறப்பு விருந்தாளியாக வருபவர் ஒரு சீரியஸான பிரச்னை பற்றி சீரியஸாகச் சொல்லிக் கொண்டிருக்கும்போது அதை சீரியஸாகவே கேளுங்களேன்! ஹாஸ்யம் என்கிற பெயரில் நடுவே எதையாவது உளறி, போதாக்குறைக்கு ஒரு செயற்கையான சிரிப்புப் பின்னணியைச் சேர்த்து, பேச்சின் தொடர்ச்சியைக் கெடுத்து, ஒரு நல்ல கருத்து எடுபடாமல் செய்வதில் என்ன லாபம்? Guard your words and your words will guard you என்பது மூதுரை.

‘நாயகனு’க்குப் பிறகு கமல் அது மாதிரி ஒரு படம் தரவேயில்லை என்று சொல்வோர் பலர் உண்டு. அந்தச் சிறப்புக்குக் காரணம் கமல் மட்டுமல்ல. கதை

**வினோத்**

# ஒன்ஸ் மோர் கமல்?

தவழும் திரைக்கதையும்தான்.

ஏழை கமலும் ஏழை சரண்யாவும் ஏழைக் குடித்தனம் நடத்தும் காட்சி ஒன்றே போதும். (எஸ்ஸிவி). தரையில் உட்கார்ந்து குமுட்டி அடுப்படியில் சமையல் செய்து, கமல் வாயில் சரண்யா ஊட்ட, கமல் திருப்பி ஊட்ட, அந்தவேளை பார்த்து ஓட்டைக் கூரையிலிருந்து மழை கொட்டுகிறது. இருவரும் ஓடிப் போய் அறையின் மூலையில் ஒண்டிக் கொள்கிறார்கள். திறந்திருந்த கதவு வழியாக டஜன் கணக்கான கோழிகள் தபதபவென்று உள்ளே வந்து தஞ்சம் புக, கமலும் சரண்யாவும் சிரிக்கும் சிரிப்பில், வறுமையிலும் குதூகலமாக இருக்க முடியும் என்று காட்டுகிறது. Beyond this vale of tears there is a life above என்பது உண்மையே.

யோசித்துப் பார்க்கையில், நிஜமாகவே கமலிடமிருந்து அப்படியொரு படம் பிறகு வரவில்லை என்றே தோன்றுகிறது.

**ஒ**ண்டிக்கட்டை பேர்வழிகளுக்காகவே நெடுங்காலமாகச் சமையல் குறிப்பு வழங்கி வருகிறார் கராத்தே ஹுசைனி (ஸன்). தனக்குத் தானே பேசிக் கொள்கிற மாதிரி நமக்கும் சொல்லித் தரும் புதுமையான பாணியில் ரசம்(!) இருக்கிறது. An original writer is not one who imitates nobody, but one whom nobody can imitate என்று ஒரு பிரெஞ்ச அறிஞர் சொன்னார். அது எல்லாக் கலைஞர்களுக்கும் பொருந்தும். இவருக்கும்தான்.

'தக்காளி தோசை' செய்தபடியே அவர் பேசியதாவது:

'தக்காளியை இப்படி ஸ்லைஸ் போடணும்... எத்தனை தடவை இன்னிக்கு ஒத்திகை பார்த்தேன்... அப்பல்லாம் சரியா வந்தது. இப்ப வரலே... ஆ... இப்ப வருது. ஒண்ணு, இரண்டு, மூணு, நாலு, அஞ்சு துண்டு... இப்ப தோசை வார்த்துக்கணும். சின்னதா வார்க்கிறது நல்லது. பெரிசாய் வார்த்தால் எடுக்கிறது கஷ்டம்... வார்த்தாச்சா?... இப்ப நாலு தக்காளி ஸ்லைஸ்களை இப்படி ஓரமா வைத்து, நடுவே ஒண்ணு... இவ்வளவுதான்... தொட்டுக்க? சட்டினி நல்லா இருக்கும். ஆனால் கிரைண்டரிலே சட்டினி செய்யறதெல்லாம் நம்மைப் போல பிரம்மசாரிகளுக்கு முடியாது... ஜீனி தொட்டுக்கலாம்... ஜீனி... ஜீனி டப்பா எங்கே?... பரவாயில்லே... ஊறுகாய் இருக்கு. இப்ப தோசையை விண்டு...?

தோசை விள்ளலை வாயில் போட்டுக் கொண்டு 'ஆகா' என்று அவர் நாக்கைச் சப்புக் கொட்டியபோது, நாமும் ஒரு துண்டு வாயில் போட்டுக்கொண்டு ருசித்த மாதிரி இருந்தது.

**பி**க்காஸோவின் சில ஓவியங்கள் விற்பனைக்கு வந்திருப்பதாக ஸன் நியூஸில் செய்தி சொல்லி, சில ஓவியங்களையும் காட்டினார்கள். அவற்றில் ஒன்று, கால் இருக்க வேண்டிய இடத்தில் கண், தலை இருக்க வேண்டிய இடத்தில் கை, முகம் இருக்க வேண்டிய இடத்தில் முதுகு என்று எதுவுமே புரியாத வடிவத்தில் இருந்தது. படத்தைத் தலைகீழாக மாட்டியிருப்பார்களோ என்ற சந்தேகம் கூட உதித்தது. பிறகுதான் பிக்காஸோவே முன்பொருமுறை சொன்ன பிரபலமான வாக்கியம் ஞாபகம் வந்தது. அது –

I paint objects as I think them, not as I see them.



* 'அரிகிரி' பாஸ்கி

# ராமதாஸ் குறிவைக்கும்

விழுப்புரம், பண்ருட்டி சாலையில் உள்ள திமுக. தேர்தல் அலுவலகம் பரபரப்புடன் இருக்கிறது. "எங்கள் அமைச்சரின் (பொன்முடி) வெற்றி உறுதியாகி விட்டது; ஆனால் மாவட்டத்திலுள்ள பன்னிரண்டு தொகுதிகளிலும் வெற்றிக் கொடி நாட்ட முனைந்து கொண்டிருக்கிறார் அமைச்சர்" என்கிறார் பொய்யம்பாக்கம் அருணாசலம்.

விழுப்புரம் தொகுதியில் கோலியனூர் மற்



• பொன்முடி

றும் காணை ஊராட்சி ஒன்றியங்கள் இருக்கின்றன. மொத்தம் 69 ஊராட்சிகள். தவிர விழுப்புரம் நகராட்சிப் பகுதியும் தொகுதியில் அடங்கியுள்ளது. ஒவ்வொரு கிராமத்திற்கும் பிரசாரத்திற்குச் செல்லும் அமைச்சர் முதலில், தாம் அந்தக் கிராமத்திற்குச் செய்துள்ள பணிகளைச் சொல்லிவிட்டுத்தான் வோட்டு கேட்கிறார்.

"அமைச்சர் வன்னியர்களுக்கு எதிரானவர் என்ற பொய்ச் செய்தியைப் பரப்புகிறார்கள் பா.ம.கவினர். ஆனால் அமைச்சர் ஜாதி வித்தியாசம் பார்ப்பதில்லை. இன்னும் சொல்லப் போனால் கடந்த ஐந்து வருடங்களில் அமைச்சர் சிபாரிசில் வேலை வாய்ப்பு பெற்றவர்கள் பெரும்பாலும் வன்னியர்கள்தான்" என்கிறார் கண்டம்பாக்கம் கலியமூர்த்தி.

டாக்டர் ராமதாஸ், கடந்த சில மாதங்களாகவே தம்மைச் சந்திக்கும் பத்திரிகையாளர்களிடம் சொல்லும் திறந்த ரகசியம் 'எப்பாடுபட்டேனும் பொன்முடியைத் தோற்கடித்தே தீருவோம்' என்பதுதான். அதற்காக டாக்டர் கண்டெடுத்த வேட்பாளர் பசுபதி.

பசுபதி ஒரு காலத்தில் பொன்முடியின் சிஷ்யராக இருந்தவர்தான். "இந்தத் தொகுதியில் ஒரு தொழிற்சாலை கூட கொண்டுவரவில்லை. வீட்டு மனைப்பட்டா கொடுக்கப்படவில்லை. கோலியனூர் கால்வாய்த் தூர் எடுப்



• ராம்தாஸ்

பால் மக்கள் பாதிப்பு. புதிய பஸ் நிலையத்தை ஊருக்கு வெளியே கட்டியதால் பழைய பஸ் நிலையத்திலுள்ள கடைக்காரர்கள் வியாபாரம் பாதிக்கப்பட்டிருக்கிறது" என்று பிரச்னைகளை அடுக்குகிறார் பசுபதி.

இவை தவிர பொதுவான அரசு எதிர்ப்பு, மக்கள் அதிருப்தி போன்றவை தங்களுக்குச் சாதகமாக இருக்கும் என்று நம்புகிறது பா.ம.க.

புதிய பஸ் நிலையம் கட்டியதும் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் கட்டியதும் நடுநிலை மக்களிடம் அமைச்சருக்கு ஆதரவைப் பெற்றுத் தந்திருக்கிறது. விழுப்புரம் சாரதா வித்யாலயா தாளாளர் ராஜேந்திரன்,

"தமிழ் நாட்டில் நான் எங்கே போனாலும், விழுப்புரம்காரர்கள் கொடுத்து வைத்தவர்கள். பிரம்மாண்டமான பஸ் நிலையம். சந்து பொந்துகளில் கூட சிமெண்ட் சாலைகள் என்று சொல்லும்போது பெருமையாக இருக்கிறது" என்கிறார். நகரிலுள்ள அங்கீகரிக்கப்படாத லே-அவுட்டுகளிலும் அமைச்சர் வசதி செய்து தர வேண்டும் என்று வேண்டுகோள் வைக்கிறார் அவர்! 69 ஊராட்சிகளிலும் தாம் செய்துள்ள சாதனைகளைப் புத்தகமாகப் போட்டிருக்கிறார் அமைச்சர்!



• தினகரன்



• அருணாசலம்



• பசுபதி



• கலியமூர்த்தி



• ராஜேந்திரன்

# பொன்முடி!

வன்னியர்கள் அனைவரும் பா.ம.க. ஆதரவாளர்கள் என்பதைத் திட்டவட்டமாக மறுக்கிறார் பிடாகம் கிராம ஊராட்சித் தலைவர் தினகரன். "எங்க கிராமத்தில் பெரும்பாலும் வன்னியர்கள்தான். ஏராளமான வசதிகளை எங்களுக்குச் செய்திருக்கிறார் அமைச்சர். 150 குடும்பத்துக்குச் சமையல் வாயு பெற மான்யம் கூடத் தரப்பட்டுள்ளது. அமைப்பு சாரா ஊழியர்களுக்கு வாரியம் அமைத்து வசதிகள் செய்து கொடுத்ததால், பெரும்பாலான சுயதொழில் செய்பவர்கள் இந்த முறை உதயசூரியனுக்குத்தான் வோட்டுப் போடுவார்கள்" என்கிறார். தொகுதியில் தலித் மக்கள் கணிசமாக இருந்தாலும் விடுதலைச் சிறுத்தைகள் அமைப்புரீதியாக இல்லை. "தலித் மக்கள் பெரும்பாலும் அ.தி.மு.க. ஆதரவாளர்கள்தான். இது தவிர வன்னிய மக்களின் ஒட்டுமொத்த ஆதரவும் எங்களுக்குத்தான்" என்று பசுபதி சொன்னாலும், "வெற்றிக் கனி தங்கள் மடியில் விழுந்து விட்டதாகவே சொல்கிறது தி.மு.க. அணி. "அமைச்சர் செய்துள்ள சாதனைகளின் அடிப்படையில் நாங்கள் உறுதியாக வெற்றி பெறுவோம்" என்கிறார்கள் அவர்கள்.

"பா.ம.க. இந்த மாவட்டத்தில் மேல்மலையனூர் செஞ்சி ஆகிய தொகுதிகளில் 1999 பாராளுமன்றத் தேர்தலில் அதிக வாக்குகள் பெற்றது. ஆனால் அந்தத் தொகுதிகளை ஜெயலலிதா எடுத்துக் கொண்டு பா.ம.க.வுக்குச் செல்வாக்கில்லாத விழுப்புரம், சங்கராபுரம் போன்ற தொகுதிகளைக் கொடுத்துள்ளார். அவர்கள் தோல்வியடையப் போவது உறுதி. இந்த முறை விழுப்புரம் தொகுதியில் மட்டுமல்ல; தமிழ்நாடு முழுவதும் பெண்களின் ஆதரவு எங்களுக்குத்தான்" என்கிறார் அமைச்சர் பொன்முடி.

அமைச்சரின் பாதையில் வெற்றி விளக்கு எரிவது தெரிகிறது. ஆனால் பா.ம.க. 'வன்னியர் வோட்டு அந்நியருக்கில்லை' என்ற கோஷத்தை உரக்க எழுப்பி வருமானால் அமைச்சர் கடுமையாகப் போராட வேண்டியிருக்கும்.

— தில்லப்பா

படங்கள் : வெங்கடேஷ்

# ஹீரோ சிதம்பரம்!



இந்தத் தேர்தலின் ஹீரோ யார்? சந்தேகமில்லாமல் ப. சிதம்பரம்தான். தம் தலைவர் தடுமாறிவிட்டாலும், தாம் தடுமாறாமல், இருபது நாட்களில், நூற்றுக்கும் மேற்பட்ட கூட்டங்களில் பேசி, நல்லாட்சி தொடர வேண்டுமென்று முழங்கி, தமது ஜனநாயகக் கடமையை ஆற்றியிருக்கிறார் அவர். வாக்குச் சாவடிக்குப் போகும் முன் சிதம்பரம் சிந்திய முத்துக்களை ஒரு முறை படித்து, சிந்தித்து வாக்களிக்க வேண்டியது நம் கடமை.

★ அரசியலை வெறுக்காதீர்கள். ஒரு நாட்டை ஆக்கவும் அழிக்கவும் சக்தி பெற்றது அரசியல். அரசியல் கட்சிகளோ தேர்தலோ இல்லாமல் நாட்டில் ஜனநாயக ஆட்சி முறை ஏற்படாது. வாக்குச் சாவடிக்குப் போவதும் வாகளிப்பதும் உங்கள் ஜனநாயகக் கடமை!

★ திட்டம், செயல்பாடு, திறமை, கட்டமைப்பு வேலைகள், நேர்மை ஆகிய அளவுகோல்களை மட்டுமே வைத்து தி.மு.க. ஆட்சியையும் அதற்கு முன்பு நடைபெற்ற அ.தி.மு.க. ஆட்சியையும் ஒப்பிட்டுப் பாருங்கள். எந்த ஆட்சி வர வேண்டுமென்று நீங்களே உணர்வீர்கள்!

★ ஜெயலலிதாமீது போடப்பட்ட மூன்று வழக்குகளும் பொய் வழக்குகளா? அவருக்கு தண்டனை வழங்கிய நீதிபதிகள் நியாயமாக நடந்து கொள்ளவில்லையா? நீதிமன்றங்களைவிட மக்கள் மன்றம்தான் பெரிது என்றால் நீதிமன்றங்கள் எதற்காக? எல்லாவற்றையும் கலைத்துவிட்டு மக்கள் மன்றத்திலேயே வைத்து முடிவு செய்து கொள்ளலாமே!

★ தமிழ்நாட்டு முதல்வராக வர விரும்பும் ஜெயலலிதா துரதிர்ஷ்டவசமாக அந்தப்பதவிக்கு வந்து விட்டால் "சொத்துக் குவிப்பு வழக்குக்காக முதல்வர் குற்றவாளி கூண்டில் ஏறி நிற்கிறார்" என்பது நமக்குப் பெருமை தரும் செய்தியா? தமிழ்நாட்டின் தன்மானம் என்னாவது?

★ "யார்தான் ஊழல் செய்யவில்லை?" என்று ஊழல்வாதிகளை நியாயப்படுத்தும் போக்கு வெறுக்கப்பட வேண்டியது. ஊழல் செய்யாதவர்கள் இருக்கிறார்கள், ஒழுக்கம் உடையவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கையில் ஆட்சி இருப்பதுதான் நல்லாட்சிக்கு உத்தரவாதம்!

★ 'என்னைப் பழி வாங்குகிறார்கள்!' என்று தன்னை மட்டுமே முன்னிலைப்படுத்தி பேசுகிறாரே தவிர, தமிழ்நாட்டு மக்களின் எதிர்காலத்தைப்பற்றியோ அவர்களின் முன்னேற்றத்தைப் பற்றியோ ஜெயலலிதா பேசுவதேயில்லை. சிந்தியுங்கள்!

★ பல்வேறு அம்சங்களில் முன்னேறிய முதல் மூன்று மாநிலங்களில் ஒன்றாக தமிழ்நாடு உயர்ந்திருக்கிறது. காரணம், கருணாநிதியின் தொலைநோக்குப் பார்வை. தி.மு.க. தேர்தல் அறிக்கையில் குறிப்பிடப் பட்டுள்ள திட்டங்கள் நிறைவேறினால் தமிழ்நாடு மேலும் முன்னேற்றமடையும் என்பது நிச்சயம். அதற்கு வழிவகுப்பது நம் கையில் தான் இருக்கிறது!

- கௌசி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editer : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka



**"என் குழந்தைக்கு, சரியான அளவில், இன்றியமையாத ஊட்டச்சத்து அளிக்கப்படவேண்டும்.**

# அதனால்தான், நான் செரிலாக்கை நம்புகிறேன்."

"என் குழந்தைக்கு, 4 மாதங்கள் முடிந்தவுடன், அவனுக்கு எந்த திட உணவைப் புகட்டத் தொடங்குவது என்று, உண்மையிலேயே நான் யோசிக்கலானேன். வெறுமனே திட உணவு மட்டும் போதுமானது ஆகாது. குழந்தை ஆரோக்கியமாகவும், வலுவாகவும் வளர்ச்சியடைய, சமச்சீரான அளவில் ஊட்டச்சத்துக்கள் நிறைந்த திட உணவு தேவைப்படுவதாம், என் மருத்துவர் கூறினார். எனவேதான், நான் செரிலாக்கைப் புகட்டத் தொடங்கினேன்."

**செரிலாக் எளிதில் சீரணிக்கத்தக்க, சமச்சீரான போஷாக்கு :**



செரிலாக் தேவையான ஊட்டச் சத்துக்களை, சரியான அளவில் வழங்குகிறது. இயற்கையான புரதச்சத்துக்கள் நிறைந்த, பால் மற்றும் கோதுமை கொண்டு தயாரிக்கப்பட்ட செரிலாக்கில், கார்போஹைட்ரேட்டுகளும், கொழுப்புச் சத்துக்களும் கூட அடங்கியுள்ளன. அத்துடன், அத்தியாவசியமான விட்டமின்களும், தாதுப் பொருட்களும் இதில் நிரம்பியுள்ளன. இதனால் உங்கள் குழந்தைக்கு, ஒவ்வொரு முறையும் சமச்சீரான உணவு கிடைக்கிறது.

**சீரணிப்பது எளிது, விதவிதமான பல சுவை உணவுகள் :**

நெஸ்லேயின் புரட்சிகரமான 'ஜெட்-குக்கர் என்ஸைமேடிக் தொழில்நுட்பம், கார்போஹைட்ரேட்டுகளை எளிதில் சீரணிக்க உதவுகிறது. இதனால் மிருதுவான செரிலாக்கை, உங்கள் குழந்தை, எளிதில் சீரணிக்க முடிகிறது.




செரிலாக்கின் சுவையை, குழந்தைகள் மிகவும் விரும்புகின்றன. 6 மற்றும் 8 மாதங்களுக்கு இடையேயான காலத்தில், செரிலாக் வீட் மற்றும் செரிலாக் ரைஸ்* ஆகியவற்றிலிருந்து ஒன்றைத் தெரிந்தெடுங்கள். பின்னர் பார்த்து மகிழுங்கள் உங்கள் குழந்தையின் மகிழ்ச்சிக் கும்மாளத்தை!

Mudra:NES:1543 Tam (R):1

* [illegible] செரிலாக் ஆப்பிள், செரிலாக் ஆரஞ்சு, செரிலாக் வெஜிடபிள், செரிலாக் ஜூனி மற்றும் செரிலாக் ரைஸ் [illegible]

**உங்கள் குழந்தைக்கு செரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்.**

**IMPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.**

**महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें।**